- First Edition: November 2020
- Pages: 224
- Price: INR 225

Designed by **Chandru**

Published by

**Knowrap Imprints**

No.19/5, Navaratnam, Rukmani Road,

Besant Nagar, Chennai - 600 090.

Phone: +91 9790919982

Email: mail.knowrap@gmail.com

ISBN 978-81-943030-2-2

## அர்ப்பணிப்பு

— என்னை வளர்த்த, இன்னும் வளர்த்துக் கொண்டிருக்கும் இந்த சமூகத்திற்கு

## நன்றி

— தமிழில் மொழிபெயர்க்க ஊக்குவித்த என் நண்பர்களுக்கும், அணிந்துரை எழுதித் தருவதற்காக பெற்ற நூலை, நேரமெடுத்து அணிந்துரை மட்டுமல்லாது அக்கறையுடன் மொழித் திருத்தங்களும் செய்து அனுப்பி வைத்த முனைவர் நா.நளினி தேவி அம்மாவுக்கும், வாசிப்பு என்று வந்துவிட்

டால், அதற்குத் தன்னைக் கொடுத்து, சாதகவா தம் என்பதற்கே இடமில்லாமல் எழுத்தின் கருவை எழுதியவரைவிட அதிக ஆழத்திற்குள் சென்று பய ணித்து, அதன் அனுபவத்தை அழகாக பகிரும், தமிழ் காதலன், முனைவர் தமிழ்மணவாளன் அவர் களுக்கும், எப்பொழுதும் போல் இம்முயற்சியிலும் விடாமல் என்னுடன் பயணித்து, இந்தப் புத்த கத்தை வடிவமைத்து கொடுத்த என் தோழன் சந் துருவுக்கும்.

"கலவி கொள்ளும் சமயத்தில், நீ ஒரு முறையேனும் சிரிக்கவில்லையெனில், நீ தவறான மனிதருடன் உறவு கொள்கிறாய்!"

— Extramadness.com

"ஒரு திருமண வாழ்வு சிறப்பாக அமைய பாலுறவு தாண்டியும் நிறைய விஷயங்கள் தேவைப்ப டுகன்றன; ஆனால் அது இல்லாமல் எந்தத் திருமணமும் சிறப்பாக அமைய வாய்ப்பில்லை!"

— Davewilliams.org

"பாலுறவு என்பது திருமண வாழ்வில் ஒரு முக்கிய பகுதி என நீ நினைக்கவில்லையானால், உனக்கு முக்கியமில்லாத அந்த பாலுறவை, உனக்கு விருப்பமில்லாத அதை, உன் கணவனோ மனைவியோ மற்றவருடன் கொள்வதில் உனக்கு ஆட்சேபனை இருக்க கூடாது!"

— Dan Savage

# உறைந்து சில்லிட்ட பனிக்கட்டி உடையும்; உருகும்!

— முனைவர் தமிழ்மணவாளன்,
கவிஞர், எழுத்தாளர்

இருத்தல் என்பதே வாழ்வின் அடிப்படைத் தேவையாக இருக்கிறது. அதனை இரண்டு விதமாகப் பார்க்கவிய லும். ஒன்று Mere Existense மற்றொன்று Survival of the Fittest. குறைந்தபட்ச இருப்பை ஊர்ஜிதப்படுத் திக்கொள்வதும் இயக்கத்தின் ஊக்கத்தில், இருப்பின் தன்மையை உறுதிப்படுத்திக் கொள்வதுமாக. இருப் பின் இடமாக அல்லது அடையாளமாக நாம் கருதுவது இருக்கை. அது நம்மின் இயங்கு தளத்தின் விரிவை ஆழத்தை விளைவாய் அமையும் உயரத்தைக் காட் டுவதாகிறது. இருக்கை, இலக்காகவும் மிகப்பெரும் பயணத்தின் அடைதலாகவும் உள்ளது. இத்தகைய முக் கியத்துவத்தோடு இருக்கையை அணுகும் மனத்திறப் போடு,"கழிவறை இருக்கை", என்பதை உணர்வதெப் படி.

"கழிவறை இருக்கை", என்னும் தலைப்பில் ஒரு கட் டுரை நூல். முப்பத்தியிரண்டு கட்டுரைகள். எழுத்தா ளர் லதா எழுதியிருக்கும் கட்டுரைகளை முன்வைத்து, முன்னுரையொன்றை வழங்கும் பொருட்டு வாசித்த போது, "கழிவறை இருக்கை", என்னும் படிமம் பன்மு கங்கள் கொண்டதாக இருப்பதைப் புரிந்து கொள்ளமு டிகிறது. அதன் ஸ்தூல இருப்பு உருவாக்குவதும் அதன் பயன் பாடும் பயன் படுத்தும் மனத்தின் தன்மையும்

வெவ்வேறாக. தன் முன்னுரையில், தலைப்புக்குக் கார ணம் சொல்கிற போது ஆசிரியர் இதிலொன்றைக் குறிப் பிடுகிறார்.

நான் மேலதிகமான குறியீட்டை உணர்கிறேன். கழி வறை இருக்கையை இன்ன பிற இருக்கைகளோடு ஒப் பிட்டுப் பார்க்கிறேன். ஏற்கனவே குறிப்பிட்டது போல் இருப்பின் சிறப்பு அடையாளமாக இருக்கை அமை கிற போது அது உருவாக்கும் அர்த்த உடன்பாடுக ளும் முரண்பாடுகளும் தவிர்க்கவியலாதவை. பொது வாக இருக்கைகளில் அமரும் போது உருவாகும் மன வெழுச்சி எழும் போது இருப்பதில்லை. காரணம், இருக் கைகள் வெறும் இருக்கைகள் அல்ல. வாழ்க்கையில் இதுவரை நாம் பயணித்த அடையாளம். அதன் பய னின் விளைவு. அதிகாரம் மற்றும் வசதியின் குறியீடு. கழிவறை இருக்கையில் இருந்து எழுகிறபோது மட்டும் தான் அமரும் போது இருந்த மனநிலையினும் ஆசுவா சமான இலகுவான மனநிலையைப் பெறமுடிகிறது. இது ஏதோ கழிப்பறைச் செயல்பாட்டு விளக்கமல்ல. வாழ் வில் நான் புரிந்து கொள்ள வேண்டிய புறந்தள்ள வேண் டிய அக உந்துதலின் குறியீடாகப் பார்க்கிறேன்.

அதற்கு வாழ்க்கை குறித்த விசாலமான புரிதல் கைகூட வேண்டியிருக்கிறது. வாழ்வின் எல்லா நிலையிலும் சுய சார்புச் சிந்தனையை வளர்த்தெடுக்க வேண்டியுள்ளது. அது காட்டும் வழியைத் தேர்வு செய்வதில் கூடுதல் கவனம் தேவைப்படுகிறது. ஒருவேளை பிறர் ஒப்புக் கொள்ள மறுக்கும் விதமாக முடிவுகள் இருப்பின் எதிர் கொள்ள வேண்டியிருக்கிறது. போராட வேண்டியுமிருக் கிறது. இத்தகைய செயல்பாட்டு ஊக்கத்தை வளர்த் தெடுப்பதற்கு முன்முடிவற்ற மனவிரிவை உறுதிப்படுத் திக் கொள்ள வேண்டியுள்ளது.

அந்த முன்முடிவற்ற மனத் திறப்பின் ஊடாகத் தான் இவரின் கட்டுரைகளை வாசிக்க வேண்டும். ஏனெ னில், இவர் பேசும் விசயங்கள் புதியவையல்ல. சிக்கலே அங்கு தான். எல்லா விஷயங்களும் பேசப்பட்டு பேசப் பட்டு முன்முடிவுகளால் கட்டமைக்கப்பட்டிருப்பவை. இந்தச் சமூகம் அறிந்தும் அறியாதது போல் நடித்துக் கொண்டிருப்பவை. மாற்றுக்கருத்துகள் எதனையும் ஏற் கும் வழியின்றி கெட்டிதட்டிப் போன கருத்தியல்களால் குவிந்து கிடப்பவை.

"பேசாப்பொருளைப் பேசவந்தேன்", என்று பாரதி சொல்வான்.

அப்படி, யாரும் எளிதில் பேசாத கோணத்தில் பேச, இந் தக் கட்டுரைகளில் முற்படுகிறார் என்பது முக்கியமா னது. சமூகம் பலநூற்றாண்டுகளாய் உருவாக்கி வைத் திருக்கும் கலாச்சார, பண்பாட்டுக் கூறுகளை விசார ணைக்குட்படுத்துவது அத்தனை எளிதன்று.

அதற்காக ஏதோ அதிர்வேற்படுத்தும் நோக்கில் எதிர்க் கருத்துகளை அள்ளி வீசும் எழுத்தல்ல. நிதானத்தின் கயிற்றில் நின்று நியாயத்தை தன்னளவில் உறுதி செய்த படியே இருக்கிறார்.

இது போன்ற தன்னுணர்வுப் புரிதல் சார்ந்த வாழ்வியல் சார்ந்த கட்டுரைகளைப் பலரும் எழுதியிருக்கிறார்கள். பல நல்ல கட்டுரைகளை வாசித்த அனுபவமும் எனக்கு உண்டு.

லதா எழுதியிருக்கும் கட்டுரைகளில் சில நுட்பமான புள்ளிகள் இருக்கின்றன. இவர் தொட்டுச்செல்லும் கட் டுரைப் பொருள்கள் மிகவும் கவனமாகக் கையாள வேண்டியவை. தேர்ந்த தெளிவின் நீட்சியே அத்தகைய கருத்துகளை வழங்க உதவும்.

வாழ்வின் அடிப்படைத் தேவைகளாக, உணவு, உடை, இருப்பிடம் என்று சொல்கிறோம். இந்த வரிசைக்குக் கூட காரணம் இருப்பதாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறோம். ஆனால் முதல் தேவையான உணவு என்னும் போது அதிலிருக்கும் ஒட்டுமொத்தப் புரிதலில் இருந்து விலகும் சமூகத்தைத் தான் கட்டமைத்திருக்கிறோம். நான்காவது தேவையாக இவற்றினும் முக்கியமான தேவையாகக் காமம் என்னும் அவசியம் மனிதனுக்கு ஆதிக்காலம் தொட்டு இருக்கிறது என்கிறார்.

“வாழ்வின் அடிப்படைத் தேவைகளாக நமக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்டுள்ளவை மூன்று - உணவு, உடை, இருப்பிடம். ஆனால் என்னைப் பொருத்தவரை நமக்கு அடிப்படைத் தேவைகள் நான்காகும் - உணவு, காமம், இருப்பிடம், உடை - சொல்லப்பட்டிருக்கும் வரிசையில். உண்மையில் சிந்தித்தால், ஆதி மனிதனின் அடிப்படைத் தேவைகள் உணவும் காமமும், அதன் பிறகே இருப்பிடமாக இருந்திருக்கக் கூடும். உணவுத் தேவையும், காமத்தேவையும் அவன் உள்ளுணர்விலிருந்து புறப்பட்டிருக்கும், மற்ற மிருகங்களைப் போலவே. இருப்பிடத்தேவை என்பதும், தட்பவெட்ப சூழ்நிலைக்கு ஏற்றாற்போலவும், தன்னை மற்ற விலங்குகளிடமிருந்து காத்துக்கொள்ளவும் தேவைப்பட்ட ஒன்றாக இருந்திருக்கும். உடை என்பது மனிதனின் நாகரிக வளர்ச்சியினால் ஏற்பட்ட ஒரு உந்துதலே. உடை ஓர் அடிப்படைத் தேவையாக ஆதி மனிதனுக்கு இருந்திருக்க வாய்ப்பில்லை.”

ஒரு கருத்துக்கு வலு சேர்ப்பதென்பது வலியுறுத்துவதால் மட்டும் வாய்க்காது. வரலாற்றின் பின் புலம் கொண்டு பயணிப்பதன் வாயிலாக மட்டுமே சாத்தியம். இது போன்ற பல்வேறு கருத்தியல்களை விசாரணைக் குட் படுத்துவது இவரின் சிறப்பாக உள்ளது.

அவரின் வெளிப்பாட்டு முறையினை அறிதற்பொருட்டு உதாரணத்திற்காகவே ஒன்றினை மட்டும் குறிப்பிட் டேன்.

காமம் என்பது இங்கே யாரும் பேசிவிட வியலாத ஒரு பொருளாகவே இன்னும் கூட இருக்கிறது. அது வும் பெண்கள் பேசினால் அவ்வளவுதான். ஆனால் தன் காம இச்சையைப் பதிவு செய்த ஔவையின் பாடல் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் இதே மண்ணில் இதே மொழியில் இதே சமூகத்தில் எழுதப்பட்டது தானே.

முட்டு வேன்கொல் தாக்கு வேன்கொல்
ஓரேன் யானுமோர் பெற்றி மேலிட்டு
ஆ! ஒல்! எனக் கூவுவேன்கொல்
அலமர லசைவளி யலைப்பவென்
உயவுநோ யறியாது துஞ்சு மூர்க்கே

இது தோழியிடம் தலைவி கூறியது. 'வெளியே சுழற் காற்று மரங்களை அலைக்கும் இவ்விரவில் என் தனிமை நோயை அறியாமல் தூங்கும் ஊரை நோக்கி முட்டுவேனா, தாக்குவேனா, இன்னது செய்வதென அறியாமல் ஓர் உந்துதலில் ஆ! ஓ என்று வெறிக் கூச்சல்தான் எழுப்புவேனா!' இக்கவிதை சங்கப்பாடல் களில் பல வகைகளில் உக்கிரமாக வெளிப்படும் தன் காமத்தை, தனிமைத் துயரை ஒரு பெண்ணால் சமூகக் கோபமாகக் காட்ட முடியும் என்பதைத் தானே இந்தப் பாடல் உணர்த்துகிறது.

இவரின் கட்டுரை ஒன்று.

பெண்ணும் சமூகமும் என்பது. அதில், "ஒரு பெண் பொதுவில் காமத்தைப் பற்றிப் பேசினால் (மிகவும் ஆழமாகக் கூட வேண்டாம், சாதாரணமாக அடிப்படை விஷயமாக இருந்தாலும்) ஒரு ஆண் அவளை நெருங் கும்போது, அவள் வேண்டாம் எனச் சொல்வது ஏற்றுக்

கொள்ளப் படுவதில்லை. ஒரு ஆண் இல்லை ஆண்க ளின் முன்னிலையில் ஒரு பெண் காமம் குறித்து உரை யாடினாலே, அவள் யாருடனும் படுக்கைக்குச் செல்லத் தயங்க மாட்டாள் என்ற நோக்கிலேயே பார்க்கப் படுகி றாள்.", என்று குறிப்பிடுவது தான் இன்றைக்கும் இருக் கும் யதார்த்தம்.

காமம், நட்பு, திருமண உறவு, குடும்பம், காதலுக்கும் காமத்திற்குமான தொடர்பு, திருமணம் கடந்த உறவு, சுயஇன்பம் குறித்த புரிதல் என பல கருத்துகளை உள் ளடக்கியவை இவரின் கட்டுரைகள்.

வெளிப்படையாகப் பேசப்படாமல் உறைந்து சில்லிட்ட பனிக்கட்டி உடைந்து உருகுவதை உணர முடிகிறது.

பலவிதமான சமூகக் கருத்துகளில் உள்ள சார்புத் தன்மையை கேள்விக்குட்படுத்திச் சுயமான சிந்தனை களின் தெளிவோடு கருத்துகளை முன்வைத்திருக்கி றார். ஆண் மையச் சிந்தனை குறித்துப்பேசும் போதும் இதே பிரச்சனை பெண்களிடமும் சில சமயம் உருவாவ தைச் சுட்டிக்காட்டத் தவறவில்லை.

இவரின் கட்டுரைகள் முழுக்கவும் கருத்தியல் தளத்தில் இயங்குபவை. எனவே வாசிப்பில் ஏற்பும் மறுப்பும் இயல் பாகவே உருவாகும். ஏனெனில், எக்கருத்தும் தனி நபர் மனச்சார்பை உள்ளடக்கியதேயாம்.

ஆனால் மறுக்கும் போது யாரும் சட்டெனப் புறந்தள்ளி விட முடியாத வலிமையும் அதே நேரம் இயல்புத் தன் மையும் தெளிவும் இவரின் எழுத்தின் பலம் எனலாம்.

ஏற்பதும் ஏற்பதால் கொண்டாடுவதும் மறுப்பதும் மறுப்ப தால் விமர்சிப்பதும் நிகழும் போது லதா எழுதியிருக்கும் சமூக மானுடம் சார்ந்த இந்தக் கட்டுரைகளுக்குப் பலன் கிட்டும் என்று கருதுகிறேன்.

நிச்சயம் வாசகர்களால் கவனம் கொள்ளத்தக்க, மேலதிக உரையாடலைக் கோரும் விதமான சூழலைத் தகவமைக்கும் சாத்தியத்தைக் கொண்ட கட்டுரைகள்.

கவனம் பெறட்டும்; உரையாடல் நிகழட்டும்.

வாழ்த்துகள்.

அன்புடன்

தமிழ்மணவாளன்

# பெண்ணியப் பார்வையிலிருந்து....

— முனைவர். நா.நளினிதேவி.
தமிழ்ப் பேராசிரியர் (ப. நி)

பெயரும் வரலாற்றுப் பின்னணியும்:

கழிவறை இருக்கை எனும் இச்சொல் மிக நீண்ட வரலாற்றை உள்ளடக்கிய ஒன்று!.எல்லாரும் எல்லாருக்கும், எல்லாமும் எல்லாருக்கும் என்ற தொல்சமுதாயம் மறைந்த பின்பு, பெண் உட்பட அனைத்தும் ஆண்களுக்கு உரிமையான உடைமைச் சமுதாயம் தோன்றியது . பெண் ஆணுக்குப் பணியாளாகவும், பாலியல் சின்னமாகவும் ஆக்கப்பெற்றுக் கற்பு, பத்தினி, இல்லத்தரசி, குடும்ப விளக்கு என்றெல்லாம் புனைந்துரைக்கப்பட்டாள்! விருப்பு, வெறுப்பற்ற நடமாடும் இயந்திரமாக்கப் பட்டு ஆணின் கழிவறையாகவே இன்றளவும் இயங்குவதை நூல் நேரடித் தரவுகளுடன் அரண் செய்கின்றது. பெண்ணியம் பேசும் நூல்களுள் இது புதிய பார்வையிலான வெகு துணிச்சலான நூல்!

சிறப்பும் வீழ்ச்சியும்:

கண்டு, கேட்டு, உண்டு, உற்றறியும் அய்ம்பொறி, அய்ம்புல இன்பம் பெண்ணிடமே உள்ளது என வள்ளுவம் கூறினும்

இது நடை முறையில் இல்லை என நூலாசிரியர் தக்க எடுத்துக்காட்டுகளுடன் விளக்குகின்றார். ஆணுக்கும் பெண்ணுக்குமான இயற்கை உணர்வின் தேவைகளைப் பெண் காதலன் / கணவனிடம் கூட வெளிப்

படையாகப் பேசுதல் கூடாது என்கின்றது தொல்காப் பியம். எழுத்து, சொல்லுக்கு மட்டுமல்லாது பொருள் எனும் வாழ்வியலுக்கு இலக்கணம் கண்ட தமிழின் தனிச்சிறப்பே பெண்ணின் வீழ்ச்சிக்கு வழி வகுத்தமை வரலாற்று முரண்!

## காதலும் இருவேறு நிலையும்:

காதலுணர்வும் அதன் வெளிப்பாடுகளும் ஆண், பெண் இருபாலருக்கும் இயற்கை எனினும் ஆணுக்கு எந்தக் கட்டுபாடும் இல்லை. ஆனால், பெண்ணுக்குக் கட் டுபாடு உண்டு. இருபத்தோராம் நூறாண்டு அறிவியல் உலகிலும் இக்கட்டுபாடு தொடர்கின்றது. ஆயிரம் ஆயி ரம் காலமாக மூளைச் சலவை செய்யப் பெற்றுக் கெட்டி தட்டிப் போன பெண்ணின் இந்த மனத் தடையை இன் றளவும் உடைக்க இயலவில்லை. இத்தனை நூற்றாண் டுக்காலப் பெண்ணின் கல்வி வளர்ச்சி பெண்ணுக்குத் துணை செய்து துணிவு தரவில்லை.

## கழிவறை இருக்கையும் பெண்ணும்:

பசிக்கு உணவும் வேட்கைக்குத் தண்ணீரும் கண் ணுக்கு உறக்கமும் குறைவின்றித்தேவை என்பது போலவே பாலியல் உறவான கலவியும் இருபாலர்க்கும் ஒரே மாதிரி தேவை. ஆனால் ஆணின் தேவை மட்டும் நிறைவாக முழுமை அடைகின்றது. பெண்ணின் மனத் தடையால் அது அவளுக்கு முழுமையும், நிறைவும் தருவதில்லை. இதனால் ஆண் கொடுக்கப்படுபவராக வும், பெண் ஏற்கப்படுபவராகவுமே உள்ள நிலையில் பெண்ணைக் 'கழிவறை இருக்கை ' எனச் சுட்டுகின்றார் நூலாசிரியர் . இந்த ஏற்கப்படும் நிலையை நூல் விரிவா கவும் நுட்பமாகவும் தயக்கமற்று வெளிப்படையாகவும் வெகு இயல்பாகவும் கூறிச் செல்கின்றது. பெண்ணின் தேவைகள் பற்றி ஆண் சிந்திப்பதும் இல்லை; கவலைப்

படுவதும் இல்லை என்பதை விட அவன் அறியவில்லை எனக் கூறலாம்.

## மனத்தடையும் காரணங்களும்:

கற்பு என்ற கற்பனையின் அடிப்படையிலானது இம் மனத்தடை! தன் விருப்பத்தையும் போதாமையை யும் சொன்னால் தன்னை வேறுமாதிரியாக இழிவாக நினைக்கலாம் என்ற அச்சம்; ஆண் விரும்பும்போது மறுத்தால் அவன் வேறு பெண்ணை நாடிச் சென்று விடுவான் என்ற கலக்கம், குழந்தைகள் நலத்துக்கு ஊறு நேரும்; குடும்ப அமைதி கெடும்; தன் தன்மானத் துக்கு இழுக்கு; சமுதாய அவதூறு பற்றிய எண்ணம் போலானவை ஒருபுறம்; குழந்தைகள் பெற்று வளர்ந்த நிலையிலும் மாதவிலக்கு நின்று விட்ட போதும் இல்லற உறவின் மீது நாட்டம் இராது, தேவை இல்லை என்ற தவறான நம்பிக்கைகள் மற்றொருபுறம். இவை பெண் ணின் மனத் தடைக்கு வலுவான காரணங்களாவதை ஆசிரியர் நேரடித் தரவுகள் மூலம் அரண் செய்துள்ளார்.

## தாக்கமும விளைவுகளும்:

இத்தகைய மனத்தடையால் பெண் தான் அறியாம லேயே மனநோயாளி ஆகின்றாள். வாழ்க்கை முழு ஈடு பாடின்றி இயந்திரத் தனமாகிறது. இதனால் தன்னை மீறிய மன உளைச்சல்! அவளுடைய இல்ல அலை களாக பணிகளில் தடுமாற்றம், தன்முனைப்பு, ஏற்படு கின்றன. இயல்பாக இயங்க முடியாத மனநலச் சிக்க லில் சிக்குகின்றாள். வெறுமையும் விரக்தியும் ஏமாற் றமுமாக வெளியே சிரித்து உள்ளே புகையும் இரட்டை வாழ்க்கை வாழ நேரிடுகிறது! அவன் மகிழ்ந்து தான் மகிழ்ந்து அவன் வாங்கித் தரும் பூ, புடவை, நகையில் தன் சமுதாய மதிப்பைப் பேணித் தமக்கென்ற இருப்பு எதுவுமின்றி அவனைச் சார்ந்து அவனுக்காகவே வாழ் கின்றாள். இந்த இரண்டாம் நிலை தொடர்கின்றது.

படித்த பெண்,உயர் கல்விப் பெண், படிக்காத பெண் என்ற வேறுபாடு இல்லை! இது சமுதாய ஊனமே !

கருத்தொருமித்தலும் காதலும்:

கருத்தொருமித்த காதல் என்பது ஒருவர் மற்றவருடைய விருப்பு வெறுப்புணர்வுகளையும் உரிமைகளையும் கற்பு என்ற கற்பனைக்கு அப்பாற்பட்டு மதிப்பதில் வெளிப்படுவதாகும். தம் குடும்பத் தேவைகள், கடமைகளுக்குக் குறைவின்றிப் பிற ஆண் பெண் நட்புறவை அனுமதிக்க வேண்டும்! ஒருவருக்கு ஒருவர் புரிதலுடனும் இசைவுடனும் தொற்றுக்கு இடமற்ற உறவில் தவறில்லை! இது தனிமனித உரிமையாகும் என்பதைத் தலைமை நீதிமன்றம் அண்மையில் உறுதி செய்துள்ளது! குடும்பங்களிலும் ஆண் பெண் தனித்தனி அலகு என்ற சமுதாயச் சமன்மைக்குப் பெண்ணின் இரண்டாம் நிலையும் மனத்தடையும் நீங்க வேண்டும் என்பதை நூல் உணர்த்துகிறது.

இன்றைய தேவைகளும் பெண்களும்!

எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் வன்புணர்வுகளுக்குச் சட்டமும் தண்டனையும் மட்டுமே போதா! ஏனைய உறுப்புகள் போன்றவையே பாலியல் உறுப்புகள்; ஏனைய உணர்வுகள் போன்றதே பாலியல் உணர்வு! இது இருபாலருக்கும் பொதுவே! இதில் மறைக்க வேண்டியது எதுவும் இல்லை! தூய்மையும் இழிவுமில்லை என்ற விழிப்புணர்வுக்குப் பாலியல் கல்வி கட்டாயம் வேண்டும். வீடுகளிலும் பொதுவிலும் இது பற்றி எத்தடையும் இன்றிப் பேசும் இயல்பான நிலை உருவாக வேண்டும். பெண் மனத்தடை நீங்கிப் பாலியல் உறவில் நிறைவு பெற வேண்டும்! ஆணின் கழிவறை இருக்கை என்ற நிலை நீங்க வேண்டும்! ஆண்கள் பெண்களின் பாலியல் உறவு இன்பத்தின் முழுமை பற்றிச் சிந்திக்க வேண்டும். “சுய இன்பம்” தவறோ, ஊறோ இல்லை

எனும் மருத்துவக் கருத்தை மனம் கொள வேண்டும் (இத்தகைய மாற்றங்கள் என் "அகவிடுதலையே பெண் விடுதலை நூலில் வலியுறுத்தப் பெற்றுள்ளன).

பெண்விடுதலை பேசும் நூல்களுள் இந்நூல் புதிய துணிச்சலான முயற்சி! பேசக் கூடாதென்ற பேசாப்பொ ருளை விரிவாகத் தரவுகளுடன் பேசுகிறது. ஒவ்வோர் ஆணும் பெண்ணும் படிக்க வேண்டிய நூல்!! நூலா சிரியர் லதா அவர்கட்கு உளமார்ந்த வாழ்த்துகள்! நோய் நாடி நோய் முதல் நாடும் சமுதாய ஆர்வலராகிய லதா தொடர்ந்து இத்தகைய நூலாக்கங்களில் ஈடுபட வேண்டும் என வேண்டுகிறேன்.

# முன்னுரை

"நாம் காமத்தைப் பற்றி மிக அதிகமாக
சிந்திப்பதில்லை;
அதைப் பற்றி மிகத் தவறாகவே சிந்திக்கிறோம்"

— Alain de Botton

இந்தப் புத்தகம் நன்றாகக் கலவி கொள்வதற்கான வழி முறைகளையோ, சந்தோஷமாக வாழ்வதற்கான குறிப்பு களையோ பற்றியதானதல்ல!

நம் சமுதாயத்தில் காமத்தை எந்தப் பார்வை கொண்டு பார்க்கிறோம், அதை எப்படி கையாள்கிறோம், அந்த வார்த்தையையே எப்படித் தவறான வார்த்தையாக செய்து விட்டோம் என்பதைப் பற்றிய ஒரு அலசலை முன் வைக்கும் முயற்சியே இந்தப் புத்தகம்.

காமம் என்ற ஒரு விஷயம் எனக்கு சுவாரசியமா னதாகவே தோன்றியிருக்கிறது எப்பொழுதும். எனக்கு மட்டுமல்ல, இங்குப் பொதுவாக எல்லோருக்கும் அது சுவாரசியமான ஒன்றாகவே தோன்றக் கூடியது இல் லையா? எதை மறைத்து வைக்கிறோமா, எதைக் குறித்து தவறாக பேசுகிறோமோ, எதைத் தெளிவாக யாரையும் அறிய முடியாமல் செய்கிறோமோ, அதன் பால் மனிதர்களுக்கு ஈர்ப்பும், அறிந்து கொள்ளும் சுவா ரசியமும் அதிகரிக்கத்தானே செய்யும்? இதில் ஆச்சர்யம் ஒன்றுமேயில்லை!

காமம் குறித்து நிறைய படைப்புகள் வெளிவந்திருக் கின்றன; சில உடல்ரீதியாக காமத்தை அலசுவதாகவும், சில மனரீதியாக அலசுவதாகவும் இருக்கின்றன. இதில் இரண்டாவது வகையை முதலில் படிப்பது நன்மை பயக் கும். ஏனெனில், காம உணர்வுகளை மனோரீதியாக புரி யாமல், உடல் ரீதியாக மட்டுமே அணுகினால், அதனை

சரிவர புரியவும் இயலாது, மனம் கொள்ள அனுபவிக்க வும் இயலாது.

என் அனுபவங்களிலிருந்து, என் சுற்றுச் சூழலில் நான் பார்த்தவைகளிலிருந்து, மற்றவரிடம் கேட்டுத் தெரிந்த வைகளிலிருந்து, காமத்தை மிக எளிமையான முறை யில் ஆராய்ந்து பார்க்கும் ஒரு சிறு முயற்சியே இது. சாதா ரண அடிப்படை விஷயங்களான காதலும் காமமும் எப் படி குழப்பத்திற்கு ஆட்பட்டு இன்று நம் சமூகத்தையும் நம் வாழ்வையும் ஆட்டிப்படைத்துக் கொண்டிருக்கிறது என்ற கேள்விக்கான விடை தேடலின் பயணமே இந்தப் புத்தகம்.

நானும் காமம் குறித்து எந்த விவாதங்களும் பொதுவில் செய்யாத ஒரு சாதாரண குடும்பத்தில் பிறந்து வளர்ந்த வள் தான். உடல் ரீதியான நெருக்கங்களை
என் பெற்றோர்களிடமோ, உறவுகளிடமோ, அக்கம்பக் கத்தார்களிடமோ கண்டதே இல்லை. காமத்தினுட னான என் முதல் சந்திப்பு நான் வாழ்க்கையில் பார்த்த முதல் திரைப்படத்துடன் சம்பந்தப்பட்டது. பார்க்கச் சென்றது என்னவோ துணைவன் என்னும் முருகக் கட வுளைப் பற்றிய ஒரு திரைப்படம் தான். ஆனால் அந்தத் திரை
அரங்கின் கழிவறையில் தான் எனக்கு முதன் முதலாக காமத்தினுடனான ஒரு சந்திப்பு நிகழ்ந்தது. அப்பொ ழுது எனக்கு எட்டு வயது, நான்காவது வகுப்பு படித் துக் கொண்டிருந்த நேரம். என் அண்ணனுக்கு ஒன்பது, எதிர்வீட்டில் இருந்த நிறைய குழந்தைகளுடனான ஒரு குடும்பத்து கடைசிப் பையனுக்கு பத்து வயதிருக்கும். அவனின் தந்தை தான் எங்கள் மூவரையும் திரைப்படத் திற்கு அழைத்துச் சென்றிருந்தார்.

இடைவெளி நேரத்தில் நான் ஒன்றிற்கு இருக்க வேண் டும் என அந்த மாமாவிடம் சொல்ல, சிறிது நேரம் காத்

திரு கூட்டமாக இருக்கும், பிறகு அழைத்துச் செல்கி றேன் என்றார். இடைவெளி ஆரம்பித்து விளம்பரங்கள் போட ஆரம்பித்ததும் என்னை ஆண்கள் கழிவறைக்கு அழைத்துச் சென்று என்னையும் போகச் சொல்லி அவ ரும் என்னருகிலேயே நின்று சிறுநீர் கழித்தார். ஏனோ சிறு வயது முதற்கொண்டே ஆண்கள் தெருவில் சிறு நீர் கழிப்பதை தினம் கண்டிருந்ததினால் அது ஒரு பெரிய விஷயமாக எனக்குப் படவில்லை. சிறுநீர் கழித்து முடிந்து நான் எழுந்ததும் என் கையைப் பிடித்து அவர் தன் உறுப்பின் மீது அழுந்தப் பிடித்துக்கொண் டார் சில நிமிடங்கள். எனக்கு ஒன்றும் புரியவுமில்லை, என்ன செய்வதென்று தெரியவுமில்லை. இந்த நிகழ் விற்கு பிறகு, நான் அவர்கள் வீட்டிற்கு செல்வதாக இருந்தால், அவர் வீட்டில் இல்லை என உறுதி செய்து கொண்டே போவேன். ஆனால் இன்று நினைத்து பார்க் கையில் அதை ஏன் யாரிடமும் சொல்லவில்லை என் பது எனக்கே புரியவில்லை.

இதைத் தொடர்ந்து இன்னொரு நிகழ்வும் நடந் தது. ஆங்கிலத்தில் பட்டர்ஃபளை எஃபெக்ட் (Butterfly Effect) என்று சொல்வார்களே அது போல நடக்க ஆரம் பித்தது.

பக்கத்து வீட்டில் ஒரு அண்ணன் தனியாக வசித்து வந் தார். அவர் சட்டக்கல்லூரி மாணவர். அவர் பெற்றோர் பணக்காரர்கள் ஆனதால், அந்த வீட்டை மகன் தங்கி படிப்பதற்காகவே வாங்கிப்போட்டு ஒரு வயதான பெண் மணியை சமையலிற்கும், வீட்டை பார்த்துக்கொள்வதற் கும் நியமித்து இருந்தனர். அந்த அண்ணா அவ்வப் பொழுது ஆஸ்துமா நோயினால் அவதிப்படுவார். என் அப்பாவிற்கும் அது அவ்வப்பொழுது வரும் என்பதால், அவருக்கு அந்த அண்ணன் மீது ஒரு தனி கரிச னம் உண்டு. ஒரு முறை அண்ணன் வீட்டு பாட்டி

ஊருக்கு சென்றிருந்த நேரம், அண்ணாவிற்கு ஆஸ் துமா படுத்த ஆரம்பித்தது. அப்பா என்னிடம் அந்த அண்ணனுக்காக ஏதோ தனியாக சமைத்து என்னிடம் கொடுத்து அந்த அண்ணனிடம் கொடுத்து விட்டு வரச் சொன்னார். நானும் எடுத்துக் கொண்டு போய் அவர் வீட்டு ஹாலில் வைத்து விட்டு திரும்ப நினைத்தபோது, கட்டிலில் படுத்துக்கொண்டிருந்த அண்ணா என்னை அருகில் அழைத்தார். நான் அருகில் சென்றதும் கட் டிலில் அமரச் சொன்னார். இல்லை நான் விளையாடப் போகணும் என்று சொல்லிக்கொண்டே நகர நினைத்த நேரம், சட்டென்று என் கையை பிடித்து இழுத்து என் னைத் தன் மேல் போட்டுக்கொண்டார். எனக்கு பயம் வந்து விட்டது, "விடுங்க என்னை, நான் போகணும்" என்று சொல்லிக்கொண்டே நகர பார்த்தும், முடியாமல் போனது. அவர் நல்ல கட்டுமஸ்தான உடம்பில் இருப் பார். பிறகு முரட்டுத்தனமாக என்னை அழுத்தி பிடித்து என் மார்பை வலிக்கும் அளவிற்கு அழுத்தி ஏதோ செய் துவிட்டு என் ஒரு கையை இழுத்து அவர் ஆணுறுப் பில் வைத்து மேலும் கீழும் அவசர அவசரமாக தேய்க்க ஆரம்பித்தார். எத்தனை
முயன்றும் விலக முடியவில்லை. திடீரென கையை விட் டார். என் கை முழுவதும் பிசு பிசுவென ஏதோ ஒட்டிக் கொண்டிருந்தது. கையை கழுவிக்கொண்டு வீட்டிற்கு போ என்று சொல்லிவிட்டு படுத்துக்கொண்டு விட்டார். அன்று பிசுபிசுத்த என் கை சமயத்தில் இன்றும் நாற்ற மெடுப்பது போல் ஒரு பிரமை, இதை எழுதிக்கொண்டி ருக்கும் இந்த நேரத்திலும்!

இப்படி என் வாழ்வில் நிகழ்ந்த ஒவ்வொன்றையும் இங்கு பட்டியல் போடுவது என் நோக்கமல்ல. ஆனாலும் காமம் என்றால் என்னவென்று கூட அறியாத வயதில் நடந்த சில விஷயங்களை எனக்கு மட்டுமே நடந்ததாக நான்

அன்று எண்ணிக் கொண்டிருந்திருந்தாலும், வளர வளர தான் தெரிந்தது ஏதோ ஒரு வகையில் எல்லா குழந்தை களும், அது ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந் தாலும், இறக்கும் தருவாயில் இருக்கும் கிழவியானா லும் இந்த மாதிரியான தீண்டுதல்களுக்கோ, வன்புணர் விற்கோ ஆட்படுத்தப்பட்டுக் கொண்டு தான் இருக் கின்றனர் நம் சமூகத்தில் என. அதையும் செய்பவர்கள் பெரும்பாலும் நம் குடும்பத்தினரால் நல்லவர்கள், பெரி யவர்கள் என நம்பப்படும் மனிதர்கள் தான்.

இது போலான பல அனுபவங்கள் "பெரியவர்கள்", "நல் லவர்கள்" என என் குடும்பம் நம்பிக்கொண்டிருந்த சில ரால், வெளியில் செல்லும்போது, சில மூன்றாம் மனிதர் களாலும் ஏற்பட்ட பிறகு, என்னுடைய பதினான்காவது வயதில் எனக்கொரு அதிர்ச்சி காத்திருந்தது. என் தந் தையே எனக்கு பாலியல் தொல்லை கொடுக்க ஆரம் பித்தார். இரவுகளிலும், அம்மா வீட்டில் இல்லாத பொழு துகளிலும். உறக்கம் தொலைத்து, உள்ளுக்குள் ஒரு நடுக்கத்துடன் இரண்டு வருடங்கள் நகர்ந்தது. வீட்டை விட்டு ஓட முயற்சித்து, எப்படியோ தேடிக் கண்டுபிடித்து, ஏதோ நான் யாருடனோ ஓட முயற்சித்தது போல் அடி உதைகள் வாங்கினேன். அதற்குப்பிறகு அந்த இம்சை கள் அப்பாவிடமிருந்து நின்றன.

இது எல்லாவற்றையும் அலசினால் வேடிக்கையாக இருக்கிறது. தெய்வ நம்பிக்கையுள்ள ஒரு மனிதர், தெய்வத்தை பற்றியான ஒரு திரைப்படத்திற்கு என்னை அழைத்துச் சென்று தவறாக நடந்தார்; அண்ணா என்று நான் அழைத்துக்கொண்டிருந்த ஒரு நபர், தவறாக என்னை உபயோகித்துக் கொண்டார்; எல்லாவற்றிற்கும் மேலாக, நான் இந்த உலகில் ஜனிப்பதற்கு காரணமாக வும், என்னை காக்க வேண்டிய பொறுப்புள்ளவராகவும்

இருந்த தந்தையே என் பாதுகாப்பின்மைக்கும் காரண மானார்.

ஆனால் இன்றும் பாரம்பரியமிக்க இந்திய கலாச்சார பெருமைகளையும், குடும்ப அமைப்புகளின் மேன்மை யையும் மேற்கத்திய நாடுகளோடு ஒப்பிட்டு தொண்டை தண்ணீர் வற்ற கதறிக்கொண்டிருக்கும் குரல்கள் என் காதில் நாராசமாக ஒலித்துக்கொண்டே தான் இருக் கின்றன.

உன்னொருவளுக்கு இப்படி நடந்துவிட்டதென்றால் கலாச்சாரத்தையே குறை சொல்வது சரியா என்ற கேள் வியை நீங்கள் கேட்பீர்களேயானால், "தனி ஒரு மனித னுக்கு உணவில்லை எனில், இந்த ஜகத்தினை அழித் திடுவோம்" என்று குரல் கொடுத்த பாரதியாரின் வார்த் தைகளும் இப்படியாகப்பட்டது தானே?

ஆயினும் சொல்கிறேன், இது எனக்கு மட்டும் நடந்த தல்ல....இன்னும் பல ஆயிரம் பெண்களுக்கும், ஆண் குழந்தைகளுக்கும் இப்படிப்பட்ட தொந்தரவுகளோ, இல்லை இதையும் தாண்டிய கொடுமைகளோ அன்றி லிருந்து இன்று வரை நடந்து கொண்டுதான் இருக்கிறது என்பதை யாராலும் மறுக்க இயலுமா?

இந்த வயதிலும், மக்கள் காமம் தேடி என்னை நோக்கி வந்து கொண்டே தான் இருக்கிறார்கள். பெரும்பாலோ ருக்கு வேண்டியது என்னவோ அவர்கள் உடல் இச் சைக்கு ஒரு தீர்வு தான். ஆனால் கூறும் காரணங்களோ ஆயிரம்.

காதல், அன்பு என கூறிக்கொண்டு நெருங்க முற்படு வர். இல்லையெனில் நம் பரிதாபத்தை சம்பாதிக்க, தன் மனைவிக்கு இதில் சுத்தமாக விருப்பமில்லாமல் போய் விட்டதாகவோ, இல்லை அவர்களுக்குள் சுமுகமான உறவில்லை எனவோ முறையிடுவார்கள். காதல், அன்பு

என்ற பெயர் சொல்லி நெருங்குபவர்கள் ஏமாற்றுக்கா ரர்கள் என்றால், இந்த இரண்டாவது வகை மனிதர்க ளைக் காண்கையில், ஆச்சரியமும், அருவருப்பும்தான் மிஞ்சும். இவர்கள் வீட்டில் கிடைக்கவில்லையெனில் அதற்கு பரிதாபப்பட்டு இவர்கள் தேவையைப் பூர்த்தி செய்ய,
பெண்கள் இங்கு சத்திரமா வைத்து நடத்திக் கொண்டி ருக்கிறோம்?

மிகவும் அரிதாக சில ஆண்கள் நேரடியாக கேட்பார்கள் அவர்கள் தேவையை. இது ஏற்றுக்கொள்ள வேண் டிய விஷயமாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், அவர்க ளின் இந்த நேர்மையை நான் எப்பொழுதுமே பாராட்டு வதுண்டு.

என்னை ஆச்சர்யத்தில் ஆழ்த்தும் இன்னொரு விஷயம் என்னவென்றால் ஒரு ஆணின் அகம்பாவமானது ஒரு பெண்ணிடமிருந்து வேண்டாம் என்ற சொல்லை ஏற்க மறுக்கிறது; இங்கே அவன் செய்வது என்ன? தன் அகம் பாவத்தை காக்கும் பொருட்டு தன் சுயமரியாதையை இழந்து மேலும் மேலும் அழுத்தம் கொடுப்பது தான்.

என் சில ஆண் நண்பர்கள் என்னிடம் கூறி இருக்கிறார் கள், இம்மாதிரியான யுக்திகளை ஆண்கள் மட்டுமல்ல நிறைய பெண்களும் கையாள்வதுண்டு என. கண்டிப் பாக இருக்கும். காமமும், உடல் வேட்கையும் இரு பாலாருக்கும் பொது தானே? அங்கங்கு செய்தித்தாள்க ளில் படித்துக்கொண்டு தானே இருக்கிறோம், வயதில் மிகுந்த பெண்கள், சிறு ஆண் பிள்ளைகளை தவறான வழியில் அழைத்துச் சென்று அவர்கள் வாழ்வை பாழாக்குவதைப் பற்றி? இவர்கள் பல நேரங்களில் நம் அருகிலேயே நமக்கே தெரியாமல் நடமாடிக்கொண்டி ருக்கும் மனிதர்கள் தான்.

நான் ஒரு பெண்ணாக இருப்பதாலும், என் அனுபவங்களை கொண்டே நான் இந்தப் புத்தகத்தை எழுதுவதாலும், நான் இன்னொரு பாலாரை மட்டுமே குறை கூறுவதாக
தோன்றலாம். ஆனால் என் நோக்கம் அதுவல்ல. காமத்தை மறைத்து வைக்க வேண்டிய ஒன்றாகவும், மிகவும் தவறான விஷயமாகவும், திருமணத்திற்கு முன்பான காம உணர்வுகளை ஒதுக்கி வைக்க வேண்டிய ஒன்றாகவும் இருக்கும் ஒரு சூழலில், அவற்றால் ஏற்படும் பாதிப்புகளை அலசுவது மட்டுமே என் நோக்கம்.

நாம் நம் உயர்ந்த கலாச்சாரம் பற்றி நிறைய பேசுகிறோம். ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன் என வாய் கிழிய பேசுகிறோம், தாய் தந்தையர் தெய்வமென போற்றுகிறோம், மேலும் ஆயிரம் தெய்வங்களை வணங்குகிறோம். இது தான் சரியான பாதை என்றால், ஏன் இங்கு இத்தனை பாலியல் கொடுமைகள், வன்முறைகள், ஏக்கங்கள்? ஏன் இத்தனை ஏமாற்று வித்தைகள்? எங்கே பிரச்சினை? வேரிலேயே ஏதோ பெரிய பிரச்னை உள்ளது. அதை சரி செய்வது அவசியமாகிறது.

என் ஆச்சரியங்கள், தாக்கங்கள், அதிர்ச்சிகள், வெறுப்புகள், கோபங்கள், அன்பு, காதல், என் கேள்விகள், எனக்கு கிடைத்த பதில்கள், இவை எல்லாவற்றின் தொகுப்பு தான் இந்த புத்தகம்.

இந்தப் புத்தகத்தின் அத்தியாயங்களுக்குள் போவதற்கு முன் ஒன்றை தெளிவு படுத்த விழைகிறேன். எந்த விதத்திலும் இந்தப் புத்தகம், ஒரு தனி மனிதரையோ, ஒரு தனி பாலாரையோ தனிப்பட்ட முறையில் குறை சொல்லும் நோக்குடன் எழுதப்படவில்லை. நான் பார்த்த மனிதர்கள் (ஆண்/பெண் இரு பாலாரும் இதில் அடக்கம்), எனக்கான தாக்கங்கள், மற்ற மனிதர்களுடனான என் விவாதங்கள், என் அனுபவங்கள், என்னு

டன் மனம் திறந்து பகிர்ந்த சில நண்பர்களின் அனுப வங்கள், இவையே இந்தப் புத்தகத்தின் அடித்தளம்.

ஆனால் என்ன சொன்ன போதிலும் பல காலமாக நம் சமூகம் ஆணாதிக்க சமூகமாகவே இருந்து வருவ தால், பெண்கள்தான் அதிகமாக அடிமைப்பட்டு வாழ் கிறார்கள் என்னும் உண்மையையும் ஒப்புக்கொண்டே ஆக வேண்டியுள்ளது. ஆனால் என்னால் இயன்ற வரை காமத்தை இரு பாலாருக்கும் பொதுவில் வைத்தே அலசி இருக்கிறேன். படிப்பவர்கள் நீங்களும் ஒரு நடுநி லையில் இருந்தே இதை படிக்க வேண்டுகிறேன்.

## ஏன் இந்த தலைப்பு?

ஏன் இந்தப் புத்தகத்திற்கு “கழிவறை இருக்கை” எனப் பெயர் வைத்திருக்கிறேன் என உங்களுக்கு கேள்வி எழலாம். புத்தகத்தை மேலே படிக்க உங்களுக்கே அது புரியலாகும்.

அன்பும் நன்றியும்

— லதா

# பொருளடக்கம்





அத்தியாயம் - 1

# வாழ்வின் அடிப்படைத் தேவைகள்

வாழ்வின் அடிப்படைத் தேவைகளாக நமக்குச் சொல் லிக்கொடுக்கப்பட்டுள்ளவை மூன்று - உணவு, உடை, இருப்பிடம். ஆனால் என்னைப் பொருத்தவரை நமக்கு அடிப்படைத் தேவைகள் நான்காகும் - உணவு, காமம், இருப்பிடம், உடை - சொல்லப்பட்டிருக்கும் வரிசை யில். உண்மையில் சிந்தித்தால், ஆதி மனிதனின் அடிப்படைத் தேவைகள் உணவும் காமமும், அதன் பிறகே இருப்பிடமாக இருந்திருக்கக் கூடும். உணவுத் தேவையும், காமத்தேவையும் அவன் உள்ளுணர்விலி ருந்து புறப்பட்டிருக்கும், மற்ற மிருகங்களைப் போலவே. இருப்பிடத்தேவை என்பதும், தட்பவெட்ப சூழ்நிலைக்கு ஏற்றாற்போலவும், தன்னை மற்ற விலங்குகளிடமிருந்து காத்துக்கொள்ளவும் தேவைப்பட்ட ஒன்றாக இருந்தி ருக்கும். உடை என்பது மனிதனின் நாகரிக வளர்ச்சியி னால் ஏற்பட்ட ஒரு உந்துதலே. உடை ஓர் அடிப்படைத் தேவையாக ஆதி மனிதனுக்கு இருந்திருக்க வாய்ப் பில்லை.

உணவிற்கு வழியில்லாமல் இருக்கும் மனிதனுக்குக் கூட, காமம் என்ற உந்துதல் இருக்கவே செய்கிறது; அதைத் தீர்த்துக்கொள்வதற்கான முயற்சியை அவன் கைவிடுவதில்லை. காமத்திற்கு அப்படிப்பட்ட ஒரு சக்தி உள்ளது. ஆதி மனிதன் கிடைத்ததை எல்லாம் உண்டு வயிற்றுப்பசி ஆற்றிக்கொண்டது போல, எவரு டன் வேண்டுமானாலும் தன் காமப்பசியையும் ஆற்றிக் கொண்டிருப்பான். தன் இன விருத்திக்கான வழியே காமம் தான் என்பதை காமப்பசி ஆற்றிக்கொண்ட

முயற்சிக்குப் பிறகு தான் அறிந்து கொண்டிருப்பான். யாரும் சொல்லிக் கொடுத்து விட்டுச் சென்றிருக்க மாட் டார்கள், கலவி கொள், இன விருத்தியாகும் என. இன் னும் சொல்லப்போனால், கலவியினால் ஏற்படும் இன் பத்தைத் தான், நாவின் ருசிக்கு முன்னமே உணர்ந்தி ருப்பான் ஆதி மனிதன்.

நாம் காட்டில் வாழ்ந்த காலத்தில் இருந்து வெகு தூரம் வந்து வெகு காலங்கள் ஆகிவிட்டன. உணவு முறை களில் எத்தனையோ ஆராய்ச்சிகள் செய்து, இன்று உணவு என்பது வெறும் வாழ்வதற்கான ஆதாரமாக மட்டுமில்லாமல், நம் நாவின் ருசிக்காகவும் என்ற இடத்தைப் பெற்றுவிட்டது. எண்ணிலடங்கா உணவு வகைகளை உலகெங்கிலும் தயார் செய்து எல்லோ ரும் உண்டு களிக்கிறோம். நம் இருப்பிடங்களிலேயும், உடைகளிலேயும் கூட எத்தனையோ மாற்றங்கள் ஏற் பட்டு விட்டன.

ஆனால் காமம் என்பதை மட்டும் ஓர் இருட்டறையில் அடைத்து, அதைச் சுற்றிலும் மின்சார வேலியும் போட்டு வைத்திருக்கிறோம். இந்தச் சமூகமும் தன் ஒப்புதல் இல்லாமல் இரு மனிதர்கள் ஒன்றுபட்டு காமத்தை அனுபவிப்பதை ஒரு பாவம் என்றே குறை சொல்லிக் கொண்டிருக்கிறது. உயிரில்லா அருவமான இந்தச் சமூ கம், காமம் என்பதை மகா பாவமாக பாவித்து இருட் டில் ஒளித்தே வைத்திருக்கும் இந்தச் சமூகம், “திரும ணம்” என்ற ஒப்புதலை வழங்கியவுடன் மட்டும் அதை சட்டென ஒரு தெய்வீகத் தன்மைக்கு உயர்த்தி விடுவது வியப்பே!

நாம் உண்ணும் உணவின் ருசி இவ்வளவு பெரிய இடத்தை நம் வாழ்வில் பிடித்திருக்கும்போது, ஏன் காமத்தினால் ஏற்படும் மகிழ்வை மட்டும் வேறு விதமாக நடத்துகிறது என்பது புரியவில்லை. இப்படிப் பட்ட ஒரு

பாவிப்பே, மனிதனின் மூளையில் அளவிற்கு அதிகமாக காமம் பற்றியதான எண்ணங்களை சதா சர்வ காலமும் நிலைக்க வைத்து, பல தவறான செயல்களுக்கு வழிவ குக்கிறது, பல மனப் பிறழ்வுகளை உருவாக்குகின்றது. காமம் இயற்கையின் உந்துதல். அதற்குச் சரியான வழி யில் தீர்வு காண முயலவேண்டுமேயல்லாமல், மறைத்து வைப்பதோ, அறியாமல் தடுப்பதோ தீர்வாகாது.

## அத்தியாயம் - 2

# தகாத வார்த்தை

என் பெற்றோர்கள் கலவி கொள்ளாமல் இருந்திருந் தால், நான் இங்கு, இன்று இந்தத் தகாத வார்த்தையைப் பற்றி எழுதிக் கொண்டிருக்க இயலாது. கலவிகள் நடக் காமல் இருந்திருந்தால், நீங்களும் இங்கு, இன்று, இதை வாசித்துக் கொண்டிருக்க முடியாது. காமம் அசிங்க மென்றால், கலவி கொண்டதன் பலனாய் நம்மைப் பெற் றெடுத்தவர்களை மதிக்க நமக்குக் கற்றுக்கொடுக்கப் பட்டது ஏன்?

காமத்திலிருந்து பிறந்தவை எல்லாம் புனிதமானவை என்றால், எப்படி காமம் என்ற வார்த்தை மட்டும் அசுத்த மாக முடியும்? என்னால் இதைப் புரிந்து கொள்ள முடிய வில்லை.

காமம் தான் இவ்வுலகிற்கு மனிதர்களை அளித்துள் ளது. பகிர்தலை நமக்குக் கற்றுக்கொடுப்பதும் காமமே. பகிர்தல் என்ற உணர்வில்லையேல் நாமெல்லாம் மனி தர்களாகவே உலவிக்கொண்டிருக்க மாட்டோம். குழந் தைகளும், நாம் ஆசையாக வளர்க்கும் பிராணிகளும் இவ்வுலகிற்கு வந்திருக்காது.

காமம் அசிங்கமானது இல்லை. அசிங்கமாக்கப்படுகி றது - மற்றவர் மேல் மனதாலும், உடலாலும் வன்முறை யாக திணிக்கப்படும் பொழுதில். இது உடல் வியாபா ரங்களில், அகண்ட வெளியில், ஏன் புனிதமாகக் கரு தப்படும் திருமண பந்தங்களில் கூட நடக்கலாம். காற்று, நெருப்பு, நீர் எல்லாம் வாழ்வின் ஆதாரங்கள். இயற்கை நமக்களித்த சுத்தமான விஷயங்கள். தானே அவை தன்

சுத்தத் தன்மையை இழக்க இயலாது. ஆனால், நாமே அவற்றை அசுத்தப் படுத்தி விட்டு அவை அசுத்தம் எனப் பறை சாற்றலாம். மனிதன், இயற்கையாக சுத்த மானவைகளாக உள்ளதையெல்லாம்,
தன் உலகைச் சுழல வைத்துக் கொண்டிருக்கும் விஷயங்களை எல்லாம், நம் வாழ்வை வளப்படுத்திக் கொண்டிருப்பவையை எல்லாம், நம் சூழலை அழகு படுத்திக் கொண்டிருப்பவையை எல்லாம், நமக்கு உயிர் கொடுத்துக் கொண்டிருப்பவையை எல்லாம், அசுத்தப் படுத்துவதையே தன் கர்மாவாகக் கையிலெடுத்திருக் கிறான். அதில் காமமும் ஒன்று.

காமம் என்பதனை ரகசியமாக ஒளித்து வைத்து, சமு தாயக் கோட்பாடு என்னும் பெயரில் அந்த இயற்கை உணர்வை அடக்கி வைக்க முயன்று, பெண்ணிற்கு சமநிலை மறுக்கப்பட்டு, மனிதனால் அசிங்கமாக்கப் பட்டதே காமம். கலவியில் ஈடுபடும் வேளை பொது வாக ஆண் மேலே இருந்து இயங்குவது, அவனுக்கு பெண்ணை நசுக்குவது சுளுவாகிறது. சில இடங்களில் பெண்ணும் ஆணிற்குச் சற்றும் இளைத்தவள் இல்லை என நிரூபிப்பதாக, ஆணை மதி மயங்கச் செய்து, அவ னின் கௌரவத்தைக் குலைத்து, அவனின் செல்வங்க ளைச் சூறையாடி எனப் பலவாறு அவன் மேல் அதிகாரம் செலுத்துகிறாள். இப்படியாகக் காமம் என்ற அழகான, எல்லா உயிரினங்களுக்கும் அத்தியாவசியமான ஓர் அடிப்படை வாழ்வாதாரம், இங்குக் கேவலப்பட்டு, மற்ற வர்களைத் தாக்கவும், அழிக்கவும், அடிமைப்படுத்தவும் உபயோகப்படும் ஓர் அபாயமிக்க சாதனமாகி விட்டது.

மேலும் காமத்தைப் பற்றியதான புரிதலே வந்துவிடக்கூ டாது என்பது போல், இதைப் பொதுவில் பேச விழைப வர்களைத் தடுக்கும் வண்ணம், காமம் பற்றிப் பேசுவது அநாகரிகம் என்றும் கருத வைத்தாகி விட்டது. இந்தப்

புரிதல் இல்லாத் தன்மையே இங்குப் பல பிரச்சினைக ளுக்கு மூல காரணியாகும்.

இங்குப் பொதுவாக காதலும் காமமும் குழப்பிக்கொள் ளப் படுகிறது. காம இச்சைகள் காதலாகக் கருத்தில் கொள்ளப்படுகின்றன. காதல் என்ற வார்த்தையும் காம இச்சைகளை பூர்த்தி செய்து கொள்ளக் கையாளப்ப டுகிறது. இதையெல்லாம் தாண்டி, நம் உண்மையான உணர்வுகளை வெளிப்படையாகச் சொல்வதற்கான தைரியமும் பலருக்கு இருப்பதில்லை. இதனால் சம யத்தில், நமக்கு உண்மையாகவே ஒருவர் மேல் காதல் உணர்வு ஏற்பட்டாலும், வாழ்நாளை அவருடனே கழிக் கும் விருப்பம் ஏற்பட்டாலும், எங்குத் தன்னை தவறாக காமத்திற்காக நெருங்குவதாக நினைத்து
விடுவாரோ என்ற அச்சம் வந்து தடுத்து விடுவது முண்டு.

நம் நாட்டில் தான் வாத்சாயனர் என்ற ஒருவர் வாழ்ந்து காமசூத்திரம் என்ற ஒன்றைப் படைத்தார். நம் கோவில் சிற்பங்களில் காம நுணுக்கங்களை விவரிக்கும் வண் ணம் சிற்பங்கள் வடிக்கப்பட்டிருக்கின்றன. கஜுராஹோ போன்ற ஆலயங்கள் நிறுவப்பட்டிருக்கின்றன. பல ஏடு கள் காமத்தைப் பற்றி வெளிப்படையாக எழுதப்பட்டி ருக்கின்றன. ஆனால் இன்று ஏனோ, நாம் மிகவும் மூடிய சமூகமாக, வெளிப்படைத்தன்மையை இழந்த சமூக மாக, இயற்கையை விட்டு வெகு தூரம் வந்து விட்ட சமூ கமாக மாறிப்போய் விட்டோம்.

காமம் குறித்தான உரையாடல்கள் வெளிப்படையாக இருக்குமேயானால், நம் சமூகத்தில் நடந்து கொண்டி ருக்கும் வன்புணர்வுகளை, பாலியல் தொந்தரவுகளை, மனப் பிறழ்வுகளின் வழியாய் நடக்கும் இழிவுகளைக் குறைக்கவும், நம் வருங்கால சந்ததியினரை இம்மா திரியான மன, உடல் ரீதியான பிரச்சினைகளிலிருந்து

காக்கவும் வழி வகுக்கலாம். வெளிப்படையாகப் பேசும் பொழுதில், இணைகளுக்குள்ளான நெருக்கம் கூடும், கலவிகள் மேலும் அழகாகும், ஆண் பெண் இருவருக் குமான நட்புகள் ஆரோக்கியமாக தழைக்கும். அப்படிப் பட்ட ஒரு சமூகம் உருவானால், அங்குக் காமம் என்பது அசிங்கமான வார்த்தையாக இருக்காது.

## அத்தியாயம் - 3

# பெண்ணும் சமூகமும்

மாற்றங்கள் சிறிதுசிறிதாக ஏற்பட்டுக்கொண்டிருந்தாலும், இன்னும் நம் சமூகம் ஆணாதிக்க சமூகமாகத்தான் உள்ளது. முக்கியமாக, காமம் சம்பந்தப்பட்ட விஷயங்களில் பெரும்பாலும் இன்றும் அப்படியே இருக்கிறது என்பதே உண்மை.

ஆண்கள் காமத்தைப் பொதுவில் பேசுவது அங்கீகரிக்கப்படுகிறது. பேசவும் செய்கிறார்கள். ஆனால் பெண்கள் பொதுவாக பேசுவதில்லை, அப்படிப் பேசிவிட்டாலும் அவளை மனிதர்கள் பார்க்கும் கோணமே வேறு மாதிரி இருக்கிறது.

எனக்கொரு நண்பன் இருந்தான். நாங்கள் பல விஷயங்களை விவாதிப்போம், பொதுவாகவும், சொந்த விஷயங்களும். எப்பொழுதெல்லாம் எனக்கு மனம் திறந்து ஏதும் பேசவேண்டும் என நினைக்கிறேனோ அப்பொழுதெல்லாம் நான் சொல்வதைப் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருப்பான்.

நிறைய நேரங்களில் அடுத்தவர் நம்மிடம் தங்கள் பிரச்சினைகளைப் பகிரும்போது, தவறாக எண்ணி விடுகிறோம், ஏதோ அவர்கள் தன் பிரச்சினைக்குத் தீர்வு காணவே நம்மிடம் பேசுகிறார்கள் என. உண்மை அதுவல்ல. நம் உணர்வுகளைப் பகிரும் உந்துதல் மட்டுமே அது பல நேரங்களில். தீர்வு காண அல்ல. அடுத்தவரிடம் நம் பிரச்சினைகளைக் கூறுவதன் மூலம், நம் மன பாரம் குறைந்து நாம் லேசாக உணர்வதினால், நமக்கு ஒரு புத்துணர்வு பிறக்கிறது. மூளை தெளிவாக வேலை செய்யத் தொடங்குகிறது. அப்பொழுது நம் பிரச்சினைக்கு நாமே ஒரு தீர்வு கண்டு பிடிப்போம். இந்த

நண்பன் எனக்கு அப்படி ஒரு நண்பனாக இருந்தவன். எப்படியோ ஒரு நாள் நாங்கள் பேசிக்கொண்டிருந்த வேளை எங்கள் பேச்சு காமத்தைப் பற்றியதாக திரும்பி யது. சிறுது நேரம் அதைக் குறித்தான எங்கள் பார்வைக ளைப் பகிர்ந்து கொண்டு விடை பெற்றோம்.

அன்றிரவு அந்த நண்பன் தொலைபேசியில் அழைத்து, நீ என்னுடன் கலவி கொள்வாயா எனக் கேட்டான். அன்று வரை அவன் என்னை அப்படிப்பட்ட கோணத் தில் பார்த்ததில்லை எனவும், அன்று வெளிப்படை யாகக் காமத்தைப் பற்றி என்னுடன் பேசிய பிறகு, என்னுடன் கலவி கொள்ளும் கற்பனையைத் தவிர்க்க இயலவில்லை எனவும் கூறினான். வேறெதைப் பற்றி யும் சிந்திக்க முடியவில்லை எனவும், என்னுடன் கலவி கொள்ளும் ஆசை அவனைப் படுத்துகிறதாகவும், அதற்காகத்தான் தொலைபேசியில் அழைத்ததாகவும் கூறினான். நான் தெளிவு படுத்த முயன்றேன், நாங்கள் பேசும் பல விஷயங்களில் ஒன்றாகத்தான் நான் காமத் தைப் பற்றியும் பேசினேன், மற்றபடி அவனுடன் கலவி கொள்ளும் ஆவல் எனக்கில்லை என. பலவாறாகக் கேள்விகள் கேட்டு, கடைசியில் ஏன் கூடாது என்றான். காமம் என்பது ஓர் உணர்வு, அது தானாக இருவருக் கும் ஏற்பட்டாலே தவிர வலிய வரவழைக்க இயலாது, அதனால் இனி இது குறித்துப் பேச வேண்டாமே எனக் கேட்டுக்கொண்டேன். ஆனால் அவன் அன்றுடன் என் னுடனான நட்பை முறித்துக் கொண்டான். காரணிக ளாக அவன் கூறியது - ஒன்று, அவன் என் மேல் ஒரு குற்றச்சாட்டு வைத்தான். நான் தான் வெளிப்படையாக காமம் குறித்துப் பேசி அவன் மனதில் அந்த உணர்வை ஏற்படுத்தியதாக. இரண்டு, இனி அவனே நினைத்தா லும் அந்த உணர்வு வராமல் என்னுடன் நட்பில் பய ணிக்க அவனால் முடியாது என்றான். எனக்கு அவன்

மேல் பெரிதாகக் கோபம் ஒன்றும் இல்லை. ஆயினும் ஒரு வருத்தம் உண்டு. இத்தனை நாட்கள் அழகாகச் சென்று கொண்டிருந்த நட்பு வெறும் ஒரு காமத்தைக் குறித்தான விவாதத்தில், முற்றுப் பெற்றுவிட்டதே என. இப்படித்தான் காமம் மீதான நம் கண்ணோட்டம் நம்மை அலைக்கழிக்கிறது.

காதலோ, காம உணர்வோ, இயற்கையாக நம்முள் முளைக்கும் தன்மை வாய்ந்தவை. அதை யாரும் மற்றவர் மேல் திணித்து வரவழைக்க இயலாது. இப்படி இருக்க, ஒருவருக்கு நம்மீது இவ்வாறான உணர்வுகள் ஏற்படவில்லை என்பதை ஏன் ஓர் அவமானமாகவோ, இல்லை நம்மை இழிவு படுத்தும் செயலாகவோ பார்க்க வேண்டும்? ஏன் கோபமோ இல்லை காயப்படும் உணர்வோ வரவேண்டும்? யாரும் தன்னைத் தானே வற்புறுத்திக்கொள்ள இயலுமா ஒருவர் மேல் காதல் கொள்ள வேண்டுமென்றோ கலவி கொள்ளும் உணர்வு வரவேண்டுமென்றோ? ஒவ்வொருவரின் நாவிற்கும் வேறுவேறு விதமான ருசி இருக்கும், ஏன் அப்படி எனக் கேள்வி கேட்க இயலுமா? வெறும் உடல் உணர்வு கொண்ட நாவிற்கே இது சரியில்லையெனில், மனமும் சம்பந்தப்பட்ட உணர்வுகளில் இது எப்படி சாத்தியமாகும்?

ஒரு பெண் பொதுவில் காமத்தைப் பற்றிப் பேசினால் (மிகவும் ஆழமாகக் கூட வேண்டாம், சாதாரணமாக அடிப்படை விஷயமாக இருந்தாலும்) ஒரு ஆண் அவளை நெருங்கும்போது, அவள் வேண்டாம் எனச் சொல்வது ஏற்றுக்கொள்ளப் படுவதில்லை. ஒரு ஆண் இல்லை ஆண்களின் முன்னிலையில் ஒரு பெண் காமம் குறித்து உரையாடினாலே, அவள் யாருடனும் படுக்கைக்குச் செல்லத் தயங்க மாட்டாள் என்ற நோக்கிலேயே பார்க்கப் படுகிறாள். காமம் குறித்தான பேச்

சிற்கும் காமம் நிறைந்த பேச்சிற்குமான வித்தியாசத் தைப் பலர் உணர்வதே இல்லை. ஒரு பெண்ணான வள் காமம் குறித்துப் பேசுகிறாளா இல்லை பேசாமல் இருக்கிறாளா என்பதை வைத்தே அவளின் நடத்தை முடிவு செய்யப் படுகிறது. அப்படிப் பேசும் பெண் "அந்த மாதிரி" பெண்ணாகவும், "அந்த மாதிரி" பெண் ஒரு ஆண் நெருங்குவதைத் தடுத்தால், அவனின் கௌர வம் பாழாய்ப் போனதாகவும், அவள் தன்னை அசிங்கப் படுத்துவதாகவும் தோன்றி விடுகிறது, ஓர் ஆணுக்கு.

இது ஒரு பெரிய ஏமாற்றுத்தனமாக தெரியவில்லையா? நான் உணவு பற்றிப் பேசினால், என் வீட்டின் முன்னே தட்டை ஏந்திக் கொண்டு ஆண்கள் வரிசையில் நிற் பதில்லை நான் உணவளிக்கப் போகிறேன் என்று. ஆனால் நான் காமம் பற்றிப் பேசினால் மட்டும், அவர் கள் யோசிப்பதோ, அனுமானிப்பதோ இல்லை, முடிவே செய்து விடுகிறார்கள் நான் அவர்களை படுக்கைக்குத் தான் கூப்பிடுவதாக.

அப்படிப் பேசிய பெண் படுக்க மறுத்தால், முட்டாள்த்த னமான கேள்விகள் அவள் முன் வைக்கப் படுகின்றன. "அப்பொழுது ஏன் காமத்தைப் பற்றி அவ்வளவு வெளிப் படையாக
பேசினாய்? இப்படிப் பேசும் நீ எந்த ஆணுடனும் படுக்கைக்குச் செல்வது தவறென நினைக்க மாட்டாய் என்பது நிச்சயம். அப்படி இருக்க என்னுடன் படுப்ப தற்கு மட்டும் ஏன் முடியாதென்கிறாய்?" இப்படியான பல கேள்விகள். இதற்குப் பிறகும் வேலை ஆகவில்லை யெனில், அவன் தன் கவுரவம் பாழாய்ப் போய் விட்ட தாக நினைத்து, அதற்குக் காரணகர்த்தாவாக அவளின் வெளிப்படையான பேச்சையே சாடி, அவளையும் சாடு வது வழக்கமாகி விட்டது.

வெளிப்படையாக ஒரு பெண் காமம் குறித்துப் பேசி னாலே ஏன் இப்படி ஒரு முடிவிற்கு மனிதர்கள் வர வேண்டும்? ஏனெனில், நம் சமூகத்தைப் பொருத்த வரை, பெண் காமத்திற்குப் பயன்படுபவளே தவிர, மற் றபடி காமத்திற்கும் அவளுக்கும் சம்பந்தமில்லை. ஒரு நல்ல பெண், காமத்தைக் குறித்து வெளியில் பேச மாட் டாள், பேசவும் கூடாது. இந்த இலக்கணத்திற்குள் அடங் காமல், இப்படி வெளிப்படையாகப் பேசினால், அவள் "நல்ல பெண்ணாக" இருக்க வாய்ப்பே இல்லை.

ஒரு பெண் ஆணை காமத்திற்காக வெளிப்படையாக நெருங்க மாட்டாள் என்றும் நம் சமூகம் அனுமானித் தும் இலக்கணம் வகுத்தும் இருக்கிறது. அதனாலேயே, ஓர் ஆண் நெருங்கும்போது, மறுக்கும் பெண்ணையும் ஆண் அவ்வளவு சுலபத்தில் விட்டு விடுவதில்லை. ஆமாம் என்றால், ஆமாம், இல்லை என்றால், இல்லை தானே என்று கேட்டால், ஒரு பெண் எப்படி ஆமாம் என்று வெளிப்படையாக ஒப்புக்கொள்வாள்? அவ ளுக்கு வேண்டும் என்றாலும் வேண்டாம் என தானே சொல்வாள்? இப்படிப் பட்ட மனநிலையினால் தான் வேண்டாம் எனச் சொல்லும் பெண்களையும் மேலும் மேலும் ஆண்கள் தொந்தரவு கொடுத்துக்கொண்டே இருப்பதைப்
பார்க்கிறோம்.

இது ஒரு பக்கம் பைத்தியக்காரத்தனமாகத் தோன்றி னாலும், ஒரு பக்கம் நம் பெண்கள் உடனே ஒப்புக் கொண்டால், அவள் "அந்த மாதிரி" பெண்ணாகப் பார்க் கப்படுவதால், பெண்களும் இப்படித்தான் வேண்டாம் வேண்டாம் என்ற மறுதலித்து விட்டு பிறகு, அவனுக் காக விட்டுக் கொடுப்பது போல் ஒரு வேஷம் தரிக்கி றார்கள்.

அப்படியே ஒரு பெண் இன்னோர் ஆணுடன் கலவி கொள்ளத் தயாராக இருந்தாலும், அவள் அந்த ஓர் ஆணுடன் கலவி கொள்ளத் தயாராக இருக்கிறாள் என்ற பொருள் மட்டுமே கொள்ள முடியுமேயன்றி அவள் எந்த ஆணுடனும் படுக்கைக்குச் செல்லத் தயாராக இருப்பாள் என்ற எண்ணம் எப்படி எழுகிறது? காதல், ஈர்ப்பு, காமம், இதெல்லாம் இவர்களுக்கு என்ன வாக தெரிகிறது? எந்த மாதிரியான புரிதலில் உள்ளார் கள்? இப்படிப் பல கேள்விகள் என்னைக் குடைந்து கொண்டே இருக்க, அக்கேள்விகளே இப்புத்தகத்தின் அடித்தளமாக அமைந்தது எனலாம்.

## பொருளாக்கப்படும் பெண்

பெண் ஒரு பொருளாகப் பார்க்கப்படுவதும், அதை எந்தவிதமான சலனங்களும் இன்றி ஏற்றுக் கொள் வதும் நம் சமூகத்தில் சாதாரணமான விஷயங்களாக ஆகிப்போயின. இதைச் செய்வது ஆண்கள் மட்டுமல்ல, தன்னையே பொருளாக்கிக் கொள்ளும் பெண்களும் நிறைந்த சமூகமே நம்முடையது. ஒரு சிலர் இதை ஏற் றுக்கொள்ளாமல் இருப்பினும், இம்மாதிரியான பார்வை களை எதிர்த்தாலும், பொதுவாகப் பெண்கள் இதைச் சாதாரணமாக கடந்து போவதற்கு, நம் பெண் குழந்தை கள் வளர்க்கப்படும் விதம் ஒரு முக்கியமான மனரீதி யான காரணமாகிறது.

நம் வீட்டு ஆண் குழந்தைகளுக்கு நாம் அலங்காரம் செய்வதில்லை. ஏதோ ஓர் கால் சட்டை, ஒரு மேல் சட்டை போட்டுவிட்டு, “உனக்கென்னடா ராஜா மாதிரி இருக்க” என்று சொல்லிவிட்டுச் செல்லும் நாம், அதே ஒரு பெண் குழந்தையாக இருந்தால், பூ சூட்டி, பொட் டிட்டு, சடை பின்னி, அழகழகாக உடை உடுத்தி, “இள வரசி மாதிரி இருக்க, நீ வளர்ந்ததும் உன் அழகிற்கா கவே உன்னைத் தூக்கிச் செல்ல ஓர் இளவரசன் வரு

வான்" என்று கூறியே வளர்த்து, அந்தக் குழந்தையின் மனதில், சிறு வயதிலிருந்தே அலங்காரங்களிலும், தன் அழகின் மேலும் அவள் கவனத்தை மொத்தமாக ஈர்த்து, யார் நமக்கான இளவரசன் என்ற கனவுகளிலுமே லயிக்க வைப்பது நாம் தானே? அவள் வளர்க்கப்படும் முறையிலேயே, அவள் ஒரு பொருளாக, அறிவில்லாத வளாக, அழகானவளாக, மற்றவரை ஈர்க்க வேண்டியது ஒன்றே குறிக்கோளாக வாழ வைக்கப் படுகிறாள்.

இது ஒரு சாதாரண செயலாகத்தான் பெற்றோர்க ளுக்கும் மற்றவருக்கும் தெரியும். ஆனால், இந்தச் செயல் ஒரு பெண் குழந்தையின் ஆழ்மனதில், அவள் எப்பொழுதுமே அடுத்தவர்களைக் கவரும் வண்ணம் நன்றாக அழகாக உடுத்த வேண்டும் என்ற எண் ணத்தை விதைக்கிறது. அவளே அறியாமல் அவளுக் குள் அவள் அலங்கரித்துக் கொள்ளவில்லையெனில் அழகாக இருக்கமாட்டாள் என்றும் ஓர் உணர்வை விதைக்கிறோம். தன்னம்பிக்கை குலைந்து, அழகுச் சாதனங்களை பயன்படுத்த அவளைத் தூண்டுகிறது. இப்படித்தான் நாம் பெண் பிள்ளைகளை வளர்க் கிறோம். எப்பொழுதும் பெண்மையையும் அழகையும் இணைத்தே பார்க்கும் தன்மையைக் கொண்டிருக்கி றோம். நாம் சிந்திக்காமலே, அவள் மற்றவர் கண்களில் அழகாகத் தெரிய வேண்டும் என்பதை ஒரு பெண் ணின் வாழ்நாள் குறிக்கோளாக்கி விட்டோம். அவள் பதின்ம பருவத்திற்கு வரும் தருவாயில் இயற்கையின் இனக்கவர்ச்சி உணர்வானது தான் அலங்காரம் செய்து கொண்டு அழகாகத் தோற்றமளித்தால் தான் அழகான, அறிவான ஆண் தன்பால் கவரப்படுவான் என நினைக் கத் தலைப்படுகிறாள்.

மற்றவர் கண்ணிற்கு நாம் அழகாகத் தெரிய வேண் டும் என்ற உந்துதல், வருடங்கள் ஏற ஏற அதிகமாகி

றதே தவிர குறைவதில்லை. (இது தான் மத்திம வயதை எட்ட எட்ட பெண்களுக்கு தனக்கு வயதாகிறது இனிக் கவர்ச்சியாக இருக்க மாட்டோமோ என்ற ஒரு தாழ்வு மனப்பான்மையை தருவிக்கிறது. இதுவே ஓர் ஆணுக்கு இந்தத் தாழ்வு மனப்பான்மை அவ்வளவு எளிதில் வரா ததிற்கும் காரணம்). ஆக இங்கிருந்து தான் ஒரு பெண்ணைப் பொருளாக்கும் பயணம் தொடங்குகிறது. இதைத் தொடக்கி வைப்பதே பெற்றோர்கள் தான்.

ஓர் ஆணாதிக்க சமூகத்தில், பெரும்பாலான மதங்களே பெண் என்பவள் ஆணிற்காகத்தான் படைக்கப்பட்டி ருக்கிறாள் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தி இருக்கும் சமூகத்தில், ஒரு பெண் பொருளாக மட்டுமே பார்க்கப் படுவதில் ஆச்சர்யப்பட எதுவுமே இல்லை. உண்மை யைச் சொல்ல வேண்டுமானால் தான் பொருள் என்ற நிலையை ஏற்க மறுக்கும் பெண் வேற்று கிரக பெண் போல் பார்க்கப்படுகிறாள்.

ஓர் ஓய்வான ஞாயிறு மாலை ஒரு புத்தகத்தில் ஆழ்ந்தி ருந்தேன். அப்பொழுது என் வாட்ஸப்பில் ஒரு செய்தி வந்ததற்கான சப்தம் வந்ததும், அதை எடுத்துப் பார்த் தேன். அதில் ஒரு படம் வந்திருந்தது. ஒரு பெண்ணின் இரண்டு மார்பகங்கள் பல வர்ணங்கள் தீட்டப்பட்டு அதைச் சுற்றி ஒரு அலங்கார நாடா கட்டப்பட்டு ஒரு பரிசுப்பொருள் போலக் காட்சி அமைப்பு செய்திருந்தது. எனக்கு அதிர்ச்சி என்னவென்றால், இதை அனுப்பியது என் மதிப்பிற்க்குரிய பல வருடகால நண்பன் ஒருவன்.

எனக்குக் கோபமும் அருவருப்பும் தோன்ற அவனுக்கு இப்படிச் செய்தி அனுப்பினேன். “இந்த மாதிரி ஒரு படத்தை நீ எப்படி அனுப்பலாம்? இதை உன்னி டமிருந்து நான் எதிர்பார்க்கவில்லை. எனக்கு மிக வும் அதிர்ச்சியாக இருக்கிறது” என. இதை விடக் கொடுமை என்னவென்றால் அவனின் எரிச்சலான

பதில். "உனக்கென்ன கோளாறு? இதை ஏன் இவ்வளவு பெரிய விஷயமாக எடுத்துக் கொண்டு பேசுகிறாய்? பார்க்க சுவாரசியமாக இருந்தது, அதனால் உனக்கு அனுப்பி வைத்தேன். இந்த மாதிரி நீ கோபப்பட இதில் என்ன இருக்கிறது? ஒரு வேளை உனக்கு வயதாகி விட்டது போல, உனக்கு நகைச்சுவை உணர்வு வற்றிப்போய் விட்டது போல" என்று.

அவனின் பேச்சு எனக்கு ஓர் ஆயாச உணர்வை கொடுத்தது. ஒரு பெண்ணின் உடல் உறுப்பை ஒரு பொருளாக பாவிப்பது நகைச்சுவை உணர்வில் சேருமா? இப்படித்தான் தினமும் பெண்களின் உடல் எப்பொழுதுமே ஒரு பொருளாக, அதிலும் போகப் பொருளாக, பலரால், பல தளங்களில் பேசவும் பார்க்கவும் படுகிறது. இவை எல்லாம் எவ்வளவு சாதாரண நிகழ்வாக ஆகிவிட்டனவென்றால், சில பெண்களும் இவற்றை எல்லாம் சிந்திக்காமலே அவர்களும் இதைப் போன்ற பேச்சுக்களை நகைச்சுவையாகவே நினைத்துக் கடக்கின்றனர். வலைத் தளங்களில் வரும் பல நகைச்சுவை பரிமாற்றங்கள் இவ்வகையிலேயே இருந்தாலும், யாரும் அது குறித்துப் புருவம் கூட உயர்த்தாமல், முகம் சுளிக்காமலேயே கடந்து விடுகின்றனர். இதை நாம் கேள்வி கேட்டால், நமக்கு நகைச்சுவை உணர்வே இல்லை எனக் குற்றச்சாட்டு வைக்கப்படுகிறது.

இந்திய எழுத்தாளர்களின், முக்கியமாக கவிஞர்களின் எழுத்துக்களைப் படித்தால், நமக்குத் தெரியும், பெண் என்பவளை அவர்கள் எல்லோரும் ஒரு மலர் என்றோ, நிலா, பூமி என்றெல்லாமோ வர்ணித்திருப்பார்கள். பெண் என்பவளை எங்குமே உயிரற்ற பொருட்களுடன் தான் ஒப்பீடு செய்திருப்பார்கள். உணர்வுள்ள, உயிருள்ள ஒரு மனித ஜீவனாக அவளைப் படைப்பதே இல்லை; மாறாக இவர்களின் எல்லா எழுத்துக்களிலும்

ஆண் என்பவன் மட்டும் எப்பொழுதும் மனிதப் பிறவியா கவே பார்க்கப்படுவான்.

எது எப்படி இருந்த போதிலும் நம் சமூகத்தில் இருக் கும் பெண்கள் இதைப் பற்றி எல்லாம் ஆழமாகச் சிந் திப்பதாக தெரியவில்லை. மேலோட்டமாகப் பார்க்கை யில் இப்படிப்பட்ட ஒப்பீடுகள் பெரிய தாக்கத்தை ஏற் படுத்தாததாக தோன்றலாம். ஆனால், உளவியல் ரீதி யாகப் பெண்கள் ஆண்களுக்காக படைக்கப்பட்டதான கருத்து வேரூன்றிக்கொண்டு தான் இருக்கும். இதன் காரணமாகவே, காமம் என்று வரும்பொழுது, ஆணுக்கு, பெண் ஒரு போகப்பொருளாகவே தெரிகிறாள். இதை ஏற்றுக்கொள்வதில் பெரிய எதிர்ப்பு எதுவும் அவளும் காட்டுவதில்லை என்றே தோன்றுகிறது. அவள் ஏற்றுக் கொண்டு விட்டாள் இங்கு பெண் என்பவள் தன் உணர் வுகளை வெளிப்படுத்தலாகாது என்று!.

# அத்தியாயம் - 4

# உடல் — உள்ளம் சங்கமிப்பு

"காமம் என்பது உணர்வின் இயக்கம்"

— Mae West

சிலருக்குக் கலவி என்பது இரண்டு உடல்கள் ஒன்று சேர்வது மட்டுமே. பலருக்கோ இது விந்து வெளியேற் றத்திற்கான ஓர் அவசர இயக்கம் மட்டுமே. என்னைப் பொருத்தவரை அன்பில்லாத, காதல் இல்லாத ஒரு கல வியை விட, சுய இன்பமே மேலானது என்றே கூறுவேன்!

தொண்ணூறு சதவிகித மனிதர்களுக்குக் கலவி என் பது இரு மனமும், உடலும் சேர்ந்து சங்கமிக்க வேண் டிய நிலை என்பது புரிவதில்லை. இது புரிந்தால், யாரும் எவரையும் உபயோகிக்கும் பொருளாகப் பார்க்க மாட் டார்கள். இந்த நிலையை ஏற்றுக்கொள்ளாததால் தான் இன்று காமம் சார்ந்த இத்தனை உளவியல் பிரச்சினை கள் மண்டிக்கிடக்கின்றன.

ஆனால் யார் காதலைப் பற்றியோ அன்பைப் பற்றியோ கவலை கொள்கிறார்கள்? துரித உணவு என்ற பழக்கம் வழக்கத்தில் வருமுன்னே துரித கலவி என்பது வழக் கத்தில் வந்திருக்குமெனவே எண்ணுகிறேன். உண் மையில் பார்த்தோமானால், இந்த துரித உணவகங்க ளில் நாம் பிட்சாவும் பர்கரும் சாப்பிடுவதற்குச் செல வழிக்கும் நேரம் கூட நம் படுக்கை அறையில் கலவி கொள்ளச் செலவழிப்பதில்லை. அதனாலேயே, இவ்வ ளவு கேவலமான ஒரு நிலைக்கு காமம் என்ற உணர்வு, உணர்வின் வெளிப்பாடாக இல்லாமல், வெறும் உடல்

உந்துதலின் வெளிப்பாடாக மட்டுமே தள்ளப் பட்டிருக் கிறது.

“காதலின் வெளிப்பாடாக வைத்துக்கொள்ளும் கல விக்கு நேர வரை முறைகளோ எல்லைகளோ கிடை யாது; அவர்கள் மனமானது கலவியில் ஈடுபட்டுக் கொண்டே தான் இருக்கும். இரண்டு உடல்களும் சந் திக்கும் நேரம் அது ஒரு கோப்பை நிரம்பி வழி வது போல் தான்; அவர்கள் இருவரும் மணிக்கணக் கில், நாட்கணக்கில் கூடச் சேர்ந்தே இருப்பார்கள்; ஒரு நாள் தொடங்கும் அவர்கள் நடனம் அடுத்த நாள் வரை கூட போகலாம்; அத்தனை மகிழ்வை இருவரின் அரு காமையில் அவர்கள் உணர்வார்கள். ”அவர்களுக்கு இல்லை பதினோரு நிமிடங்கள்” என்று காதலினாலான கலவியை சிலாகித்துக் கூறுகிறார் Paulo Coelho தன் Eleven Minutes என்னும் புத்தகத்தில்.

நம் சமூகத்தில் கலவி என்பது வெறும் உடல் சம்பந் தப்பட்ட ஒரு நிகழ்வாகவே ஆகிவிட்டது, அது அப்படி இல்லை என்று உணர்த்த இந்த சமூகமும்  ஒரு முயற் சியும் எடுப்பதுமில்லை. காமம் என்ற ஒரு அத்தியாவ சிய விஷயத்தை இருட்டில் வைத்து, மனிதர்களைச் சரி யாக, நல்ல முறையில் அதை கற்றுக்கொள்ள விடாமல் செய்ததின் பலன், அந்தோ, நாமெல்லாம் ஓர் ஆணின் விந்துநீர் வெளியேறினாலோ, இல்லை ஒரு பெண் ஓரிரு குழந்தைகளைப் பெற்றுவிட்டாலோ, மனிதர்க ளின் காம உணர்வுகள் பகிரப்படுகின்றன, அவர்கள் அதில் மகிழ்வாகவும் இருக்கிறார்கள் என்ற ஒரு பொய் யான பிம்பத்தை ஏற்படுத்தி வாழ்ந்து கொண்டிருக்கி றோம்.

"அன்பில்லாத கலவி என்பது ஓர் அர்த்தமில் லாத அனுபவம்; காமம் என்பது உயிர்களின் வேர்.

அதை முழுமையாகப் புரிந்து அனுபவித்தல் அவசியம். ஆனால் பெரிய மனிதர்கள் பலர் காம உணர்வின் உந்துதலால் தன்னிலை மறந்து, அதல பாதாளத்தில் விழுந்த கதைகள் உண்டு. உண்மையான காமம் என்பது தோற்காது ஏனெனில் அங்கு இரண்டு உள்ளங்கள் இணைந்திருக்கும் அன்பால்; அடிப்படையில் காமம் என்பது மகிழ்வைக் கொடுப்பதில்லை, அதைக் கொடுக்கும் மனிதரே அந்த மகிழ்வைக் கொடுக்க இயலும்; காமம் என்பது ஒரு கலை மட்டுமல்ல, அதை முழுமையாக அனுபவிக்க இருவர் மனதின் ஒற்றுமையும் வேண்டும், தெளிந்த இதயமும் வேண்டும்; உடல் இன்பத்திற்கானது மட்டுமல்ல கலவி என்பது, இணைந்திருவர் இருப்பதினால் வரும் உணர்வு, அந்த உணர்வினால் வரும் ஒரு சௌகர்யம் அந்த அருகாமையில் ஏற்படும் ஒரு புளங்காகிதம் எல்லாம் சேர்ந்தது தான் ஒரு முழுமையான கலவியாகும்.

அன்பு என்பது இருவருக்குள் ஏற்படும் ஒரு வேதியியல் இணைப்பு எனில், காமம் என்பது இருவருக்குள் ஏற்படும் ஒரு உயிரியல் இணைப்பாகும்."

— Anonymous

## அத்தியாயம் - 5

# ரகசியம், ஒடுக்கம் மற்றும் கல்வி

நம்மில் எத்தனை பேர் காமம் குறித்துப் பொதுவில் பேசத் தயாராக இருக்கிறோம்? நண்பர்கள் கூடி ஒரு பெண்ணின் அங்கங்களைக் குறித்துப் பேசுவதைப் பற் றியோ, இல்லை தன் இணையுடன் தான் வைத்துக் கொண்ட புணர்வைப் பற்றி பேசுவதையோ நான் குறிப் பிடவில்லை இங்கு. ஓர் ஆரோக்கியமான விவாதமோ, கருத்து பரிமாற்றமோ, நம் அன்றாட வாழ்வில் அது எப்படி ஒரு பங்கு வகிக்கிறது என்றோ, ஓர் ஆணிற்கும் பெண்ணிற்குமான பிணைப்பை அது எப்படிப் பலப்ப டுத்துகிறது என்றோ, காம சூத்திரங்கள் பற்றியோ நாம் பேசுகிறோமா என்றால் பொதுவாக இல்லை என்பதே உண்மை.

நம் முன்னோர்களுக்கு முன்னோர்கள் காமம் என்பதை ஓர் இயற்கையான உணர்வாக ஏற்று அதைக் கொண் டாடியே வாழ்ந்திருக்கிறார்கள். அதை ஓர் அவமா னத்திற்குரிய விஷயமாக கருதியதாக தெரியவில்லை. ஆனால் ஏனோ எப்படியோ சில நூற்றாண்டுகளா கக் காமம் என்பதை மறைத்து வைக்க வேண்டிய ஓர் அவமான விஷயமாகத் திரித்து, அதை ஒரு ரகசி யப் பொருளாக ஆக்கிவிட்டபடியால், மனித மனங்களும் செயல்களும் ஒடுக்கப்பட்டுவிட்டன.

காமம் குறித்தான கல்வி மிகவும் அவசியம்.

பிள்ளைகள் பதின்ம பருவத்தை அடையும் நேரம், பெற் றோர்களும், ஆசிரியர்களும் இது குறித்தான விழிப்பு ணர்வை அவர்களுக்கு ஏற்படுத்துவது மிகவும் அவசிய

மாகிறது. "அதெல்லாம் காலம் வரும்போது அவர்களே கற்றுக்கொள்வார்கள்" என்ற பொறுப்பில்லாத பதில்கள் தான் பொதுவாக எல்லோரிடமிருந்தும் வருகிறது. நாம் இதைக் குறித்து பேசாவிட்டால் அவர்கள் தெரிந்து கொள்ள மாட்டார்கள் என இல்லை. ஆனால் அதைத் தவறாக புரிந்து கொள்ளும் சாத்தியமுண்டு. "காலம் வரும்போது" என்பது ஒரு விட்டேத்தியான வாசகம். காலம் எப்பொழுது வரும் என யாருக்காவது தெரியுமா?

நம் சமூகத்தின் வாழ்வு முறையில், நாம் பொதுவாக எல்லாவற்றையுமே நம் பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுத்தே, வேற்று சிந்தனைகள் தலையெடுக்காமல், தானாக எதையும் ஆராய்ந்து தெளிய வாய்ப்பளிக்காமல் வளர்க்கிறோம். ஆனால் காமத்தை மட்டும் மறைத்து விடுகிறோம். அது மட்டுமின்றி அவர்களுக்குத் திருமண வயது என்று ஒன்றைக் கணக்கிட்டு, திருமணம் புரியும் வரை அவர்கள் காமம் என்னும் ஒன்றைத் தெரிந்து கொள்ளாமல் இருக்க நிறையவே மெனெக்கெடுகிறோம்.

ஒரு குழந்தை பூப்பெய்தியவுடன் (ஆண் பிள்ளைகளுக்கும் பூப்பெய்தும் பருவம் உண்டு. அவர்களுக்கும் மாதம் ஒருமுறை மாதவிடாய்ச் சுழற்சி என்று இருப்பதாக அறிவியல் வல்லுநர்கள் கூறுகிறார்கள். ஆனால் பெண்ணைப்போல் அவர்களுக்கு வெளியில் தெரிவதில்லை எனவும் கூறுகிறார்கள்!) காம உணர்வு என்பது அவர்கள் உடலில் இயற்கையாக துளிர் விட்டேதான் தீரும். பெற்றோர்கள் இது குறித்து ஒரு வெளிப்படையான கலந்துரையாடலைச் செய்யவில்லையெனில், அவர்கள் தன் உடல் மாற்றத்திற்கான காரணம் குறித்தும், அந்த நேரத்தில் ஏற்படும் சில உந்துதல்களைக் குறித்தும் குழப்பத்தில் தான் ஆழ்ந்துவிடுகிறார்கள். இதனால் அவர்கள் மனதால் ஒரு தடுமாற்றத்திற்கு ஆட்படுவதோடு, அந்தக்

காலக்கட்டத்தில் கவனம் கொள்ள வேண்டிய படிப்பு, வாழ்வின் முன்னேற்றம் இதிலெல்லாம் சரிவர ஈடுபட முடியாமல் தவிப்பதும் உண்டு.

நாம் காமம் என்ற ஒன்றை மறைத்து மறைத்து வைக்க, அதை ஓர் அவதூறுச் சொல்லாகப் பயன்படுத்த பயன் படுத்த, பிள்ளைகளுக்கு அதன் மேலான ஆர்வம் அதி கரிக்கிறது; அதைத் தேடியோ, இல்லை புரிதலைத் தேடியோ வெளியில் செல்லும்போது, பல இன்னல்க ளுக்கு ஆளாகும் வாய்ப்பும் உண்டாகிறது.

சிறு வயதிலேயே வன்புணர்விலும், மற்றவருக்குப் பாலி யல் தொல்லைகள் கொடுப்பதிலும் ஈடுபடும் ஆண்கள் இருக்கிறார்கள். வளர்ந்த ஆண்களாலும், பெண்களா லும் பாலியல் தொந்தரவிற்கு ஆளாக்கப்படும் ஆண்/ பெண் பிள்ளைகளும் இருக்கத்தான் செயகிறார்கள்.

நம் சமூக வளர்ப்பில் பெண்களுக்குக் கற்பு என்ற ஒரு நிலையினால், சிறு வயதில் ஏற்படும் பாலியல் தொந் திரவு அவர்களுக்குள் ஒரு பயத்தையும், தான் ஏதோ தவறிழைத்து விட்ட ஒரு குற்ற உணர்வையும் ஏற்படுத்தி விடுகிறது. இப்படி ஒரு கற்பு நிலை போதிக்கப் படாத தால், ஆண் குழந்தைகளுக்குப் பெரிய குற்ற உணர்வு தோன்றாததால், இதில் நாட்டம் அதிகமாகிறது. இதை யும் கடந்து சென்று புத்திசாலிகளாக பிழைத்துக்கொள் ளும் குழந்தைகளும் உண்டு. இதிலேயே மனம் லயித்து இதனால்
மற்ற வேலைகளில் கவனம் தொலைத்து வாழ்வையே கெடுத்துக்கொள்ளும் குழந்தைகளும் உண்டு. பொது வாக இப்படிப் பாதிக்கப்படும் பிள்ளைகள் பெற்றோர்க ளிடமோ அல்லது தான்
சார்ந்திருக்கும் மற்ற பெரியவர்களிடமோ இதை வெளிப்படுத்துவதில்லை. அதற்கான சூழ்நிலையை நம்

சமூகத்தில் பெற்றோர்கள் / பெரியவர்கள் உருவாக்குவ தில்லை.

இது ஒரு விதமான பிரச்சினை என்றால், மூடி வைக் கப்பட்ட, ஆனால் உள்ளுக்குள் வளர்ந்து கொண்டிருக் கும், காம உந்துதலானது, யாரிடமும் பேசித் தெளிந்து / தெரிந்து கொள்ள முடியாத காரணங்களால், ஒரு பெண் ணிற்கு ஆணின் மீதோ, ஓர் ஆணிற்கு பெண்ணின் மீதோ ஏற்படும் இனக்கவர்ச்சியானது அவர்கள் மேல் ஏற்பட்டிருப்பது காதல் என்று தவறாகப் புரியப்படுகிறது. இப்படியாக நாம் நம் சமூகத்தில் பேசாமல் மறைத்து மறைத்து வைக்கப்படும் காமம் என்ற ஒற்றைச் சொல், ஒற்றை உணர்வானது, சிறு பிள்ளைகள் முதல், வயது முதிர்ந்தவர்கள் வரையிலானவர்கள் வாழ்வில் எப்பொ ழுதும் ஒரு குழப்பத்தை உருவாக்கிக் கொண்டே இருக் கிறது என்று சொன்னால் மிகையில்லை.

நாம் என்ன தான் மூடி மூடி வைத்தாலும் இயற்கை உந்துதல் என்பதை நம்மால் தடுக்க முடியாதல்லவா? ஆக விடலைப் பருவத்தில் பிள்ளைகள் இந்த உணர்வு என்ன என்பதையும், எப்படி இதற்குத் தீர்வு காண் பது என்பதையும் வெளிப்படையாகப் பெரியவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள இயலாததால், பல விதங்க ளில் திருட்டுத்தனமாகக் கற்றுக்கொள்ள முயற்சி செய் கிறார்கள். திருமணம் என்ற ஒன்று நடக்கும் வரை பிள் ளைகள் கன்னி கழியாதவர்களாகவும், காமம் பற்றி எது வும் தெரிந்து கொள்ளாமல் இருப்பதையுமே பெற்றோர் கள் / பெரியவர்கள் விரும்புகிறார்கள். ஆனால் அவர் கள் அப்படித்தான் இருக்கிறார்களா என்றால், அப்படி நம்ப நாம் விரும்புவதால், நம் கண்களை நாமே கட் டிக்கொண்டு, அவர்கள் கண்களைக் கட்டிக்கொண்டு உலா வருவதாகச் சொல்லிக் கொள்கிறோம். அவர்கள் இதைப் பற்றி அறியக் கூடாது என்பதில் ஆர்வம் காட்டும்

நாம், அறிந்து கொள்கிறார்களா? அப்படி அறிந்து கொள் வதாக இருந்தால், எப்படி அறிகிறார்கள்? சரியாகத்தான் அறிந்து கொள்கிறார்களா என்பதைப் பற்றி என்றாவது கவலை கொள்கிறோமா என்றால், இல்லையெனவே வெட்கித் தலை குனிய வேண்டும்.

சில பிள்ளைகள் எப்படியாவது மற்றவருக்குத் தெரியா மல் ஓரளவிற்குப் புத்தகம் படித்தோ, நண்பர்களுடன் பேசியோ, நீலப் படங்கள் பார்த்தோ, இல்லை இன்னும் கொஞ்சம் தைரியம் இருக்கும் பிள்ளைகள் நேரடியா கக் கலவியில் ஈடுபட்டோ தெரிந்து கொள்கிறார்கள். அனால் சில பிள்ளைகளோ, பெற்றவர்களுக்குக் கீழ் படிந்தவர்களாகத் திருமணம் வரை ஒன்றுமே தெரிந்து கொள்ளாமலே காலம் கடத்துகிறார்கள். முன்னவர்கள் தவறாகப் புரிந்து கொள்ளும் சந்தர்ப்பத்தையும், பின்ன வர்கள் புரிந்துகொள்ளவே செய்யாத சந்தர்ப்பத்தையும் உருவாக்குவது காமத்தை மூடி மறைக்கும் நம் சமூ கமே. இது சரி என நினைத்தால், கண்டிப்பாக இல்லை, ஒன்றுமே தெரியாத இருவர் திருமணம் புரிந்து, ஒருவ ருக்கு மற்றொருவரின் எதிர்பார்ப்புகள் என்னவென்று கூடத் தெரியாமல் போக, முதல் இரவிலேயே முடிந்து விடும் திருமணங்களும் உண்டு, தனக்குத் தான் எல் லாம் தெரியும் என்ற மமதையில், மற்றவரின் தேவை புரிய முயலாமல், குலைந்து போகும் தாம்பத்தியங்களும் உண்டு.

உண்மையில் சொல்லப் போனால், எதற்காகக் காத் திருந்து திருமணம் புரிகிறார்களோ, அதுவே இல்லா மல், வெறும் பிள்ளைப் பேறு வரை மட்டுமே உடலுறவு கொண்டு விட்டு, அதன் பிறகு தனியே தவித்துக் கிடக் கும் தம்பதியர் ஏராளம்.

நீலப் படங்களைப் பார்த்து காமத்தைக் கற்றுக்கொள் ளும் விடலைப் பிள்ளைகள் உணர்வதில்லை அவர்

கள் பார்க்கும் காட்சிகள் வெறும் நடிப்புகள் என்று. அங்கு மன உணர்வுகள் காட்டப்படுவதில்லை. உடல் உணர்வுகளையும் அவர்கள் நடித்தே காட்டுகிறார்கள். இங்கு 'காதலில் இருவர் கருத்தொருமித்து' என்ற பேச்சுக்கே இடமில்லை. ஆக, கலவி என்பதை ஓர் அன்பின் வெளிப்பாடாக இல்லாமல், இரண்டு உடல்களின் தேவைப் பரிமாற்றமாக மட்டுமே கற்றுக்கொள்ளப்படுகிறது.

இந்தப் பிரச்சினைக்கெல்லாம் காரணம் பாலியல் கல்வி என்பது பள்ளியிலோ கல்லூரியிலோ நம் நாட்டில் இல்லவே இல்லை. திருமணத்திற்கு ஒரு பெண்ணோ ஆணோ தகுதி பெறவேண்டிய அவசியமே இல்லை நம் சமூகத்தில். ஒரு பெண் மனைவி ஆவதற்கோ, ஓர் ஆண் கணவன் ஆவதற்கோ இல்லை இருவரும் பாலுறவு கொள்வதற்கோ, பிள்ளை பெற்று பெற்றோர்கள் ஆவதற்கோ ஒரு தகுதியும் நிர்ணயிக்கப்படவில்லை. ஏன் ஓர் ஆணும் பெண்ணுமாக இருந்தால் போதாதா என்றால், இன்னும் நாம் காட்டுவாசிகளாகவே இருந்திருந்தால் போதுமானதாக இருந்திருக்கும். மற்ற எல்லாவற்றிலும் நாகரிகம் பேசும் நாம் இதில் மட்டும் எல்லாம் தெரிந்து தான் செயல்பட வேண்டும் என்ற எண்ணம் இல்லாமல், சொல்லித் தெரிவதில்லை மன்மதக்கலை என்று வசனம் பேசிக்கொண்டு திரிகிறோம். இங்கு வாழ்வைப் பின்னே தள்ளிவிட்டு ஆனால் வாழ்வதாக வெளி உலகிற்கு பறைசாற்றிக் கொண்டிருக்கிறோம்.

வாழும் கலையை எத்தனை பள்ளிகள், கல்லூரிகள், இல்லை குடும்பங்கள் கற்றுக்கொடுக்கின்றன குழந்தைகளுக்கு? திருமணத்திற்குப் பிறகு தான் கலவி கொள்ள வேண்டும் என்று இலக்கணம் வகுத்திருக்கிறார்கள் சரி. அந்த இலக்கணத்திற்கு ஒரு பெண்ணோ ஆணோ தகுதியாகி விட்டனரா என எந்தப் பெரிய

வர்களாவது சிந்திக்கிறார்களா என்றால், கண்டிப்பாக இல்லை. இருவருக்கும் ஒரு வயதை நிர்ணயித்து வைத் திருக்கிறார்கள். ஆண் என்பவன் வயதிற்கு வந்து பண மும் சம்பாதிக்கத் தெரிந்திருக்க வேண்டும், பெண் ணிற்கு அந்தத் தகுதி கூடத் தேவை இல்லை.

பிள்ளைகளின் மூன்று / நான்கு வயதிலிருந்து படிப் பின் முக்கியத்துவத்தையும், பின்னாளில் அது நமக்குப் பொருள் ஈட்ட எப்படி உபயோகப்படும் என்பதையும், பொருள் ஈட்டுவது, அதுவும் நிறைய ஈட்டுவது எத் தனை அவசியம் என்பதையும் இரவு பகலாக, ஒவ் வொரு நாளும் போதிக்கும் நாம், அவர்கள் வாழ்வதற்கு என்ன வேண்டும் என்று கற்றே கொடுப்பதில்லை. நாமே வாழ்வதில்லை இங்கு, எப்படி மற்றவருக்குக் கற்றுத் தர இயலும்? இங்கு யாரும் தன் வாழ்வை வாழ்வதே இல்லை. மற்றவர் எதை வாழ்வெனக் காட்டுகிறார் களோ அதைத்தான் நாமும் செய்கிறோம். அது நமக்கு மகிழ்வைத் தராவிட்டாலும், அதைத்தான் அடுத்த தலைமுறைக்கும் கடத்துகிறோம். ஆக இங்குத் தனி மனிதராக யாருமே வாழ்வதில்லை.

ஒரு பெண்ணிற்கோ, ஆணிற்கோ, திருமண பந் தத்திற்குள் நுழையும் முன்பு, இன்னோர் உயிரைத் தன் வாழ்வுடன் இணைக்கும்பொழுது, அது எத்தை கைய பொறுப்பு என்பது சொல்லிக் கொடுக்கப்படு வதே இல்லை. புதிதாக ஏற்படுத்திக்கொள்ளும் உறவை எப்படி வளர்த்துச் செழிக்க வைக்க வேண்டும் என்ப தைக் குறித்து யாருமே பேசுவதில்லை. திருமண பந் தம் என்ற ஒன்று ஏற்படுத்தி இருப்பதே, காம உணர் வுகளுக்கு வடிகாலாக, அத்தேடலின் ஓர் எல்லையாக இருப்பதற்குத் தானே? நேரடியாக சொல்லிக்கொடுக்க தயக்கமிருந்தாலும், ஒரு நல்ல புத்தகமாவது வாங்கிக் கொடுத்துப் படித்து அறிந்து கொள்ளச் சொல்லலாமே?

செய்கிறோமா யாராவது என்றால், கண்டிப்பாக இல்லை. ஏனெனில் இங்குக் காமம் கொள்ளலாம், கலவியில் ஈடு படலாம், பிள்ளை பெறலாம், ஆனால் அது குறித்துப் பேசுவது மட்டும் தவறான, வெட்கத்திற்குரிய விஷயமா கிப் போனது தான் ஆச்சர்யம்!

பாதுககாப்பான உடலுறவு கொள்வதே ஒரு திருமணத் தின் நோக்கம். ஆனால் இங்குப் பாதுகாப்பு என்பது உடல் குறித்தான, உடல் ஆரோக்கியத்திற்கு தீங்கு விளைவிக்காத ஒரு விஷயமாகத்தான் பார்க்கப்படுகி றதே தவிர, உள்ள ஆரோக்கியத்தைக் குறித்து யாரும் கவலையே கொள்வதில்லை. எத்தனை இணையர்கள், தன் இணையருக்கு என்ன பிடிக்கும், என்ன பிடிக்காது, எது கிளர்ச்சி செய்யும், எது அருவருப்பை கொடுக் கும் என்று தெரியும்? தெரிந்துகொள்ள முற்படுகிறார் கள்? தெரியவைக்க முயல்கிறார்கள்? இப்படியாக உடல் ரீதியாக மட்டும் ஆரோக்கியம் தேடும் உறவுகளில், உணர்வுகள் பின் தள்ளப்பட்டால், அதன் விளைவு கள் மனத்தைப் பாதிக்காதா? அந்தப் பாதிப்பு உடலு றவை மகிழ்வாக வைத்துக்கொள்ளுமா? நாம் உண்மை களைப் புரிந்துகொள்வதில்லை, இல்லை புரியாதது போல் இருக்கிறோம். ஓர் ஆரோக்கியமான உறவு என் பது உடல் சம்பந்தப்பட்டது மட்டுமில்லை. உணர்வுகள் மதிக்கப்படாத இடங்களில் எப்படி ஓர் ஆரோக்கியமான அழுத்தமான உறவு நீடித்து நிற்கும்?

எத்தனை பெண்கள் ஆண்களின் அணுகுமுறை தவறி னால், உடலுறவு கொள்வதற்கே நடுங்குகிறார்கள் தெரி யுமா? எத்தனை ஆண்கள் வெறுப்பேறிக் கிடக்கிறார் கள் தெரியுமா பெண்களின் ஒத்துழையாமையினால்? எத்தனை ஆண்கள் கலவியின் போது அந்தப் பெண் ணின் கண்களை பார்க்கிறார்கள், அவள் மகிழ்வுறுகி றாளா இல்லையா எனத் தெரிந்து கொள்ள? எத்தனை

இணையர்கள் தங்கள் உடல்களை அர்ப்பணிக்கிறார் கள் அன்புடனும், பிற உயிர் என்ற மரியாதையுடனும்? இங்கே ஒருவருக்கு எடுக்கவும், இன்னொருவருக்குக் கொடுக்கவும் தான் கற்றுக் கொடுக்கப் பட்டிருக்கிறதே யன்றி, இருவருக்குள்ளும் பகிர்வு என்ற உணர்வு வரு வது மிகவும் அபூர்வமாகவே உள்ளது.

பொதுவாக இங்கு ஆணிற்கு உச்சம் ஏற்பட்டுவிட் டால், சுமுகமாகக் கலவி முடிந்துவிட்டதாக பொருள் கொள்ளப்படுகிறது. பெண் இங்கு குழந்தையை மட் டும் தாங்குபவளில்லை, அவள் ஆணின் அசிரத்தை யையும் தாங்கியே பழக்கப்படுகிறாள். கலவியில், ஆண் இயங்குபவனாகவும், பெண் இயங்காவிட்டாலும் பரவா யில்லை, சும்மா கிடந்தாலும் பரவாயில்லை என்றும் ஆகிவிட்டது ஒரு கேவலமான சூழல். சில பெண்கள், இதை சாதகமாக கொண்டு, ஆணிடம் தனக்கான மற்ற தேவைகளை பூர்த்தி செய்துகொள்ளும் ஆயுதமாக்கிக் கொள்கிறார்கள். சில பெண்கள் வாழ்நாள் முழுவதும் மனதிற்குள் மருகியே சாகிறார்கள். இன்னும் சில பெண் கள் சிறிது காலத்திற்கு பிறகு இசைய மறுத்து ஒதுங்குகி றார்கள். இதை வைத்து இந்தச் சமூகம், பெண்ணிற்குச் சில வருடங்களுக்கு மேல் கலவியில் நாட்டமிருக்காது என்று முடிவு செய்துகொள்கிறது. ஆண் வெளியில் எங் காவது கிடைக்காதா என அலையத் தொடங்குகிறான்.

# அத்தியாயம் - 6

# கழிவறை இருக்கை

"சில நேரங்களில் ஒரு பெண்ணுடன் கலவி கொள்வதென்பது, சுய இன்பத்தின் ஒரு திருப்திகரமான மாற்று வழி"

— Karl Kraus, Australian Journalist

இதில் ஒரே ஒரு வார்த்தையை மட்டும் நான் மாற்ற நினைக்கிறேன். “சில” நேரங்களில் என்பதை “பல” நேரங்களில் என.

நம் சமுதாயத்தில் பெற்றோர்கள் அக்கறை என்ற பெயரிலும், திருத்துகிறோம் என்ற பெயரிலும் குழந்தைகளை எப்படி வேண்டுமானாலும் அடித்து துன்புறுத்தலாம். அனால் உண்மை என்னவென்றால், பெற்றோர்கள் உடலாலும், பொருளாலும் குழந்தைகளைவிட பலசாலிகள். எல்லாவற்றிற்கும் பெற்றோர்களை சார்ந்திருக்கும் குழந்தைகளால் பெற்றோர்களை எதிர்த்து வாழ இயலாது. இதைத் தங்களுக்கு சாதகமாக்கிக் கொண்டு குழந்தைகளின் சுயமரியாதையை / சுயமதிப்பீட்டை முற்றிலுமாக அழிக்க முற்படுகிறோம். இது தான் உடலுறவுகளிலும் நடக்கிறது. பெண்ணைவிட ஆண் உடலால் பலம் மிகுந்தவனாக இருக்கிறான். இயற்கை அவளுக்கொரு துவாரத்தைப் பரிசளித்திருக்கிறது, அவள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், அதற்குள் ஆண் தன் உறுப்பை நுழைத்துக்கொள்ள ஏதுவாக!

ஒரு பெண் விரும்பினாலும் ஓர் ஆணை வன்புணர இயலாது. ஓர் ஆணின் உறுப்பு வீரியம் பெறாமல், கட்டாயப்படுத்தி, ஒரு பெண்ணின் துவாரத்திற்குள் செலுத்த இயலாது. ஓர் ஆணை எழுச்சி பெறச் செய்தால் மட்டுமே

இது சாத்தியமாகும். ஆக, வன்புணர்வு என்பது இங்கு ஒரு பெண்ணால் செய்ய இயலாது.

வளரும் குழந்தைக்காவது ஒரு நாள் தான் பெரியவ ராவோம், பெற்றோரைவிட வலுமிகுந்தவராவோம் என்ற நம்பிக்கை இருக்கும். ஒரு பெண்ணிற்கு அந்த நம் பிக்கையும் இருக்க வாய்ப்பே இல்லை. இப்படி, தான் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் தன் உடலை ஆண் அவன் தேவைக்கு உபயோகிக்க அனுமதித்து வாழும் பெண்களே இங்கு அதிகம். மனோரீதியாகவும், சமூகரீ தியாகவும் மூளைச்சலவை செய்யப்பட்டு, தன் விருப்பத் திற்கு வாழ இயலாது என்பது போல வாழும் பெண்களே இங்கு அதிகம்.

ஒவ்வொரு பெண்ணும் இப்படி, தான் ஒரு ஜடமாக கிடக்க தயாரில்லை என முடிவெடுத்தால், நம் சமூகத் தில் கண்டிப்பாக 50% மேற்பட்ட திருமணங்கள் வாழவே வாழாது.

எங்கோ யாரோ பாலுறவை இப்படிச் சொன்னதாக படித் திருக்கிறேன். அது பொதுவாக இருட்டிலேயே செய் யப்படுவதால், அதை ஒரு குற்றமாகத்தான் கருத முடி யும் என. இருட்டில் செய்வதில் இன்னொரு வசதியும் உண்டு. இருட்டில் மற்றவரின் முகமோ, கண்களோ சரி யாகத் தெரியாது. அதனால், நாம் அனுபவிப்பது போல் அவர்களும் அனுபவித்துக்கொண்டு இருப்பதாக கற்ப னையில் ஒளிந்து கொள்ளலாம். ஓர் இயற்கையான உந் துதலானது நாம் கையாளும் முறையினால் இன்று ஒரு குற்றமாக ஆனது.

பெருவாரியான ஆண்களுக்கு, படுக்கையில், பெண் என்பவள் தன்னைப்போல் உணர்வுகள் கொண்ட ஒரு இணையரில்லை. அவள் அவர்களின் கழிவறையின் இருக்கை மட்டுமே. அவனுக்குத் தன் விந்துவை உந்

தித்தள்ள வேண்டிய நிர்பந்தம், அவசரம். அதற்கொரு துவாரம் வேண்டும். அதற்காகவே தன் காதலியோ மனைவியோ பிறவி எடுத்துக் காத்திருப்பதாக ஒரு எண் ணம். ஆக அவனைப் பொறுத்தவரை அவன் அமர்ந்து விந்துவை வெளியேற்ற அவள் ஒரு கழிவறை இருக்கை மட்டுமே!

இது ஆண்களை மிகவும் இழிவாகப் பேசுவதாக தோன் றலாம். அனால் அவர்கள் அவளை கழிவறை இருக்கை என நினைத்து இப்படி நடப்பதில்லை. அவர்கள் நடந் துகொள்வது அப்படிப்பட்ட ஓர் எண்ணத்தை தான் விளைவிக்கிறது என்பதே உண்மை. இந்த ஒப்பீடு ஒதுக்கித்தள்ள முடியாத ஒன்றாக இருப்பதற்கான கார ணம், பெருவாரியான ஆண்கள் தான் உச்சம் அடைந்து தன் விந்து வெளியேறிவிட்டால் அங்கு எல்லாம் திருப்தி கரமாக முடிந்துவிட்டதாக நினைத்துச் செயல்படுவதே. சில ஆண்களுக்கு தான் சுகம் கண்டவுடன் அவளும் சுகம் கண்டுவிடுவதாக எண்ணம். சில ஆண்களுக்கு, பெண் ஆணின் சுகத்திற்காக மட்டுமே படைக்கப்பட்ட வள் என்ற திமிர். இந்த எண்ணங்கள் தான் வன்புணர் விற்கும் காரணியாகின்றன. குடும்பம் என்னும் அமைப் புக்குள்ளாக இருந்தாலும், வெளியே இருந்தாலும் இது தான் நியதியாக உள்ளது.

யாருக்கும் மற்றவருக்கு என்ன வேண்டும் என்று தெரிய வுமில்லை, தெரிந்து கொள்ளும் முனைப்புமில்லை. ஒரு வேளை, கலவி குறித்துத் திருமணத்திற்கு முன் ஒரு பரீட்சை வைத்தால், இங்கு 99 சதவிகித மக்களுக்குத் திருமணமே ஆகாது. அதனால் தான் சௌகரியமாகத் திருமணத்திற்கு பெண் / ஆண் என்ற ஒரு தகுதி மட் டுமே பார்க்கப் படுகிறது. (இங்குப் பணம், படிப்பு, பதவி, சாதி பற்றி பேசவில்லை). இதற்கு மட்டும் இங்கு எல்

லோருக்கும் 100 சதவிகித இட ஒதுக்கீடு வழங்கப்பட்டி ருக்கிறது.

எல்லாவற்றிற்கும் மேல், நம் சமூகத்தில், ஓர் ஆண் எப் படி இருந்தாலும் ஒரு பெண் அவனை அப்படியே ஏற்றுத் தான் வாழ வேண்டும். திருமண ஒப்பந்தத் தில் எழுதப்படாத ஒரு சட்டம் இல்லையா இது? ஒரு வேளை அவள் திருப்தி ஆகவில்லை எனத் தப்பித் தவறி வெளிப்படையாக கூறி விட்டால், ஓர் ஆணின் அகந்தை அந்த உண்மையை ஏற்க மறுத்து, அவள் தன்னை இழிவு படுத்தியதாக நினைக்க வைக்கிறது. அப்படிப்பட்ட ஆண் அவளைத் தவறான பெண்ணாக உருவகப்படுத்தி விடுகிறான். அகந்தை இருக்கும் உள் ளம் எப்படித் தன்னைத் தானே முன்னேற்றிக்கொள்ள நினைக்கும்? தன்னைச் சரி செய்து கொள்ளவோ, கற் றுக்கொள்ளவோ, அகந்தை இடம் கொடுப்பதில்லை.

இப்படி, கலவியில் ஒரு சுகமும் காணாமல் ஒரு கழி வறை இருக்கையாக மட்டுமே உபயோகப்படுத்தப்ப டும் பெண்ணின் நிலையைப் பார்ப்போம். அது அவள் கணவனாக இருந்து, அது தான் அவள் முதல் முத லில் உடலுறவு கொள்ளும் ஆணாகவும் இருக்கும் பட்சத்தில், அவள் கலவியை வெறுத்தே விடுகிறாள்! இதற்குத்தானா இத்தனை மெனக்கெடல் என்று ஆச் சர்யப்பட்டுப் போகிறாள். ஆனால் அன்பின் நிமித் தமோ, திருமண இலக்கணங்களுக்குள் வாழ வேண்டிய நிர்பந்தத்தினாலோ, அவள் தன்னைத் தானே அப்படி அவன் உபயோகப் படுத்திக்கொள்ள அனுமதிக்கிறாள். நல்ல வேளை, அவளுக்கு இந்த மாதிரி ஒரு வார்த்தை உபயோகம் தோன்றுவதில்லை. காலம் செல்லச் செல்ல, அவளுக்கு இந்த இயந்திரத்தனமான உடலுறவு சலிக்க ஆரம்பித்து விடுகிறது. பொறுத்துப் போகும் மனநிலை கடந்த பிறகு, தலைவலி, அயர்ச்சி என ஏதாவது கார

ணம் சொல்லி அந்த நேரம் தப்பிக்கவோ இல்லை வய தானதையோ, வளர்ந்துவிட்ட பிள்ளைகளையோ கார ணம் காட்டி ஒரேடியாக முற்றுப் புள்ளி வைக்கவோ முனைகிறாள்! இங்கே தொடங்குகிறது அவனின் விட் டேத்தித்தனத்திற்கான தண்டனை!

பொதுவாக ஆணிற்குத் தேவைப்படும் அளவு பெண் ணிற்கு காமத்தேவைகள் இருப்பதில்லையென்று காலாகாலமாக அடித்து உரைத்துவிட்டதினாலோ என் னவோ, இப்படிப்பட்ட தனக்கு எந்த விதத்திலும் ஒரு எழுச்சியையோ அல்லது உச்சத்தையோ தராத உட லுறவுக்கு ஆட்படுத்தப்படும் பெண்ணானவள், இந்த அப்பட்டமான பொய்யை உண்மையென ஏற்றுக்கொள் கிறாள். இதுவும் காரணமாக, தன் ஆணின் மீதும் பெரிதாக அன்பென்ற உணர்வு இல்லாததும் காரண மாக சேர்ந்துவிட்டால், ஒரு பெண் ஆணை எப்படியெல் லாம் ஆட்டிவைப்பாள் தெரியுமா? அவனுடன் உடலுறவு கொள்வதை ஏதோ தான தர்மம் போல் பாவிப்பாள். அதனால் ஒரு ஜடம் போல் கிடப்பாள். வேண்டா வெறுப் பாக நடந்துகொள்வாள். அவன் மீது ஏதும் பிரத்தியேக கோபம் இருந்தால் இன்னும் மோசமாக பேசவோ நடக் கவோ செய்வாள். இதெல்லாம் எங்கிருந்து முளைக் கிறதென்றால், அவளுக்குக் கலவி என்பது இருவரும் மகிழ்வை அடையவேண்டிய ஒரு செயலாகக் காட்டப் படாததினால். ஆணுக்காக மட்டுமே, குழந்தை பெற லுக்கு மட்டுமே கலவி என்பதாக அவள் நினைக்கத் தலைப்படுவதால். இதில் பெண்ணுக்கென எதுவுமே இல்லை என இந்தச் சமூகமும் ஏற்றி வைத்திருப்ப தினால். தன் கையாலாகாத தனத்தினாலோ, அல்லது பெண்ணை ஒரு சக மனுஷியாக மதிக்கும் தன்மை இல் லாமல் இருப்பதினாலோ, அவளை ஒரு போகப்பொ ருளாக மட்டுமே ஆக்கி வைத்திருக்கும் இந்தச் சமூகத்

தின் சாபத்தால். இது தன் சவப்பெட்டிக்குத் தானே ஆணி அடித்துக்கொள்ளும் செயல் என்று ஏனோ ஆணுக்குப் புரிவதே இல்லை.

உடலுறவு என்ற பெயரில் நடக்கும் சில அவலங் களை நான் கேள்விப்பட்டும், கேள்விப்பட்டுக்கொண் டும் இருக்கிறேன். ஒரு தோழி என்னிடம் அவர்கள் வீட்டில் நடப்பதைக் கூறி அழுதிருக்கிறார். அவர்கள் இருக்கும் வீடு மிகவும் சிறியது. ஒரே அறையில் தான் அவர், அவர் கணவர், வளர்ந்த இரு மகன்கள் உறங்க வேண்டும். இவர் காலையிலிருந்து வேலை பார்த்த அச தியில் நன்றாக உறங்கிக்கொண்டிருக்கும் போது, அவர் கணவர் அவரை எழுப்பவோ, இல்லை அவருக்கும் விருப்பமா என்றெல்லாம் கேட்காமல், பின் பக்கமாக அவர் புடவையை தூக்கி, தன் உறுப்பை நுழைத்து தன் வேலையை முடித்துக்கொள்வாராம். இது அவர்கள் வீட்டில் தினமும் நடக்கும் ஓர் அவலம். இவர் விழி களில் நீரோடு, கண்ணை மூடிக்கொண்டு அப்படியே படுத்திருந்து, அவர் வேலை முடிந்ததும் எழுந்து சுத் தப் படுத்திக்கொண்டு படுப்பாராம். ஏன் இதை அனும திக்கிறீர்கள் என கேட்டால், வளர்ந்த மகன்கள் உடன் உறங்குகிறார்கள். நான் அனுமதி மறுத்தால் அவர்கள் அருகில் இருப்பது கூட கவலைப் படாமல், சத்தம் போட ஆரம்பித்து விடுவார். எனக்கு வேற வழியில்லை என்று கூறி வருத்தப்பட்டார்.

இதைக் கூறினால் இங்குச் சில ஆண்கள் அவர்கள் வாழும் சூழலில் வேறு என்ன செய்ய முடியும் என சாதா ரணமாகப் பதில் சொல்லிக் கடக்கின்றனர். இத்தனை செய்யும் ஆண் இன்னும் சிறிது நேரமாவது எடுத் துக்கொண்டு அவளையும் அன்போடு, அக்கறையோடு அணுகலாமே? அவளும் மனித உணர்வுகள் உள்ள வள் தானே? இந்த மாதிரி அவலங்கள் எல்லாவற்றை

யும் இடம் மட்டும் தீர்மானிப்பதில்லை. தன் தேவைக் குத்தான் பெண் படைக்கப்பட்டிருக்கிறாள் என்ற அந்த ஆணின் அகம்பாவம் மட்டுமே காரணம். தனி அறையில் படுத்திருந்தாலும் அவன் போக்கு இப்படித்தான் இருந் திருக்கும்.

நம் சமூகத்தில் ஓர் ஆண், ஆண் என்ற பிறவி எடுத்ததே ஏதோ தான் உழைத்து சம்பாதித்த பட்டமாக நினைத் துத் தனக்கான அத்தனை சுதந்திரத்தையும் அனுப விக்கிறான். அவன் இன்னொரு பெண்ணுடன் எப்பொ ழுதாவது உடலுறவு கொள்வதையோ, இல்லை, திரும ணம் தாண்டிய உறவுக்குள் இருப்பதையோ ஒரு குற்ற உணர்வாகக் கொள்வதில்லை. இது எல்லா ஆண் களுக்கும் பொருந்தாவிட்டாலும், பொதுவில் இது ஒரு பெரிய குற்றமாக நம் சமூகமே நினைப்பதில்லை. அவன் அப்படிச் செல்லும் பட்சத்தில் கூட, மனைவி சரியாக ஒத்துழைக்காவிட்டால், ஓர் ஆண் தன் தேவையை எப் படி பூர்த்தி செய்துகொள்வான் என அவனுக்கு இந்தச் சமூகம் வக்காலத்து வாங்கும். ஆனால் இதே ஒரு பெண் கொஞ்சம் தைரியம் கொண்டு இதைச் செய்து விட்டால், அவளே குற்ற உணர்வில் மறுகுவது மட்டுமல் லாமல், "அப்படி என்ன ஒரு பெண்ணிற்குத் தேவை? சோறும் துணிமணியும் வாங்கிக் கொடுத்து நன்றா கத்தானே வைத்திருக்கிறான் அவள் கணவன்?" என கேட்கும். அவளுக்கும் காமத்தேவைகள் இருக்கத் தான் செய்யும் என்றோ, அதை எந்த அளவிற்கு அவள் கணவன் அக்கறை எடுத்து பூர்த்தி செய்கிறான் என்றோ இந்த சமூகம் மட்டுமல்லாது அவளின் பெற்றோர், உடன் பிறந்தோரே சிந்திக்கத் தவறுகின்றனர்.

வயிற்றுப் பசி என்ற உணர்வு போல், காமப் பசியும் பொதுவான எல்லோருக்குமான ஓர் உணர்வு தான். அதன் தேவை ஓர் ஆணிற்கு எவ்வளவு உண்டோ,

அவ்வளவு ஒரு பெண்ணிற்கும் உண்டு. ஆனால், உணவு என்பதை ஒருவர் உண்டு பசி ஆறலாம், மகிழ்வு கொள்ளலாம். ஆனால், காமப்பசி முழுமையாக ஆறுவதற்கு இருவர் தேவைப் படுகின்றனர். இருவருக்குமான தேவையை ஒருவருக்கொருவர் கொடுத்து அன்புடன் பகிர்தலே அதை முழுமையாக்கும். இது ஒரு தர்மச் செயலோ அல்லது ஒரு கோபத்தின் வெளிப்பாடாகவோ இருக்கலாகாது, இருந்தால் அது நியாயமுமாகாது. ஒருவருக்கொருவர் கொடுத்து, பகிர்ந்து, அந்த அருகாமையை அனுபவித்து வாழ்தலே சரியான முறையான காமப்பசி ஆற்றுதலாகும்.

உண்மைகள் பல நேரங்களில் கசக்கத்தான் செய்கின்றன. அதனாலேயே பெரும்பாலும் அவை ஏற்றுக் கொள்ளவோ ஒப்புக்கொள்ளவோ மறுக்கப்படுகின்றன. பெரும்பாலும் ஆண் என்பவன் உடலுறவை எப்படி அணுகுகிறான் என்று பார்ப்போம் (1) பெண்ணின் அங்கங்கள் எதிலும் அவன் கவனம் கிடையாது. பெருவாரியாக ஒரு பெண்ணின் மார்பகம் தான் ஆண்களைக் கிளர்ச்சியுறச் செய்யும் ஓர் அங்கம் என கூச்சல் போட்டு அவளை எப்பொழுதும் அதை மூடி வைக்கச் சொல்லி வலியுறுத்தும் செயல்கள் நடந்துகொண்டே இருந்தாலும், படுக்கையில், ஒரு பெண்ணின் மார்பகத்தைக் கூட தொடாமல், நேராக அவள் துவாரத்தை மட்டுமே குறியாக கொண்டு, தன் உறுப்பை அதனுள்ளே நுழைத்து உச்சம் அடைந்து தன் வேலையை முடித்துக்கொள்ளும் ஆண்கள். (2) துவாரத்திற்குள் நுழைப்பதற்கு முன்னோ, பின்னோ ஓரிரு முறைகள் அவளின் மார்பகத்தை பிசைந்துவிட்டு, அவள் மேல் புஷ்-அப் எடுத்துவிட்டுத் தன் வேலையையும் முடித்துவிட்டு அவளுக்கும் திருப்தி அளித்துவிட்டதாகப் பெருமை பட்டுக்கொள்ளும் ஆண்கள் ஒரு புறம். (3) பெண்கள் மேல் அக்கறை

உள்ள ஆண்களாகத் தன்னை நினைத்துக்கொள்ளும் சிலரோ, அவளின் பெண்ணுறுப்பை ஓரிரு முறைகள் விரலால் தேய்த்துவிட்டு, அவளின் "ஆஹ்" "ஓஹ்" என்ற சத்தத்தில் அவளை உச்சம் அடைய வைத்துவிட்டதாக நினைத்துக்கொண்டு அவர்கள் வேலையை முடித்துக் கொள்கிறார்கள். பெரும்பாலான ஆண்கள் இந்த மூன்று வகைகளுள் தான் விழுவார்கள்.

திருமணம் முடிந்து முப்பது வருடங்களும், இதற்கு இடையில் திருமணம் தாண்டிய சில உறவுகளிலும் இருந்த ஓர் ஆண் சமீபமாக என்னுடன் விவாதிக் கையில் பெண்ணின் உச்சம் என்பது அவள் கிளர்ச்சி அடைந்தவுடன் ஏற்படும் ஈரத்தன்மை தான் என என்னி டம் வாதாடியது மிகவும் அதிர்ச்சியாகவும், ஆச்சர்யமாக வும் இருந்தது. என் அதிர்ச்சியை நான் வெளிப்படுத்திய தும் அவர் கூறியது, வேறு என்ன வேண்டும் ஒரு பெண் ணிற்கு, இதிலே அவளுக்கு வேண்டியது கிடைத்து விடு கிறது. நானே அவர்களைக் கேட்டிருக்கிறேன், அவர் களும் திருப்திப்பட்டதாகத்தான் சொன்னார்கள் என்று பெருமிதம் வேறு கொண்டார்.

பொதுவாகப் பெண்களிடம் ஒன்றைக் காண முடிகிறது. அவர்கள் ஓர் ஆணின் மீது அன்பு வைத்திருந்தால், அவனின் அருகாமை அவளுக்கு மிகவும் மகிழ்ச்சி அளிக்கிறது. மேலும் பெண்கள் திருப்தி கொள்ள வில்லை எனச் சொல்லிவிடத் தயங்கும்படியே வளர்க் கப்படுகிறார்கள். அதனால், அந்த அன்பின் பேரிலும், வெளிப்படையாக இதைப் பேசத் தயங்குவதாலும் உண் மையை உரைத்து, தன் ஆணின் மனதை நோகடிக்கும் வேலையை அவர்கள் செய்வதில்லை. அது மட்டுமில் லாமல், அவன் தானும் அனுபவிப்பதாக நினைக்கும்ப டியே நடிக்கவும் செய்கிறார்கள். இது அந்த ஆணிற்கு மிகவும் சௌகரியமாக ஒரு புறமும், உண்மையிலேயே

அவன் அவள் தேவையை கற்பதற்கான முயற்சிக்கே ஒரு தடையாகவும் ஆகிவிடுகிறது. ஆக, இங்கு எல் லாத் தவறையும் ஆண் மீது மட்டுமே அள்ளிப்போட்டு விட இயலாது. ஆனால் காலம் செல்லச் செல்ல, அவர் களையும் மீறி உடலுறவிற்குப் பின்னும் தன் உடல் ஏதோ குறையுடன் முழுமையடையாமல் தேடுவதையும், அவன் நன்றாக அனுபவித்து விட்டு உறங்குவதையும் காணும்போது ஒரு சலிப்பை உணரத் தொடங்குகிறார் கள். சிலர் அது என்னவென்றே தெரியாமல் தவிப்பார் கள், சிலர் இந்த மனிதன், என்று தான் தன்னை முழு மைப்படுத்துவான் என ஏங்கித் தவிப்பார்கள். இப்படியே தவித்துக் கடைசி வரை வாழ்ந்துவிடும் பெண்களு முண்டு. கொஞ்சம் கொஞ்சமாக விலகிவிடும் பெண்க ளும் உண்டு. சந்தர்ப்பங்கள், சௌகரியங்கள், தைரியம் எல்லாம் இருந்தால், வேறு ஆணை நாடும் பெண்களு முண்டு. தேவை எல்லோருக்கும் பொது தானே?

அன்பு, அக்கறை, மற்றவரின் தேவைகள் எது குறித்தும் கவலை கொள்ளாது நடக்கும் கலவியில்
பிறப்பதினால் தானோ என்னவோ, நாம் குழந்தைக ளையும் ஓர் இயந்திரத்தனமான முறையிலேயே வளர்க் கிறோம். அவர்களுக்கு என்ன தேவை, அவர்களுக்கு எது மகிழ்வைக் கொடுக்கிறது என யாரவது ஆராய் கிறோமா என்றால் இல்லை என்றே ஒப்புக்கொள்ள வேண்டும். அவர்களே சிந்தித்து முடிவெடுக்கவும் விடு வதில்லை; நாமும் சிந்திப்பதில்லை. பக்கத்து, எதிர் வீட் டில் என்ன செய்கிறார்களோ அதையே நம் குழந்தைக ளும் செய்யவேண்டும். மற்ற பிள்ளைகளுடன் போட்டி போட்டுக் கொண்டே வாழவேண்டும். வாழ்வு இங்கு வாழ்வதற்கே இல்லை. மிகவும் ஆச்சர்யமும் அதிர்ச் சியும் கொள்ளவைக்கிறது இந்த மனிதனின் மூளை வேலை செய்யும் விதம்!

சில திருமணமான பெண்களிடம் பேசிப் பார்த்தேன். அவர்களில் சிலர் சமீபமாகத் திருமணமானவர்கள்; சில ருக்கு திருமணமாகி பல வருடங்கள் முடிந்துவிட்டன. அதிர்ச்சியான விஷயம் என்னவென்றால், இத்தனை வருடங்களில் ஒரு முத்தம் கூடக் கொடுத்ததில்லையாம் அவர்கள் கணவன்மார்கள்; சாதாரணமாக இல்லை, கலவியின் போதாவது? அப்பொழுது கூட இல்லை. முத்தம் தானே அன்பின் வெளிப்பாட்டின் ஆணி வேர்? நீங்களாவது கொடுத்திருக்கலாமே, அப்படி ஒரு தொடக்கம் இருந்திருக்கலாமே என கேட்டால், முழிக் கிறார்கள்... அதெப்படி நானாக..... என இழுக்கிறார்கள்... நம் சமூகத்தில் “ஒழுக்கமான” பெண்கள் தானாக இந்த மாதிரி விஷயங்களை முன்னெடுக்க மாட்டார்கள் என் பது தானே ஆண்டாண்டு கால போதனையாக இருந்து வந்துள்ளது? இந்தப் பெண்களை பொருத்தவரை உட லுறவு என்பதே, தன் மார்பகங்களைச் சில முறைகள் பிசையவும், காலை விரித்து காட்டி, அவன் உறுப்பை உள்ளே நுழைக்க அனுமதிப்பதும் மட்டுமே. சில நேரங் களில் அந்தப் பிசைதலில் கூட வலி தான் மிஞ்சும், உள்ளே நுழைக்கும் வேகத்தில் இரண்டு நாட்கள் வரை கூட சிறுநீர் கழிக்கையில் எரிச்சல் இருக்குமாம். இப் படிப்பட்ட உடலுறவிற்கு எந்தப் பெண் மனதார ஒத்து ழைப்பாள்? நீங்கள் உச்சம் அடைவதுண்டா என கேட் டால், பல பெண்கள் அதெல்லாம் எப்படி பெண்களுக்கு வரும் என திருப்பிக் கேட்கிறார்கள். சில பெண்களோ அதற்கெல்லாம் கொடுப்பினை இல்லை, மறு ஜென் மம் என்று ஒன்று இருந்தால் பார்ப்போம் என்கிறார்கள். ஆனால் இப்படிப்பட்ட திருமண வாழ்விற்காகத்தான் நாம் அத்தனை பொருத்தங்கள் பார்த்துச் செய்து வைக் கிறோம். நிறைவு அடையாத உடலுறவைக் குறித்து எந் தப் பெண்ணாவது பேசினால், நம்மில் சில பெண்களே, “ஒரு பெண்ணிற்கு இதெல்லாம் முக்கியமே இல்லை....

ஆணுக்கு மட்டுமே காமம் என்பது முக்கியம், பெண் ணிற்குப் பிள்ளைகள் வளர்ப்பு, கணவனின் திருப்தி இவை தான் முக்கியம்" என அடித்துப் பேசுகிறார்கள்.

ஓர் ஆண் தன் வேலை முடிந்ததும் களைப்பாகி, திரும் பிப் படுத்து உறங்க ஆரம்பிக்கும் வேளையில் தான் ஒரு பெண்ணிற்குக் கிளர்ச்சியே தொடங்குகிறது. ஏக் கத்துடன் படுத்துறங்குவதைத் தவிர அவளுக்கு வேறு வழியில்லை. இதுதான் ஒரு பெண்ணிற்கு உடலுறவைப் பொருத்தவரை இந்த திருமணம் கொடுக்கும் பரிசு.

இதில் சில ஆண்கள் எவ்வளவு நேரம் தன்னால் விந்தை வெளியேற்றாமல் இயங்க முடிகிறதோ அத் தனை சுகத்தை அவளுக்கு அளிப்பதாக நினைத் துக் கொள்கிறார்கள். அவளைக் கிளறச்செய்யவோ இல்லை அவளுக்கு என்ன செய்தால் பிடிக்கும் என்றோ கவலை கொள்ளாமல் எத்தனை நேரம் இயங்கி என்ன பயன்? அன்போ, அவள் சுகம் பெறுவதற்கான அக் கறையான செயலோ செய்யாதவன் எப்பொழுது முடிப் பான், எப்பொழுது தன்னை விட்டு விலகுவான் என்று தான் எந்தப் பெண்ணும் காத்திருப்பாள்! இந்த உண் மைக் கூட புரியாத ஆண்கள் பரிதாபத்திற்கு உரியவர் களா? வெறுப்பிற்கு உரியவர்களா? இரண்டிற்குமே தான். பெண்ணிற்குள் வெறுப்பு வளர, சிறிது காலத்தில் அவள் ஒத்துழைக்க மறுக்க, அவன் பரிதாபத்திற்கு உரியவனா வான்.

தான் படுக்கையில் மன்மதன் என தன்னைத்தானே பறைசாற்றிக்கொள்ளும் (இப்படி ஒரு முடிவிற்கு அவர் கள் எப்படி வருகிறார்கள் என்பது தெரியவில்லை!) ஆண்களிடம், அவர்களின் இணையர் முழு திருப்தி பெறுகிறார்களா என கேட்டால், "கண்டிப்பாக" எனச் சொல்லும் ஆண்கள் கூட, "நீங்கள் எப்பொழுது விரும் பினாலும் அவர்கள் சரி என சொல்லிவிடுவார்களா,

அவர்களாக உங்களிடம் வேண்டும் என கேட்பதுண்டா" எனக் கேட்டால், "அது எங்கே நடக்கும்? ஒவ்வொரு முறையும் கெஞ்சித்தான் படுக்க வைக்க இயலுகிறது" என்பதே பதிலாக இருக்கிறது.

இருவருக்கும் மகிழ்வைக் கொடுக்கும் செயலாக ஒன்று இருக்குமேயானால், பெண்களும் ஆண்கள் போல் இதற்காக ஆவலுடன் காத்துக்கொண்டு தானே இருக்க வேண்டும்? ஏன் எப்பொழுதுமே அவன் வேண்டுபவனா கவும் அவள் கொடுப்பவளாகவும் ஆகி விடுகிறார்கள்? எங்கு நமக்குத் தேவைப்படுவது அவளுக்கு வேண்டா வெறுப்பாக இருப்பதாக ஆகிறது என ஏன் எந்த ஆணும் அவளிடம் பேசியோ, இல்லை ஆராய்ந்தோ அறிய முற்ப டுவதே இல்லை?

ஒரு பெண்ணின் தேவை என்பது காமத்தைப் பொருத் தவரை இங்குக் கணக்கில் எடுத்துக்கொள்ளப் படுவதே இல்லை. படித்த, படிக்காத, விஷயம் தெரிந்த, தெரி யாத எல்லோரிடமும் இந்த விட்டேத்தித்தனம் காணப் படுகிறது. "ஏன் இப்படி?" என்று ஒரு கேள்வியை முன்வைத்தால் எல்லோரும் பொதுவாக முன்வைக்கும் சமாதானம், "இயற்கை எங்களை இப்படிப் படைத்து விட்டது, எங்களை குறை கூறி என்ன பலன்? பெண் ணைத் திருப்தி படுத்துவதென்பது இயலும் காரிய மில்லை". ஒருவரின் மனதையோ உடலையோ மதிக்கா மல் செயல்பட என்ன ஒரு பொறுப்பற்ற சமாதானம்?

சில விஷயங்கள் நம் சமூகத்தில் என்று மட்டுமில்லாது உலகளவில் கூட இப்படித்தான் இருக்கிறது என்பதற்கு ஓர் உதாரணமாக Nancy Friday என்பவரின் "My Secret Garden (Women's Sexual Fantasies)" - என்னும் புத் தகத்திலிருந்து ஒரு பத்தியை இங்குப் பதிவிடுகிறேன். இந்தப் புத்தகம் பல பெண்களிடமிருந்து வந்த அவர்க ளுக்கான காம கற்பனைகள், ஆசைகள் பற்றியதான

கடிதங்களின் தொகுப்பு. ஒரு கடிதத்தில் அந்தப் பெண் இப்படி குறிப்பிடுகிறார் :

“உங்களின் இந்தப் புத்தகம் பல ஆண்களைக் கவலை கொள்ளச் செய்யப்போகிறது என்று நான் நினைக்கி றேன். பெண்கள் என்பவர்கள் ஆண்களின் கேளிக் கைகளுக்காக மட்டுமே இருப்பதாக இன்னும் நிறைய ஆண்கள் நினைக்கிறார்கள். சரியான முறையில் உடலு றவைக் கையாண்டால், பெண்களுக்கும் ஆண்களைப் போல் காமத்தின் தேவையும், உணர்வுகளும் நிறை யவே இருக்கும் என்பதை ஒப்புக்கொள்ளக்கூட மாட் டார்கள். என் திருமணத்திற்கு முன், நான் உடலுறவு கொண்ட நிறைய ஆண்களுக்கு எப்படி ஒரு பெண் ணைக் கிளர்ச்சி ஊட்ட வேண்டும் என்பது கூடத் தெரியவில்லை. ஒரு பெண்ணிற்கு இது எவ்வளவு முக்கியம் என்பதை ஆண்கள் அனைவரும் புரிந்து நடந்தாலே இங்குத் திருப்தி அடைந்து வாழும் பெண் கள் நிறைவார்கள். நான் திருமணத்திற்கு முன்பு சுமார் ஒரு முப்பது ஆண்களுடன் உடலுறவு கொண்டும், ஒரு முறை கூட நான் உச்சம் எய்தியதில்லை. அவர்கள் அனைவருமே, என் மேல் குதித்துக் கீழே இறங்கிவிட்டு, வீட்டில் கொண்டு விட்டவர்களாகத் தான் இருந்தார் கள். ஆனால், ஒவ்வொரு முறையும் நான் கட்டாயம் கூறி இருக்கிறேன், அவர்கள் அற்புதமான காதலர்கள் என்று, ஆனால் உள்ளுக்குள் நான் உணர்ந்ததெல்லாம் ஒரு சலிப்பு மட்டுமே”

திருமணத்திற்கு முன் இத்தனை ஆண்களுடன் உடலு றவு கொள்ளும் உரிமை உள்ள நாட்டிலேயே பெண் களுக்கு இத்தனை பிரச்சினை என்றால், கொஞ்சம் சிந்தித்து பார்ப்போம். ஒரே ஆண், அதுவும் கணவ னாக ஆன பின்னே இப்படிப் பெண்ணின் உடலையோ உள்ளத்தையோ புரியாதவனுடன் தான் வாழ்நாள் முழு

வதும் வாழ வேண்டிய பெண்ணின் மனநிலை எப்படி இருக்கும்? இத்தனை சலிப்பிலும் வெறுப்பிலும், எந்தக் குடும்பத்தில் மகிழ்வு நிலைக்கும்? எந்தப் பிள்ளைகள் மகிழ்வின் பரிசாக வளர்க்கப்படுவார்கள்? எத்தனை குழந்தைகள் சமுதாயத்தில் மற்றவரின் மகிழ்ச்சிக்காக வாழ்வர்? இந்தச் சமூகத்தில் சுமுகம் எங்கிருந்து வரும்? தனி மனித வாழ்வின் பிரச்சினைகள் தானே இந்தச் சமு தாயத்தை தாக்கும்? இது ஒரு சுழற்சி தானே?

இப்படிப்பட்ட ஆண்களுக்குப் பெண் என்பவள் யார்? யார் என்பதைவிட என்ன என்று கேட்டாலே சரி யாக இருக்கும்? அவர்களின் கழிவறையின் இருக்கை தானே?

இதில் கசப்பான உண்மை என்னவென்றால், பெண்ணை மதிக்க வேண்டும், அவளுக்கும் சுகம் கொடுக்க வேண்டும் என நினைக்கும் சில ஆண்களுக் குக் கூட, அதைத் தெரிந்து கொள்வதிலோ, தெளிந்து செயல்படுவதில் ஆர்வமோ பொறுமையோ இருப்ப தில்லை. செயலில் வராத அக்கறை இருந்தால் என்ன இல்லாவிட்டால் தான் என்ன?

## கசப்பான சில உண்மைகள்

2016 இல் காஸ்மோபாலிடன் (Cosmopolitan) என்னும் ஓர் இதழ் ஒரு பரந்த கணக்கெடுப்பில் கண்டுபிடித்த சில உண்மைகள்:

- பதினெட்டு வயதிலிருந்து நாற்பது வய திற்குள்ளான பெண்களில் மூன்றில் இரண்டு பங்கு பெண்கள் உச்சம் வந்துவிட்டதாக நடிக்கிறார்கள்.
- எழுபத்தி இரண்டு சதவிகித பெண்கள் கூறியது, ஆண்கள் உச்சம் அடைவதுடன் நிறுத்திக் கொள்கிறார்கள்; நாங்கள் அவர்களுக்குக் கொடுக்

கும் சந்தோஷத்தை அவர்கள் எங்களுக்குத் திருப்பி கொடுக்க முயற்சி கூடச் செய்வதில்லை.

♦ முப்பத்தி இரண்டு சதவிகிதப் பெண்களுக்கு, கிளிட்டோரிஸ் எனும் பகுதி கிளறப்படுவதேயில்லை.

♦ ஐம்பது சதவிகிதப் பெண்கள், உச்சம் வருவது போல் இருந்தாலும் ஏனோ கடைசியில் வராமலே நின்றுவிடுகிறது என்கிறார்கள்.

பெருவாரியான பெண்கள் தங்களுக்கும் உச்சம் தேவை என நினைக்கிறார்கள் என்பதை இந்தக் காலத்து ஆண்கள் புரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகிறது.

ஓரிரு தலைமுறைகளுக்கு முன் பெண்கள் உச்சத்தைப் பற்றியெல்லாம் பெரிதாகச் சிந்தித்ததில்லை; அப்படி ஒன்று இருப்பது தெரியாமல் இருந்த காரணமாகக் கூட இருக்கலாம்.

மருத்துவர்களின் கூற்றுப்படி உச்சம் என்ற அனுபவம் பெண்கள் பெறாமல் இருந்தது ஒரு சாதாரண விஷயமாகத்தான் இருந்து வந்திருக்கிறது.

1970 களில் சில மருத்துவர்கள் பெண்களுக்கு உச்சம் என்பதே ஒன்று கிடையாது எனவும், ஊடகங்கள் இப்படி ஒன்றைக் கற்பனையாய்த் தோற்றுவிக்க முயல்கிறார்கள் எனவும் கூறி வந்தார்கள்.

இவை எல்லாம் இப்பொழுது மாறிவிட்டன. இன்றைய மருத்துவ உலகக் கூற்றுப்படி ஒவ்வொரு பெண்ணும் அவள் விரும்பும் பட்சத்தில், உச்சம் அடையக்கூடியவளே.

2014 இல் இங்கிலாந்தில் நடத்திய ஓர் ஆய்வுப்படி, பெண் விரும்பும் பட்சத்தில், ஒவ்வொரு பெண்ணும் பல

முறை உச்சம் (Multiple Orgasm) அடையலாம் எனத் தெரிகிறது.

**Dr David Delvin**
7 டிசம்பர் 2015
www.netdoctor.co.uk

போலியான உச்சம்

ஏன் பல பெண்கள் உச்சம் பெறாமலே உச்சம் அடைந்து விட்டது போல் நடிக்கிறார்கள் ?

ஓர் ஆணின் ஆண்மைத்தன்மை கலவி கொள்ளும் பெண்ணைத் திருப்தி படுத்துவதுடன் பிணைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ஆச்சர்யத்திற்குரிய விஷயமென்னவென்றால், இப்படிப் பிணைக்கப் பட்டிருந்தாலும் அவளைத் திருப்தி படுத்த பெரும்பாலான ஆண்கள் முனைவதே இல்லை. இப்படிப் பிணைந்திருப்பதால் ஒரு பெண் எங்கே தான் உச்சம் அடையவில்லை எனக் கூறினால் அவன் மனம் புண்படுமோ என நினைப்பதும் சில பெண்கள் இப்படி உச்சம் அடைந்து விட்டதாக நடிப்பதற்கு ஒரு காரணம்.

பெண்கள் பொதுவாகக் காமத்தை பொருத்தவரை தன் விருப்பு வெறுப்பை மறைத்தே வாழக் கற்பிக்கப் பட்டிருப்பதால், இப்படி நடிப்பது அவளுக்கும் ஒரு விதத்தில் சௌகரியமாகவே இருக்கிறது.

தன் இணையர் தன்னால் திருப்தி கொள்ளவில்லை எனில் வேறு யாருடனோ உறவு கொண்டிருக்கிறாளோ இல்லை உறவு கொள்வாளோ என்ற அச்சமும், சந்தேகமும் சில ஆண்களுக்கு வருவதற்கும் சாத்திய கூறுகள் இருப்பதினால், நிறைய பெண்கள் உண்மையை மறைத்து, திருப்தி கொண்டதாக வேடமிடுகிறார்கள்.

சிலர் நடித்து விட்டால், அவனும் தன் வேலையைச் சீக்கிரம் முடித்துக்கொள்வான், அத்துடன் தனக்கு இன்பம் தராத கலவியில் நீண்ட நேரம் அவனைப் பொறுத்துக் கொள்வதைத் தவிர்ப்பதற்கும் இந்த நடிப்பு பயன்படுகிறது.

சில பெண்கள் தான் இன்புறுவது போல் நடிக்காவிட்டால், எங்கே  அவனுக்கு சுவாரசியம் குறைந்துபோய் வேறொரு பெண்ணைத் தேடிச் சென்றுவிடுவானோ என்ற அச்சத்தில் தானும் அவன் செயல்களில் இன்புறுவது போலும், உச்சம் அடைவது போலும் நடிப்பதும் உண்டு.

பெண்கள் தாங்கள் அடையாத உச்சத்தை அடைந்தது போல் நடித்துக்கொண்டிருக்க, இப்படியாகப் பல காரணங்கள் உண்டு.

ஆனால் இத்தனை வருடங்களாய், இத்தகைய நடிப்பு, கண்டுகொள்ளப்படாமலே இருப்பது ஆச்சரியமானது இல்லையா? கண்டுபிடிப்பது சாத்தியம் தானா? உடலுறவின் போது, ஒருவர் உச்சம் பெற்றதாக நடிப்பதைக் கண்டுகொள்ள மற்றவரால் இயலுமா? ஆணுக்குக் கண்டிப்பாக அது தெரியவரும். இல்லையென்றால், இத்தகைய நடிப்பு
(பெண் உச்சம் பெற்றதாக நடிப்பதும், ஆண் அறியாதவனாய் நடிப்பதும்), பல்வேறு காரணங்களுக்காக, அவர்கள் இருவரிடையேயான வசதியான, பரஸ்பரப் பழக்கமாக இருக்கலாம்.

எழுத்தாளர் Alain de Botton தன்னுடைய  "How to Think More about Sex" என்னும் நூலில்,

"விறைப்பையும், குழைவுத்தன்மையையும், வெறும் மனத்திண்மையால் கொண்டுவருவது சாத்தியமில்லை. எனவே இவை இரண்டையும், ஆர்வத்தின் உண்மை

யான அளவீடுகளாகப் பார்க்கலாம். பொய்யான உற்சாகம் மலிந்து கிடக்கும் உலகில், மக்கள் உண்மையிலேயே நம்மை விரும்புகிறார்களா அல்லது ஒரு கடமையைப்போன்று, நமக்காக இரக்கத்தைக் காட்டுகிறார்களா என்பதை அறிதல் அரிது. ஆனால் விறைத்த ஆண்குறியும், குழைந்த யோனியும் அவர்களுக்கிடையே உள்ள உண்மையான நெருக்கத்தைத் தெரியப் படுத்திவிடும்." என்கிறார்.

இதுதான் உண்மையாக இருக்க இயலும்.

அத்தியாயம் - 7

# காமத்தை தவறெனக் கருதுவதால் ஏற்படும் விளைவுகள்!

## தொடர்பாதிப்பு (Obsession)

மக்கள் பாலுறவில் ஈடுபடுகிறார்களோ இல்லையோ, மனித மனதில் பாலுணர்வைப் பற்றியதான எண்ணங்கள் தவறான ரீதியில் மிக அதிக அளவில் இடம்பெற்றுள்ளது.

மறைக்கப்படும் விஷயங்கள், மறுக்கப்படும் விஷயங்கள், கிடைத்தற்கரிய விஷயங்களாக மாறிவிடுகின்றன. கிடைத்தற்கரிய விஷயங்கள் எப்பொழுதுமே நம் தனிக் கவனத்திற்கு ஆளாவதுமில்லமால், அதை அடைவதற்கான எண்ணமும் அதற்கான முயற்சியும் வலுப்பெற்றுக் கொண்டே தான் இருக்கும்.

உணவு கிடைக்கப் பெறாதவனின் எண்ணம் உணவிலேயே இருப்பதும், பணம், வசதிகள் கிடைக்கப் பெறாதவன் எண்ணம் அவற்றிலேயே லயித்திருப்பதும் இயற்கை தானே? சிலர் அவை கிடைக்கப்பெற நேர்மையான வழியில் முயற்சி செய்வர். கிடைக்காத பட்சத்தில், தன விதியை நொந்துகொண்டோ இல்லை, இது தான் வாழ்க்கை என்றோ கடந்து செல்ல நினைப்பர். ஆனால் பலருக்கு அவற்றின் மீதான எண்ணம், ஆசை அகலவே அகலாமல் அதற்கான அத்தனை முயற்சியும் எடுத்த வண்ணமே இருப்பர். இதில் சிலர், நேர்மையற்ற முறையில் அவற்றை அடைவதற்கும் தயங்க மாட்டார்

கள். இப்படித்தான் திருட்டு, லஞ்சம் என நாடு முழுவதும் பரவிக்கிடக்கிறது.

வாழ்வின் அடிப்படைத் தேவைகள் எல்லோருக்கும் கிடைக்குமான ஒரு சூழல் இருந்திருப்பின், இங்கு எத்தனையோ எளிமையாக இருந்திருக்கும் நமக்கெல்லாம் வாழ்வு. சந்தர்ப்பமும் சூழ்நிலைகளும் தான் ஒரு மனிதனை வளர்க்கின்றன. அது சரி இல்லையெனில், அதனால் ஏற்படும் மனித வக்கிரங்களை நம்மால் எதுவுமே செய்ய இயலாது விஸ்வரூபம் எடுத்துவிடுகின்றன.

பதின்ம வயதில் ஏற்படும் உடல் மாற்றம் என்பது இயற்கை. ஆனால் நாகரிக வளர்ச்சி அடைந்துவிட்ட காரணத்தினால், பிள்ளைகளின் படிப்பு, பின் அவர்களுக்கான எதிர்காலக் கனவுகள், பணம் ஈட்டுவதற்கான தகுதிகள், என பல பொறுப்புகள் உட்புகுந்துவிட்ட காரணத்தினால், காமம், கலவி என்று அவர்கள் எண்ணம் சிதறாமல் இருக்கும் பொருட்டு, இதைக் குறித்தெல்லாம் அவர்களை அறியாமையில் வைத்திருப்பதற்கான அத்தனை வழிமுறைகளையும் கையாளுகிறோம். அந்தக் காமமும் அதைத் தீர்த்துக்கொள்வதற்கான வழிமுறையான கலவியும் திருமணம் என்னும் ஒரு கோட்பாட்டிற்குள் அடைத்தும் விட்டோம். நாம் என்னதான் இவை எல்லாம் அவர்கள் நன்மையைக் கருத்தில் கொண்டுதான் செய்கிறோம் எனப் பெருமை பட்டுக்கொண்டாலும், இவை அனைத்துமே இயற்கைக்குப் புறம்பானதே.

ஒரு பக்கம் திருமணம் ஆகும் வரையில் இருபாலரையும் அறியாமையில் வைக்கும் முயற்சி. இன்னொரு பக்கம் கற்பென்ற ஒன்றை வைத்து, திருமணமே முடிந்துவிட்ட போதும் காமம் என்பது ஆணுக்கு மட்டுமேயான உரிமை, அவன் வேண்டும்போது கொடுப்பதும், பிள்ளை பெற்றுக்கொள்வதற்கு உபயோகப்படுவதும் மட்டுமே அவளுக்கான கடமைகள் என்ற மட

மையைப் புகுத்தி என மொத்தத்தில் உடலுறவு என்ற அழகான, அடிப்படைத் தேவையான ஒரு விஷயத்தை, யாரும் முழுமையாக அறிந்துகொள்ளவோ, தெளிந்து செயல்படவோ விடாமல் செய்து, பதின்ம வயதிலிருந்தே அதன் மீதான அளவுக்கு அதிக ஆர்வத்தூண்டுதலை யும், அதைக் கற்கும் ஆவலில் பல முயற்சிகளையும் எடுத்துக்கொண்டே இருக்கும் ஒரு வித மனரீதியான தொடர் தாக்கங்களையும் நம் சமூகச்சூழல் ஏற்படுத்தி விட்டிருக்கிறது.

திருமணத்திற்குப் பிறகு காம உணர்வுக்குத் தான் வடி கால் கிடைக்கிறதே, ஏன் அதற்குப்பின் அவர்கள் மனம் இதையே தேடிக்கொண்டிருக்க வேண்டும் என்ற கேள்வி எழலாம். ஆனால், இங்கும் மனிதர்கள் அறியா மையினாலும், தெளிவில்லாத தன்மையுடனுமே ஒரு வரை ஒருவர் அணுகுவதால், திருமணத்திற்குப் பிறகு உடலுறவு ஏற்பட்டாலும் அதில் முழுமைத்தன்மையை சம்பந்தப்பட்டவர்கள் பெறுவதில்லை. சிறு வயது முதல் அது அசிங்கம் எனச் சொல்லி வளர்க்கப்பட்டவர், ஏதோ உடல் உந்துதலினால் முதல் சில மாதங்கள் உடலுறவு கொண்டாலும், அது குறித்து இணையருடன் பேசவோ, தெளிவு பெறவோ தயங்கியே அதற்கான வாய்ப்பில்லா மல் போக, உடலுறவு என்பது ஒரு இயந்திரத்தன்மை கொள்கிறது. ஆக திருமணமும் வடிகால் ஆகாத நிலை ஏற்பட்டு, மனமானது பிறழ்வு கண்டு மேலும் மேலும் சதா சர்வ காலமும் முழுமையாக்கும் காமம் தேடியே அலை கிறது. இந்தப் பாதிப்பானது பல முறைகள் மரணம் வரை தொடர்கிறது. அலைவதும், முழுமை கொள்ளாததும் மனிதனைத் தொடர் தேடலிலேயே வைத்திருக்கிறது. மனப்பிறழ்வு அதிகமாக, பார்க்கும் பெண்ணிடமெல் லாம் வடிகால் கிடைக்காதாவென அலைகிறான். சில பெண்களும் அப்படி இருக்கிறார்கள். இந்தத் தேடலில்

சிலர் தன்னுயிர் இழக்கவும், மற்றவர் உயிர் பிரிக்கவும், சுயமரியாதை இழக்கவும் கூட தயார் ஆகிறார்கள்.

காதலின் உச்சமாகக் காமம் அமைதல் வேண்டும். காதல் முதலில் தோன்றிப் பின்னர் அதுவே காம மாக மலர்தல் வேண்டும். ஆயினும், நம் சமுதாயத்தில், காமம் முதலில் நடைபெறுகிறது. நம்முடைய திருமண முறையும் இதையே பரிந்துரைக்கிறது. பெற்றோர்களால் நடத்தி வைக்கப்படும் திருமணங்களில், காமம், காத லுக்கு முன்னரே நடைபெறுகிறது. சில நேரங்களில் காதலே மலராமல் கூடப் போகிறது. ‘காதல் திருமணங் கள்’ என்று கருதப்படும் உறவுகளில், உடற்கவர்ச்சியே காதல் என்று கருதப்படுகிறது. காமம் குறித்த கல்வியை, அறிவோட்டத்தை ஒடுக்கியதன் மூலம், நாம் காதல் என்னும் உறவின் அர்த்தத்தையே கேவலப்படுத்திவிட் டோம்.

## அணுகுமுறை

காமம் என்பது உடலுடன் மட்டுமே தொடர்பு கொண் டது என்னும் நம்பிக்கையில், உடலுறவில் ஈடுபடும் போதெல்லாம், மக்கள் பொதுவாக, தான் உறவுகொள் பவரிடம், மனரீதியாகவும், இதயபூர்வமாகவும் தொடர்பு கொள்வதில்லை. இந்த நிலையில், காமம் என் பது வெறும் உடலைத் திருப்தி படுத்தக்கூடிய, உடல் சார்ந்த செயலாகவே ஆகிறது. இந்த அற்பக் கார ணத்தை வைத்துக்கொண்டு, அந்த உறவு எத்தனைக் காலம் நீடிக்கும்? அடுத்த ஓர் உடல் ஒருவரைக் கவரும் வரை? அடுத்தவரோடு உடலுறவு கொள்ளச் சந்தர்ப்பம் கிடைக்கும் வரை?

நம் இணையருடன் தேவையான மனரீதியான தொடர்பு, நெருக்கம் ஏற்படாத இடத்தில் அவரும் இன்பம் அடை வது குறித்து நாம் கவலைப்படுவதில்லை. அந்த உட

லுக்கு, அதைச் சார்ந்த உணர்வுகளுக்கு நாம் மரியாதை தருவது இல்லை. மனம் ஒன்றுபட்டு இருவர் உடலுற வில் ஈடுபடும்போது, அது எந்த அளவிற்கு உள்ளும் புறமும் இன்புறும் என்று நாம் அறிவதில்லை. அடுத் தவரின் மகிழ்ச்சியைப் பற்றி நாம் கவலைப்பட்டாலும், அவர் எதனால் மகிழ்வடைவார் என்று உணராதவராய் உள்ளோம். எல்லாவற்றுக்கும் மேலாய், நம் நரம்புகளில் ஏறிய உணர்வு அழுத்தத்தை விடுவிப்பதற்கான அவசர நிலையில் உள்ளோம்.

புணர்ச்சிக்கு முன்னர் உறவுகொள்ளப்போகும் நப ரைத் தயார் செய்யும் 'முன் விளையாட்டு' எனப்படும் வகையை அறிந்தவராகவே ஒருவர் இருந்தாலும், அந் தச் செயலை எந்திரகதியில் செய்துவிட்டு அதனால் அந்தப்பெண் கிளர்ச்சி அடைவாள் என்று எண்ணுகின் றனர். ஒருவரது காதல், மோகம், மற்றும் உறவுகொள் ளப்போகும் பெண்ணின் உடலின் மீதான மரியாதை ஆகியவற்றை 'முன் விளையாட்டு' தூண்டும் என் பதை அறியாது இருக்கின்றனர். நாம் சோகமாகவோ அல்லது துக்கத்திலோ இருக்கும்போது, வேறொருவர், நம் கரங்களைப் பற்றுவதாலோ, அல்லது தோள்களில் ஆதரவாக அணைப்பதாலோ, நூறு வார்த்தைகளா லும் விளக்க முடியாத அளவிற்கான மன அமைதியை அடைகிறோம். சொற்கள் வெறும் சொற்களே; தொடு தல் நமக்குள் ஒரு மின்னலையைக் கடத்த வல்லது. எல்லா மனநிலையையும் பொய்யாக ஏற்படுத்த முடியாது என்று நாம் அறிதல் வேண்டும். மறைக்கப்பட இயலாத சில உண்மைகள் எப்போதும் உள்ளன.

நாம் ஒன்றை அடைய வேண்டும் என்று குறியாக உள்ளோமே தவிர, அதன் முழுமையான திருப்தியை அடைய முற்படுவதில்லை. திருமணத்துக்குப் பிறகும், ஒவ்வொரு நாளும் உறவுகொண்ட பிறகும், ஒரு முழு

மையற்ற தன்மையே நம்மை அலைக்கழிக்கிறது. இந்த முழுமையற்ற தன்மையினால், வேறு யாரிடமாவது உறவு கொண்டால் முழுமை கிடைக்குமோ ஒரு வேளை என்று நினைக்கத் தொடங்குகிறோம். நம் இணைய ருக்கு இதில் ஆர்வமில்லை என்றோ அல்லது எது வும் தெரியவில்லை என்றோ, இல்லை அலட்சியமாக இருப்பதாகவோ எண்ண தலைப்படுகிறோம். ஆயினும் ஒருவனுக்கு ஒருத்தி என்ற நம் சமுதாய இலக்கணங்க ளுக்குள் அடங்க வேண்டியிருப்பதால், இவ்வளவுதான் அவன்/அவளிடமிருந்து பெற இயலும் என்று ஏற்றுக் கொள்கிறோம். சிறிது காலத்தில் அவர்கள் மீதான ஈர்ப்பு காணாமல் போக, உள்ளுக்குள் காமத்தின்பால் ஈர்ப் பிருந்தாலும், அதொன்றும் தேவையான விஷயமில்லை என நம்மை நாமே சமாதானப்படுத்திக்கொண்டு வாழ முற்படுகிறோம்.

ஒரு சிலர் வேறு எங்கும் அந்த மகிழ்வை அடைய முடி யுமா எனத் தேடுகிறார்கள் ஆனால் கிடைப்பது அத் தனை சுலபமுமில்லை, அப்படி கிடைத்தாலும் அங் கும் இவர்கள் எதிர்பார்க்கும் சுவாரசியம் கிடைக்குமா, அப்படி கிடைத்தாலும் இப்படிப்பட்ட உறவுகள் நீடித்து நிலைக்குமா என்பது சந்தேகமே.

அன்பு, அரவணைப்பு, காதல், பாலுணர்வு, வேதியி யல், பௌதிகவியல் மாற்றங்கள், சக மனிதர்களின் தனி மனித உணர்வுகளை மதித்தல் என்ற ஒன்றை யுமே அறியாமல், புரியாமல், தெளியாமல், வெறும் காம இச்சை ஒன்றே அரித்துக்கொண்டிருக்கும் நிலை, நாம் காமத்தை கொச்சைப் படுத்தி, தகாத வார்த்தையாக்கி அதன் மேல் அளவுக்கு அதிகமான கவனத்தை ஈர்த்து வைத்ததின் பலனே!

நம் பத்திரிகைகளில் தினமும் வரும் செய்திகளான வன்புணர்வு, கூட்டு வன்புணர்வு, குழந்தைகளைத் துன்

புறுத்தி கொலை என்ற விஷயங்களுக்குள்ளாக நான் போகவில்லை. அவை எல்லாம் வக்கிரத்தின் உச்சம்... அதற்கெல்லாம் இதை எல்லாம் தாண்டிய பல உளவி யல் காரணங்கள் உண்டு. திருப்தி கிடைக்காத சாதா ரண நிலையிலேயே எப்படிப்பட்ட பாதிப்புகள் வருகிற தென இங்கு முன்வைக்கிறேன்.

வக்கிரத்தின் வெளிப்பாடுகள்

1. பெண்களோடு பேசும்போது, அவள் கண் களை நேருக்கு நேர் பார்க்காமல் பேசும் ஆண்களை உங்களில் பலர் கண்டிருப்பீர்கள் என்று நான் உறுதி யாக நம்புகிறேன். அவர்களுடைய பார்வை எப்போ தும் பெண்களின் மார்பகத்தை நோக்கியே நிலைத்தி ருக்கும். அத்தகைய நிலையை எதிர்கொள்ளும் ஒரு பெண்ணிற்கு, இது சங்கடத்தை ஏற்படுத்துவதாகவும், அவளுடைய இயல்பான உரையாடலைத் தடுக்கும் வகையிலும் இருக்குமென இந்த ஆண்கள் உணர் வார்களா என்று எனக்குத் தெரியவில்லை. இத்த கைய ஆண்களுடன், பேசவும், தொடர்பு கொள்ள வும் வேண்டிய நிர்ப்பந்தத்தில் உள்ள பெண்களுக்கு, இது மிகப்பெரிய பிரச்சினையாகவே இருக்கும். இத் தகைய ஆண்கள், பெரிதாக ஏதும் குற்றம்செய்ய நினைக்காத பட்சத்திலும், பெண்களை மதிக்கும் கண்ணியமான ஆடவர் என்னும் நம்பகத்தன்மையை இழக்கின்றனர்.

2. வன்புணர்வுக்கு ஆளான பெண்கள் மேல் சிலர் குற்றத்தைச் சுமத்த முற்படுவர். அவர் கள் ஆடை அரைகுறையாக இருந்ததனால் தான் என்றோ, தகாத வேளையில் வெளியில் இருந்தார் கள் என்றோ, அவர்கள் எப்படி அந்த நேரத்திற்குத் தன் ஆண் நண்பனுடன் வெளியில் செல்லலாம் என்றோ கேள்விகள் கேட்டு, வன்புணர்ந்தவனைக்

குற்றம் சாட்டுவதை விட்டுவிட்டு, பாதிக்கப்பட்டவர்க ளின் மேலேயே குற்றம் சாட்ட முற்படுவார்கள். இவர் களெல்லாம் மனதிலேயே தினமும் பார்க்கும் பெண்க ளின் துகில் உரித்து உச்சம் அடைபவர்களாக இருக் கலாம்.

3. கூட்ட நெரிசல்களைச் சாக்காக வைத்து, பெண்களின் மார்புகளை தடவுவது, பின்னால் வந்து தன் ஆணுறுப்பினால் உரசி ஸ்கலிதம் கொள்ள முயல்வது. என்றாவது பலர் முன்னிலையில் ஒரு பெண் தன் கூச்சம் விட்டொழித்து நடப்பதை சொல்லி அசிங்கப் படுத்தும் வரை விடுவதில்லை இவர்கள்.

4. திருமணம் தாண்டித் தன் வயதொத்த வர்களிடம் உடலுறுவு ஏற்படுத்திக்கொள்ள தைரி யம் இல்லாதவரோ, சந்தர்ப்பம் கிடைக்காதவரோ, பாவம் ஒன்றுமறியாத் தன் உறவினர் குழந்தைகள், இல்லை அக்கம்பக்கத்துக் குழந்தைகளிடம் கேவல மாக நடந்து கொள்வது. இதை அங்கிள்களும் செய்வ துண்டு, ஆன்டிகளும் செய்வதுண்டு.

5. சிலர் பிறருக்குத் தெரியாமல் மறைந்தி ருந்து மற்றவரின் நிர்வாணத்தைப் பார்ப்பதிலோ இல்லை மற்றவர் உடலுறவு கொள்வதைப் பார்ப்ப திலோ இன்பமுறுவர்.

6. பாலுணர்வைத் தூண்டும் படங்களை, ஏதோ
கேளிக்கைக்கு மட்டும் என்பது போலன்றி, அதைப் பார்ப்பதில் போதையுடையவராய்ச் சிலர் உள்ளனர்.

7. சிலர் தம் காம வேட்கையைத் தணித்துக் கொள்ள, குழந்தைகள் மற்றும் சிறுவர்களின் தனி மையைத் தங்களுக்குச் சாதகமாக ஆக்கிக்கொள் கின்றனர். சமயத்தில் இவர்களின் வெறியால் குழந்

தைகள் மரணிப்பதும் நடந்துகொண்டு தான் இருக்கிறது.

8. இணையத்தில், அடுத்த முனையில் உள்ளவர் ஆணா அல்லது பெண்ணா என்றுகூட அறியாமல், எவருடனும், எல்லோருடனும், காம உரையாடல்களை மேற்கொள்ளும் இத்தகைய செயலும், வக்கிரத்தின் மற்றொரு வடிவம் ஆகும்.

# அத்தியாயம் - 8

# காதலின் வெளிப்பாடாக காமம்

காமம் காதலின் உச்சத்தின் வெளிப்பாடாக இருந் தால்தான் அது காமத்திற்கு அழகும் கூட. காமம் என்பது கரைபுரண்டோடும் காதலின் விளைவு; அதுவே காதலின் உச்சகட்ட வெளிப்பாடு. எடுத்துக்காட்டாக, ஒரு தாய், தான் கருவுற்றதிலிருந்தே தன் குழந் தையை நேசிக்கத் தொடங்கிவிடுகிறாள். சில நேரங் களில் அவள் தன் அன்பை மிக மென்மையாகவும், சில நேரங்களில் அழுத்தமான முறையில் முத்தங்க ளின் மூலமாகவும் தழுவுவதன் மூலமாகவும் வெளிப் படுத்துகிறாள். இந்த மெல்லிய அல்லது அழுத்தமான முனைவு, அவளுள்ளத்தில் அன்பு ஓடும் ஆழத்தைப் பொறுத்தது. காமம் என்பதும், இதயத்துள் கரைகடந் தோடும் காதலின் வெளிப்பாடே; இந்த வேகம், நாம் ஒரு குறிப்பிட்ட கணத்தில் எவ்வாறு உணர்கிறோமோ, அப்போக்கிலேயே வெளிப்படுகிறது. அந்த வேகம் அதி கரிக்கும்போது (நாம் அனைவரும் உடலியல் ரீதியாகத் தொடர்புடையவராக இருப்பதால், இது இயல்பாகவே, சாத்தியப்படுகிறது), அது காமத்தில் வந்து முடிகிறது. இதன் காரணமாகவே, பாலுறவு கொள்ளும் செயலைக் “காதல் புரிகிறோம்” (Love Making) என்கிறோம், மாற் றாக “காமம் புரிகிறோம்” (Lust Making) என்று சொல் வதில்லை. காதல் தன் நிலையிலிருந்து திரிந்து, உடல் சார்ந்து காமமாக வளர்கிறது என்ற இந்தக் காரணத்தி னாலேயே, இதைக் ‘காதல் மலரும் நிலை” என்கிறோம்.

காமத்திற்கான தேவை, உடல்ரீதியான கிளர்ச்சியை விட, உணர்வுப் பூர்வமாகவும், உள்ள ரீதியாகவும் கிளர்ச் சியடைவதிலேயே அதிகமாக உள்ளது என்று Alain de Botton தன் How To Think More About Sex என்ற புத்த கத்தில் தெளிவாகக் கூறியுள்ளார்.

நாம் குழந்தைப் பருவத்தைக் கடக்கும்போது, நம்மைச் சுற்றியுள்ளவர்களுடனான நெருக்கத்தை நாம் இழக்கி றோம். நம் பெற்றோரின், அரவணைப்பையும், அவர் கள் தொடுதலையும் இழக்கிறோம். மேலும், நம் உட லின், இயல்பான நிர்வாணத்தை இழந்து, ஆடைகளால் மறைத்துக்கொள்கிறோம். ஒருவிதமான ரகசியம் நம் மனதை ஆக்கிரமிக்கத் தொடங்குகிறது. இப்படித்தான் இருக்க வேண்டும் எனக் கற்பிக்கப் படுகிறோம். நம் புறத்தோற்றத்திற்கும் நம் அக நிலைக்குமான வேறுபா டுகள் இங்கு ஏற்படத் தொடங்குகின்றன.

"ஆனாலும், ஆழ்மனத்தில், நாம் பிறக்கும்போது,
நம்மோடு பிறந்த தேவைகள் நம்மை
விட்டு அகலுவதில்லை"

"நாம் நாமாக ஏற்றுக்கொள்ளப் பட்டிருப்போம்;
அன்பு நம் உடல் வழியாலேயே காட்டப்பட்
டிருக்கும்; இன்னொருவர் அணைப்பில்
இருந்திருப்போம்; உடல் வாசங்கள் மகிழ்வை
அளித்திருக்கும் - கிடைத்திருந்த இத்தனைகளும்
தான் நம்மை விடாது முத்தங்களுக்கும்,
உடன் உறங்குவதற்கு மற்றவரைத் தேடவும்
வைத்துக்கொண்டே இருக்கிறது."

— Alain de Botton

ஆனால் நம் தேடல்களோ, இந்த உளவியல் புரியாமல், தனக்குத் தேவை அந்த அன்பு தான் என உணரும்

தன்மையையே இழந்துவிட்டு, வெறும் உடலை மட்டுமே தேடுகிறோம், ஆனால் அதற்கு அன்பென்ற போர்வை போர்த்துகிறோம்.

அன்பே எல்லா உறவுகளுக்கும் அடித்தளம். அந்த அன்பின் மிகுதியால், இயற்கையின் உந்துதலால் அன் பின் வழி தோன்றலாக ஏற்பட வேண்டியதே காம உணர் வுகள் என்பதை நாமெல்லாம் கற்றுக்கொள்ள வேண் டிய கட்டாயத்தில் இருக்கிறோம் என்பதே வருத்தத் திற்கு உரிய செயல். சிலர் மரணிக்கும் வரை கூடக் கற் றுக்கொள்வதில்லை.

ஒரு குழந்தை பிறந்த உடனே இந்த பிரபஞ்சத்துடன் ஐக்கியமாகிறது. சக்தி, அன்பு, கருணை எல்லாம் அத னுடன் சேர்ந்து தான் பிறக்கிறது. குழந்தைகளுக்கு நாம் அன்பைத் தருவதாக, தர வேண்டும் என்பதாக நாம் நம் பிக்கொண்டிருக்கிறோம். மாறாக, அதைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு மட்டுமே குழந்தைகளுக்கு நம் மிடமிருந்து தேவைப்படுகிறது. குழந்தைகள் அன்பின் சொரூபம். அவற்றிற்கு அன்பை நாம் போதிக்க வேண் டியதில்லை. ஆனால் வளர வளர நாம் மாசுபடுத்தி வைத்திருக்கும் சூழ்நிலைகளால் அன்பு என்பது என்ன வென்றே தெரியாமல் போய்விடுகிறது. அன்பென்றால் என்னவென்று சொல்லிக்கொடுக்கவேண்டிய அவலம் ஏற்படுகிறது. எந்த மரத்திற்கும் நிழல் கொடுக்க யாரும் சொல்லிக்கொடுப்பதில்லை. அதன் இயல்பே அது தான். அப்படிப்பட்ட இயல்பை தான் நாம் குழந்தைகளி டமிருந்து பறித்து விடுகிறோம்.

கோவில் யானைகள் எவ்வாறு அடக்கப்படுகின்றன என்று நாம் எல்லாரும் அறிந்ததே. அது சிறியதாய் இருக்கும்போதே, அதன் கால் ஒரு சங்கிலியால் தூணு டன் பிணைக்கப்படுகிறது. அது எப்போதெல்லாம் நகர முயல்கிறதோ, அப்போதெல்லாம் அந்தச் சங்கிலியால்

பின்னுக்கு இழுக்கப்படுவதால், அது ஒவ்வொரு முறை யும் தோல்வியுறுகிறது. அந்த யானை வளர்ந்து பலம் பெற்றபிறகும் அது பிணைக்கப்பட்டிருக்கும் சங்கிலியை அறுத்தெறிந்து நகர முயலுவதில்லை. சிறுவயதிலி ருந்தே அந்தச் சங்கிலியைத் தன்னால் உடைக்க இய லாது என்று அதன் மனதில் ஆழமாகப் பதிந்து விடுகி றது. இதையே தான் நாம் நம் குழந்தைகளுக்கும் செய் கிறோம்.

சிறுவர் - குறிப்பாக கைக்குழந்தைகள் - மற்றவர்களைப் பார்க்கும்போது, அவர்களை முன்பின் அறிந்திராவிட் டாலும், தன்னிச்சையாகச் சிரிப்பர்; ஆனால், வயது வந்தோர், முன்பின் தெரியாதவரைப் பார்த்தவுடன் தன் னிச்சையாகச் சிரிக்கின்றனரா? இல்லை. இதற்கான காரணம், குழந்தை என்பது அன்பு மற்றும் பாசத்தால் ஆனது; அது அன்பையும் பாசத்தையும், அது பழகும் சூழலில் உள்ள ஒவ்வொருவருக்கும், எவருக்கும், தன் னிச்சையாகப் பகிர்ந்துகொண்டே இருக்கிறது. குழந் தையிடம் உள்ள அன்பின் சக்தி அனைவரையும் தன் னிச்சையாகக் கவர்கிறது.

அந்நிலை சிறிது காலத்திற்கு, சுற்றுப்புறத்திலிருந்து புதி தாகக் கற்றுக்கொள்ளும் வரை தொடர்கிறது. பின்னர், மெல்ல மெல்ல அந்தக் குழந்தை அதன் இயல்பான அன்பையும் பாசத்தையும் இழக்கத் தொடங்கி, தான் அன்பைப் பரப்பும் நிலையை மறந்து, அன்புக்காக ஏங் கும் உயிராக மாறுகிறது.

பளிச்சென்ற அந்தப் புன்னகையை ஒரு குழந்தை வீசும் போது, அதைச் சிலாகிக்கும் நாம், அதே குழந்தை வளர்ந்து பெரியவனாகி/பெரியவளாகி, அதே புன்ன கையை வீசும்போது, அவனை/அவளை மனப்பிறழ்வு கொண்டவராக பாவிக்கிறோம். முன்பின் அறியாதவ ரைப் பார்த்துச் சிரிக்க மறுக்கும்போதும், அன்பென்பதே

இந்த உலகத்தின் அனைத்தையும் இணைக்கும் ஒரே இழை என்பதை மறக்கும்போதும் தான் மனப்பிறழ்வு உண்மையிலேயே அடைகிறோம்.

குழந்தையைக் குறித்தும் சிறுவர்களைக் குறித்தும், ஏன் இங்கே பேசிக்கொண்டிருக்கிறோம் - அதுவும், காமம் குறித்த ஆய்வு நூலில்? ஆம். இந்த நூலின் மையக்க ருத்திலிருந்து இவ்வுரைகள் விலகுவது போல் தோற்ற மளித்தாலும் உண்மையில் அப்படி அல்ல. நமது குழந் தைப் பருவத்திலிருந்து நாம் இருக்கும் சூழலும், நம் கவனத்தை ஈர்க்கும் நிகழ்வுகளும், அவற்றிலிருந்து நாம் கற்றுக்கொள்ளும் விஷயங்களுமே, நாம் வளர்ந்த பின் னர், காதலையும், காமத்தையும், மற்றவையையும் எவ் வாறு அணுகுகிறோம் என்பதைத் தீர்மானிக்கின்றன. இது வெறும் வலிமையான தொடர்பு மட்டும் இல்லை, இதுவே மூலவேர்.

வளர்ச்சி என்ற பெயரில் நாம் நம் சிந்தனைத்திறனை இங்குமங்குமாகச் சிறிது தொலைத்து விடுகிறோம். ஒரு குழந்தை பிறக்கும்போது, அது, புத்துணர்ச்சியையும், இன்பத்தையும், சக்தியையும், முக்கியமாக அன்பையும், அந்த முழுக்குடும்பத்துக்கும் வழங்குகிறது. குழந்தை யின் அந்தக் கணங்களை நாம் நம்முடைய சாதனை களாக மகிழ்கிறோமே ஒழிய, அக்குழந்தைக்கு நன்றி சொல்லத் தவறுகிறோம். ஒரு குழந்தையைப் பெற்றெ டுத்தல் என்பது மிகப்பெரிய சாதனை என்னும் மாயைக் குள் வாழ்ந்துகொண்டு, நாம் தாய், தந்தையராகி விட் டோம் என்று உலகிடம் பெருமைபட்டுக் கொள்கின் றோம். நம்முடைய ‘குடும்பம்’ என்னும் சிறிய உலகில் அதிக அளவில் அன்பைப் பரப்ப வந்த அந்தக் குழந் தைக்கு நன்றி சொல்லும் தருணமது என்பதை உணர மறுக்கின்றோம். ஆனாலும், அத்தகைய குழந்தைக

ளைப் பேணி, 'நல்ல' சிறுவர்களாக வளர்த்தெடுப்பதை, நம் சாதனையின் அளவீடாகக் கருதுகிறோம்.

உலகக் கண்ணோட்டத்திலும், குடும்பத்தில் உள்ளவர்களின் பார்வையிலும், யார் 'நல்ல' குழந்தை? எந்தக் குழந்தை அதன் பெற்றோரையும், உடன்பிறந்தவர்களையும் நேசிக்கிறதோ, எந்தக் குழந்தை மூத்தோர்களை நேசிக்கிறதோ, எந்தக் குழந்தை மூத்தோர் சொல்லும் சொல்லைக் கேட்கிறதோ, எந்தக் குழந்தை, கீழ்ப்படிந்து நடந்து, சுற்றத்தார் மற்றும் நண்பர்கள் மத்தியில் நல்ல பெயரைச் சம்பாதிக்கிறதோ - அந்தக்குழந்தையா? இவற்றை வைத்துதான் நாம் ஒரு குழந்தையை நல்ல குழந்தை என நிர்ணயிக்கின்றோம். நாம் செய்வது சரியா? நாம் ஒரு கணமேனும் இது குறித்து ஆலோசிக்கிறோமா?

ஆறாவது அறிவொன்று உள்ளதாகப் பெருமைப் பட்டுக் கொள்ளும் மனித இனமான நாமே, சரி செய்ய இயலாத அளவிற்கு நம் உணர்வுகளை தொலைத்து விட்டிருக்கிறோம். அன்பு மற்றும் மரியாதை குறித்துக் குழந்தைகளுக்கு கற்றுக்கொடுக்க நாம் யார்? இதையெல்லாம் நாம் ஏன் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுக்கிறோம் என்று நம்மில் எவருக்காவது தெரியுமா? நம் சுயமரியாதையையும், சுய அன்பையும் நாம் குழந்தைத்தனத்திலிருந்து வெளி வந்ததும் தவற விட்டுவிட்டோம். இதற்கு நன்றி கூறவேண்டியது நம் பெற்றோர்களுக்கு. நாம் பெற்றோரானதும் இதையே நம் குழந்தைகளுக்கு நாமும் கடத்துகிறோம்.

குழந்தை என்பது அன்பின் அடையாளம்; பூரணம். ஆனால், மூத்தோர், அதன் எண்ணவோட்டத்தில் வண்ணப்பூச்சடித்து, அன்பிற்கான பொருள்சார் பார்வையைத் திணிக்கிறார்கள். அதனால், குழந்தையிடம் இயல்பாக உள்ள, அன்பு, மரியாதை ஆகியவை, அக்

குழந்தை அறியாமலேயே, மெதுவாகக் குறைந்துபோகிறது. அதன் பின்னர் அக்குழந்தை, வாழ்க்கை எனும் போர்க்களத்தில், அன்பையும் மரியாதையையும் படைக் கலன்களாகப் பயன்படுத்தத் தயார் ஆகிறது. இங்கு யார் வெல்கிறார்கள்? யார் தோற்கிறார்கள்? விளைவு என்ன? அக்குழந்தை உலகின் கைப்பொம்மையாக மாறிவிடுகிறது. ஆம். குழந்தைகள் தத்தம் மூளையையும், மனத்தையும் இழந்தபின்னர், யார் அவர்கள்? வெறும் கைப் பொம்மைகளே!

நம் மேலான சுய-அன்பையும் மரியாதையையும் அறவே ஒழித்துவிட்டு, மற்றவர்களிடம் அன்புடனும் மரியாதை யுடனும் இருக்குமாறு நமக்குக் கற்றுக் கொடுக்கப்படுவது என்பது துயரமானதாகும் (உண்மையில் துயரம் என்பது குறைந்த மதிப்பீடே!). இந்தக்காரணத்தால், நாம் மற்றவர்களிடம் அன்பையும், மரியாதையையும் எதிர்பார்க்கிறோம். உண்மையில், நாம் அன்புக்கும் மரியாதைக்கும் யாசித்துக் கொண்டிருக்கின்றோம். நம்மீது அன்பையும் மரியாதையும் செலுத்த, நாம் மற்றவர்களையும் நிர்ப்பந்திக்கிறோம்.

இந்த ஆழமான கருத்தைச் சிலர் மேலோட்டமாகப் பார்க்க முயன்று புரியாமல் போவதால், இது ஒரு புரியாத் தத்துவம் என கடந்து போக நினைக்கலாம். எனவே நாம் அதை வேறு கோணத்திலும் பார்ப்போம். எத்தனை பெற்றோர், ஆசிரியர், நண்பர், சுற்றத்தார், குழந்தைகளுக்குச் சுய அன்பு மற்றும் சுயமரியாதை குறித்து போதிக்கின்றனர்? நம் நாட்டில், சுய இன்பம் மட்டுமே விலக்கப்பட்ட விஷயமன்று; சுய அன்பும், சுயமரியாதையும் கூட விலக்கப்பட்ட விஷயங்களே! ‘சுய அன்பு’ என்பது ‘சுயநலம்’ என்றும், ‘சுயமரியாதை’ என்பது ‘அகங்காரம்’ என்றும் நிலைநிறுத்தப் படுகின்றன. இவை கட்டா

யமாக வெவ்வேறானவை; ஆயினும், நம்மில் எத்தனை பேர் இதை உணர்ந்துள்ளோம்?

ஒருவரின் செல்வம் முழுவதையும் அழித்துவிட்டு அவர் தான தருமம் செய்யவேண்டும் என்று எப்படி எதிர் பார்க்க இயலும்? நம் எதிர்பார்ப்பில் ஒரு நியாயம் இருக்க வேண்டுமல்லவா? நான் எத்துணை பணிவானவன் என மற்றவருக்குக் காட்ட நான் இப்படித்தான் இருக்க வேண்டும் என வலியுறுத்தி என்னைச் செய்ய வைக்குமி டத்தில், நான் எப்படி என் சுய-அன்பையும் சுயமரியாதை யையும் காப்பாற்றிக்கொள்ள முடியும்? மற்றவரின் வற்பு றுத்தல் படி நான் வாழத்தொடங்கும் பொழுதே இவை எல்லாவற்றையும் நான் தொலைத்து விடுகிறேன். ஒவ் வோர் ஆன்மாவும் இங்குக் காற்றை போல் சுதந்திரமா னது. ஆனால் அந்த ஆன்மாவை மற்றவருக்கு ஏற்றாற் போல் வடிவமைக்க முற்படுகையில் அங்கு ஆன்மா மர ணித்து விடுகிறது. இப்படித் தொலைத்ததைத் தேடித் தான் தன்னையே தேடுவதற்காகச் சிலர் ஆன்மிகம் என்ற பாதையை பிற்காலத்தில் நாடுகிறார்கள். வாழ்வே மாயம் எனத் தோன்ற ஆரம்பிக்கிறது. இந்த உலகின் சூதும் வாதும் புரியாத நிர்மலமான வயதில் தொலைத் ததை இனி எங்கே சென்று தேடுவது?

அன்பில்லா இதயம் மட்டுமே சுயநல இதயமாகிறது. நம் உள்ளத்தில் அன்பு இல்லை என்று தெரியும். அத னாலேயே, மற்றவர்களுடைய இதயங்களிலும் அன்பு இல்லை என்று நினைக்கிறோம். இந்தச் சூழ்நிலையில், தத்தம் தேவைகளை மட்டும் பூர்த்திசெய்து கொள்ளும் முறை ஏற்படுகிறது. அதனால் நான் சுயநலவாதியாகி றேன். என்மேல் எனக்கு மரியாதை இல்லை, அத னால் மற்றவரும் என்னை மதிக்கமாட்டார்கள் என்றே நினைக்கிறேன். நான் மதிக்கப்பட வேண்டியவன் என் பதை மற்றவர்களுக்குத் தெரிவிக்கும் பொருட்டு, நான்

அகந்தை உடையவன் ஆகிறேன். சுய அன்பும், சுய மரியாதையும் இல்லாத காரணத்தால் உண்டாகும் மாயையே இது.

பெற்றோர், ஆசிரியர், மூத்தோர் ஆகிய நாம், அன் பும் மரியாதையும் கொண்ட வாழ்க்கையை அமைத் துக்கொள்ளல் வேண்டும். குழந்தைகள், இதை உள் ளுணர்வில் அறிந்துகொண்டு, இயல்பாகவே அன்புள் ளத்துடனும், மற்றவரை மதிக்கும் குணமுடையவர்களா கவும் இருப்பர். அன்பையும், மரியாதையையும் வெறும் சொற்களால் கற்றுத்தரத் தேவையில்லை. தங்களு டைய பெற்றோர்கள் ஒருவருக்கொருவர் அன்பையும் மரியாதையையும் பகிர்ந்து கொள்வதைப் பார்க்கும் குழந்தைகள், உண்மையாகவே, அவர்கள் வாழ்வில் காணும் ஒவ்வோர் ஆண் பெண்ணுடனும் அன்புடன் இருப்பார்கள். செயல்கள், சொற்களை விட உரக்கப் பேசும் என்பதை அறிந்திருக்கிறோம். என்னைக்கேட் டால், "செயல் ஒன்றே போதுமானது; மற்றவை தன் னிச்சையாக அதனதன் இடத்தில் அமர்ந்துகொள்ளும்" என்பேன்.

அன்பையும் மரியாதையையும் எப்போதும் கற்றுக்கொ டுக்க வேண்டியதுமில்லை; அதற்கான தேவையும் இல்லை. எப்படி ஒரு ரோஜா பூக்கும் சமயத்தில் அதன் மணத்தையும் கொண்டுவருகிறதோ, அப்படியே, ஒரு குழந்தை பிறக்கும் போது, அன்பையும் கொண்டுவருகி றது.

அன்பும் மரியாதையும், இயல்பான குணங்களாகப் புழங் கும் ஓரிடத்தில் வளர்க்கப்பட்ட ஆணும், பெண்ணும், காமத்தைக் காதலின் வெளிப்பாடாகவே பார்ப்பர். அப் படிப்பட்டோர், மற்றவர்களோடு ஆழமான காதலில் ஈடு படும்போது, அவரது உணர்வுகள் இயல்பாகவே உடல் சார்ந்த இன்பத்தில் உச்சத்தை அடைகிறது. ஆனால்,

அவர் உறவுகொள்ள நினைக்கும் நபர், உடலியல் ரீதி யான உறவு தேவை இல்லை என்று நினைக்கும்போது, எந்த இதயத்தில் அன்பும் மரியாதையும் நிறைந்து இருக்கிறதோ அது தரம்தாழ்ந்து, தன்னுடைய ஆசை களை மற்றவரின் மேலே திணிக்காது. அத்தகைய இதயம், அன்பை மட்டுமே அனுபவிப்பதால், காமத்தை வற்புறுத்தாது. ஏனெனில் உண்மையான அன்பு, காமத் தையும் கடந்து நிற்கும்.

காதலும் அன்பும் நிறைந்திருக்கும் மனம் வாழ்வை ஓர் அழகான அனுபவமாகவே பார்க்கும். அன்பு நிறைந்தி ருக்கும் உள்ளம் தன் இணையரைத் தனி மனிதராக மதிக்கும். அப்படிப்பட்ட உள்ளம் காமத்தை காதலின் சக்தியின் ஒரு வெளிப்பாடாக பார்க்கும். இந்த மனத் திற்கு தெரியும் காமம் என்பது ஒரு பாவம் இல்லை, கவிதை போன்றே மிகவும் அழகானது என்று. காதலில், அன்பில், அக்கறையில், ஒருவருக்கொருவர் கொண்ட மரியாதையில் திளைக்கும் இருவர் கலவி கொள் கையில் இருவருக்கும் அது வார்த்தைகளில் வடிக்க இயலாத ஓர் அருமையான அனுபவமாகும்.

அத்தியாயம் - 9

# திருமணம் தாண்டிய உறவுகள்

முதலில், காமம் என்பதே சரியான பார்வையில் பார்க்கப் படாத போது, திருமண பந்தத்தை விட்டு வெளியோரி டம் உறவுகொள்ளும், "திருமணம் தாண்டிய உறவுகள்" என்னும் நிலை எப்படிப் பொறுத்துக்கொள்ளப்படும்?

மனித இனம் ஆதியிலிருந்து எப்படி அமைந்துள்ளது என்பதை முதலில் காண்போம். மனித இனம் இயற் கையாய், ஒற்றைத்துணை உறவைப் பின்பற்றும் இனம் அன்று. நம்முடைய சமுதாய வாழ்க்கையில், ஒழுக்கத் தைக் கொண்டுவரவே, 'ஒருவனுக்கு ஒருத்தி', "ஒருத் திக்கு ஒருவன்" என்னும் கட்டுப்பாடு கொண்டுவரப்பட் டது.

மனிதர்களை "ஒற்றைத்துணை உறவைப் பின்பற்றும் இனம்" இல்லை என்று நாம் கூறும்போதே, "திரும ணம் தாண்டிய உறவுகள்" என்ற நிலைக்குக் காரணங் கள் தேட வேண்டிய அவசியம் இல்லாது போகிறது. இருந்தபோதும், ஒருவர் ஏன் திருமணம் தாண்டிய உற வுகளை நாடுகிறார் என்பதற்கான காரணங்களைச் சிந் திக்கக் கூட மறுக்கிறோம். ஒருவர் ஒருவரிடம் மட்டுமே உறவு கொள்ள இயலும் என்று நாம் நம்பும்படியாக ஆண்டாண்டுக் காலமாகக் கூறப்பட்டு வந்திருக்கிறது. ஆழ்ந்து பார்த்தோமானால் இது தான் மனிதரின் இயல்பு எனில் அதை வலியுறுத்த வேண்டிய அவசியமே இருந் திருக்காது. அது இயல்பு இல்லை என்பதாலேயே அதற் கோர் இலக்கணம் நாமாக வகுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இந்த நிலையில், ஒருவர் ஒன்றுக்கு மேற்

பட்ட உறவுகள் வைத்துள்ளார் என்றால், அவர் குற்றவா ளியாகக் கருதப்படுகிறார்.

நம்மில் பலர், ஒரு பொருள் அல்லது நிலையைக் காணும்
போது, அதைக் கருப்பு அல்லது வெள்ளை என்ற இரு நிலைகளுக்குள் மட்டுமே பொருத்திப் பார்க்கிறோமே ஒழிய, இவ்விரண்டுக்கும் இடையே உள்ள இடைநிலை யைக் காண்பதைத் தவிர்க்கிறோம். உண்மை என்ன வென்றால், என்று திருமணம் என்ற பந்தம் பயன்பாட் டிற்கு வந்ததோ, அன்றிலிருந்தே, திருமணம் தாண்டிய உறவுகளும் இருந்து வந்திருக்கின்றன. ஒரு காலத்தில் ஆண்களுக்கு மட்டுமே இருந்து வந்த அந்த உரிமை இப்போது, தன் சிறகுகளை விரித்து, பெண்களிடமும் பற்றிக்கொண்டுள்ளது. நம் சமுதாயம் என்பது பழமை வாத கோட்பாடுகளுடனான சமுதாயம் என்பதை நம் பும் பொருட்டு, ஆண், பெண் இவர்களுக்கு இடையே இத்தகைய வெளிமண உறவுகள் இல்லை என்று கூறி விட முடியாது. அதை மறுத்துக்கொண்டே வாழ்ந்தா லும், உண்மை நிலை என்னவோ இத்தகைய உறவுகள் காலம் காலமாக இருந்துகொண்டே தான் இருக்கின் றன. இவற்றைக் குறித்து நாம் வெளிப்படையாக பேசுவ தில்லை என்பது மட்டுமே உண்மை.

திருமணம் தாண்டிய உறவுகள் எந்தெந்தக் காரணங்க ளினால் ஏற்படுகின்றன என்பதைப் பார்ப்போம்:

1. காதலற்ற மணவாழ்க்கை
2. திருப்தியற்ற தாம்பத்ய உறவு
3. புதிதாக எதையும் அறியும் ஆர்வம்
4. வெளியோரிடம் ஏற்படும் உண்மையான காதல் அல்லது கவர்ச்சி
5. மாற்றமில்லா நிலையில் ஏற்படும் சலிப்பு

இவை ஒவ்வொன்றையும் இப்பொழுது அலசுவோம்.

காதலற்ற மணவாழ்க்கை

காதலை எவர்மீதும் புகுத்துதல் என்பது சாத்திய மில்லை என்று நாம் அனைவரும் அறிந்ததே. அது வாக, தன்னிச்சையாகத் தோன்றுவதே காதல். காதல் மலரப் பலநூறு காரணங்கள் இருக்கலாம் என்றாலும், காதலை வலியப்புகுத்த இயலாது. திருமணம் முடிந் ததும், கணவனை மனைவியும், மனைவியைக் கண வனும் காதலிக்க வேண்டும் என்று நாம் எதிர்பார்க் கின்றோம். ஒருவேளை அப்படிக் காதல் மலரவில்லை அல்லது மலர்ந்த காதலும் வெகுகாலத்துக்குத் தொடர வில்லை என்றால் என்னாவது?

இவ்வுலகில், எதுவுமே நிலையானது இல்லை என் பதை நாம் மறந்துவிடுகிறோம். இன்று இங்குள்ளோம், ஆனால் நாளை எங்கிருப்போம் என்பது தெரியாது. இந்த உலகில்தான் இருப்போமா என்பதும் நமக்குத் தெளிவில்லை. மாற்றம் என்பதே மாறாதது என்னும் கோட்பாடு பெரும்பாலோராலும் ஒத்துக்கொள்ளப்பட்ட கோட்பாடாகவே உள்ளது. காதலும் அப்படியே; மாறக் கூடியதே! அதையும் ஒப்புக்கொள்ளத்தானே வேண் டும்?

தங்கள் வாழ்க்கையின் இறுதிவரை ஒருவரையே காத லித்தவர்களுக்கு என் சிரம் தாழ்ந்த வணக்கங்கள்! இப் படி ஒருக்காலும் இருக்க இயலாது என்று நான் கூறி னால் அதுவும் இயற்கைக்குப் புறம்பானதே. ஏனெனில் இந்த அன்பும் சாத்தியமே தன்னிச்சையாக இருக்கை யில்.

சில நேரங்களில், (உண்மையில் பெரும்பான்மையான நேரங்களில், இதை வெளிப்படையாகப் பலர் ஒப்புக் கொள்வதில்லை என்றாலும்), சில பல புரிந்த புரியாத

காரணங்களால், இருவருக்குமிடையே காதல் நீர்த்துப் போகிறது. அப்படியே காதல் முழுமையாக நீர்த்துப்போ காவிட்டாலும், உடல் நிலை மோசமடைதல், சலிப்புத் தன்மை, மற்றவரின் மீது நம்பிக்கை இழத்தல் போன்ற சில காரணங்களால், காமத்துக்கான உந்துதல் குறை யத் தொடங்குகிறது.

திருமணம் என்பது இருவர், தங்களிடையே காதல் குறையாமல், வாழ்நாள் வரையில், இருப்பதற்காக மேற் கொண்ட உடன்பாடு. அதுவே ஒரு முரணாக தெரி கிறது. காதலை யாரும் யார்மீதும் கட்டாயப்படுத்த முடியாது என்பதால், இந்த உடன்படிக்கை என்பதே அர்த்தமற்றது. அன்பு என்பது சமுதாயத்தின் சட்டதிட் டங்களுக்குக் கட்டுப்பட்டது அன்று. அது அதுவாக எழு வது, வளர்வது. இதயத்தில் அன்பு இல்லாமல், இருவ ரது உடல்களை மட்டும் முடிந்து வைப்பது, அவ்விரு உடல்களை உயிரற்ற ஜடங்களாக மாற்ற வழிகோலும். இருவருள் ஒருவர் அவர்களைப் பிணைந்துள்ள அந்த முடியை அவிழ்க்க நினைத்து இழுத்தால், முடியாத பட்சத்தில், அவர் உள்ளுக்குள்ளாய்ப் புழுங்க நேரிடும். இது வேற்றுமையையும், வெறுப்பையும் உண்டுபண் ணும். தனிமனிதரின் உயர்ந்த குணங்களாக நாம் பெரு மைப்பட்டுக்கொள்ளும், சகிப்புத்தன்மை, விட்டுக்கொ டுக்கும் மனப்பான்மை ஆகியவையால், ஒருவேளை, அன்பற்ற அத்தகைய மணவாழ்க்கை தொடர்ந்தாலும், அது அவர்களின் வாழ்க்கையைப் பரிதாப வாழ்க்கை யாகவே ஆக்கிவிடும்.

காதல் என்பது ஒரு ஈர்ப்பு. இது மற்றவரிடம் காணப்ப டும் குணங்களால் நமக்கு ஏற்படலாம், இல்லை உருவ கவர்ச்சியாக கூட இருக்கலாம். இது நம்முடைய தேவை களுக்கு ஏற்ப எழுவது. அத்தேவையை எவர் நிறப்பு கிறாரோ, அவர், நாம் அறியாமலேயே நம் காதலின்

பொருளாகிறார். மனிதர்களாகிய நாம், நம்மை மற்றவர் நேசிப்பதைத் தேவையாகக் கொண்டிருந்தாலும், மற்ற வரை நாம் நேசிப்பதையும் நம் தேவையாகக் கொண் டுள்ளோம். அத்தகைய நேசம், எந்த வடிவிலும் இருக் கலாம். அது வெறும் பொருளோ அல்லது சமுதாயத் தேவையோ மட்டும் அன்று. ஒரு சிலருடன் நாம் உரை யாடுவது நம் மனத்திற்கு ஆறுதல் கொடுப்பதாகவோ அல்லது மனதை இலகுவாக்குவதாகவோ இருக்கலாம். அத்தகைய ஒருவருடன் நாம் இருக்கும்போது, ஒருவ கையான இன்பத்தையோ அல்லது முழுமையையோ நாம் பெறுவதால், அந்த உணர்வு நாம் அவருடன் காதல்வயப்பட்டுளோம் என்று நினைக்க வைக்கிறது. அதையே நாம் 'காதல்' என்றும் கூறுகிறோம்.

இயல்பாக, ஒருவர் நமக்கு மேற்கூறிய வகையில் இன் பத்தையோ அல்லது முழுமையையோ தொடர்ந்து கொடுக்காமல் போகும் போது, அவர் நம் காதலின் 'பொருள்' என்னும் நிலையிலிருந்து மெதுவாகவோ அல்லது திடீரென்றோ விலகுகிறார்.

மேலும், காதல் என்பது நாம் பேசும் வார்த்தைகளை விட, மிகையாக, தொடுதலால் வெளிப்படுத்தப்படுவது. இந்தத் தேவை சரியாகக் கவனிக்கப்படாத நிலையில், காதல் குறையத் தொடங்குவதற்கான வாய்ப்புகள் அதி கரிக்கின்றன. இங்கே, நாம் நினைவு கூரவேண்டியது: திருமணம் என்பது நம் வசதிக்காக, நம் சமுதாயத்தால் ஆரம்பிக்கப்பட்ட ஒரு முறை. அந்த உறவு வெற்றியடைய நாம் முயன்றுகொண்டே இருத்தல் வேண்டும்.

இரண்டு இதயங்களுக்கிடையே ஆழமான நேசம் இருக் கும் போது, உடலுறவைவிட, ஓர் அழுத்தமான தழு வலோ அல்லது அன்பார்ந்த முத்தமோ பெருத்த உற் சாகத்தைத் தருவதாக அமையும் என்பது நம்மில் எத் தனைபேர் உணர்ந்துள்ளோம்? இரண்டு இதயங்கள்

சேராதபோது, அங்கே எத்தகைய செயலும் இன்பத் தைத் தராது.

அன்பற்ற திருமணவாழ்க்கை, திருமண பந்தத்திற்கு வெளியே அந்த அன்பைத் தேடத் தூண்டும். இது ஓர் இயல்பான விளைவாகத் தோன்றினாலும், சமுதாயம் இதை இயல்பான செயலாக எடுத்துக்கொள்ளுமா?

அன்பு தொலைந்த பிறகும் சண்டைகளுடனும் சச்சர வுகளுடனும் திருமண வாழ்வில் பிள்ளைகளைக் கார ணமாக காட்டிச் சேர்ந்து வாழ நிர்ப்பந்திக்கப்படும் நம் வாழ்வு முறையில் இவை நடக்கத்தான் செய்யும். பிள் ளைகள் மன ஆரோக்கியத்துடன் வளர அமைதி யான சூழல் மிகவும் அவசியமாகிறது. தாயும் தந்தையும் தினமும் அடித்துக்கொண்டோ, இல்லை பாராமுகமாக இருந்துகொண்டோ இருக்கும் சூழலில் பிள்ளைகள் வளர்வதைவிட, இருவரில் யாரவது ஒருவரின் துணை கொண்டு குழந்தைகள் அமைதியான, அன்பான சூழ லில் வளர்வதே நன்றாகும். நமக்குள் இருக்கும் பிரச்சி னைகளில் நாம் குழந்தைகளுக்கு ஒரு தவறான உதா ரணமாகவே வாழ்கிறோம். இல்லையெனில், போலித்த னமே வாழ்வின் வழி என்று குழந்தைகளுக்குப் போதிப் பது போலாகிவிடும்.

## திருப்தியற்ற தாம்பத்ய உறவு

ஒருவருக்கொருவர் இணையாக துணையாக ஒருவர் தேவையை மற்றவர் கவனித்து வாழ்வதற்காகத்தான் திருமணம் என்ற ஒன்றை செய்கிறோம். இது உடற்தே வையையும் உள்ளடக்கியதே. அன்பும் காதலும் தான் காமத்திற்கு அடித்தளமாகும் என்பதை நான் எவ்வளவு நம்புகிறேனோ அதே போல், திருப்தி இல்லாத உடலு றவும் அந்தக் காதலை அழித்து விடும் சக்தி உடை யது என்பதையும் நம்புகிறேன். திருப்தி இல்லாத உட

லுறவு, இல்லை உடலுறவே இல்லாத பட்சத்தில், சிறிது சிறிதாக, அன்பான கணவன் மனைவிக்கிடையே கூட ஒரு வேற்றுமைத்தன்மையை விதைத்து விடும். காமம் என்பதும் உணவைப் போல், மனிதனுக்கு ஓர் அடிப்ப டையான தேவை. மனதால் உடல் சேர்வதும், உடலால் மனம் நெருங்கியும் இருப்பதே ஒரு அழகான தாம்பத்திய உறவை ஏற்படுத்தும், நீட்டித்து
வைக்கும். இந்த உண்மையை நாம் மறக்கலாகாது.

ஓர் ஆண் மிகவும் அன்புடையவனாகவும், மிக வும் நல்லவனாகவும் இருக்கலாம். ஆனால் உடலால் அவளை திருப்தி அடைய வைக்க இயலவில்லையெ னில்? அதே போல் ஒரு பெண் மிகவும் அன்பானவ ளாகவும், அக்கறை எடுத்துக்கொள்பவளாகவும் இருக் கலாம். ஆனால், அவள் அவனின் உடற்தேவைகளை பூர்த்தி செய்ய ஒத்துழைக்காவிடில்? இங்கு ஏதோ தவறு இருக்கிறது அல்லவா? ஒருவரிடமோ இல்லை இருவரி டமுமோ?

காமத்தில், நமக்குப் பிடித்தவை எவை, பிடிக்காதவை எவை என்பது குறித்து நம்மில் எத்தனை பேர் உரையா டுகிறோம்? உடலுறவின் பால், ஒவ்வாமை இல்லாதபோ தும், அது குறித்து, பொதுவில் பேசாத நிலையைத்தான் நாம் கற்றுள்ளோம். நெருக்கமான உறவைக் கொள்ளல் அவசியம் என்னும் நிலையிலுள்ள கணவன்-மனைவி யிடத்தும் இத்தகைய ஒவ்வாமைகள் இருக்கலாம். ஒரு பெண் ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்வதில் ஒவ்வாது இருந்தாலும், கணவனுக்காக, அதை அவன் விரும்புகி றான் என்பதற்காக, அவனைத் திருப்தி செய்யவேண்டும் என்ற நோக்கில் மட்டும் அதைச் செய்பவளாக இருக் கலாம். அத்தகைய நிலையில் அந்தக் கணவன், அவ ளுக்கு விருப்பமில்லை என்றாலும், தனக்காகவே செய் கிறாள் என்பதை அறியாதவனாக இருந்தால், நாளாக

நாளாக, அவள் அச்செய்கையை மேலும் மேலும் வெறுக்க ஆரம்பிக்கிறாள்.

காமத்தின்பாலான தனது வேட்கையை ஆணிடம் வெளிப்படையாகத் தெரியப்படுத்துதல் தவறு என் னும் கருத்துடன் சில பெண்கள் உள்ளனர். அவ்வா றான வேட்கை இருந்தும் அவள், அதை வெளிக் காட்டாமல், இல்லாததுபோல் நடிக்கவேண்டியதாகிறது. அவளது கணவன் அவளிடம் மென்மேலும் இன்பத்தை நுகர்ந்து, அவள் மேலும் வெளிப்படையாக உறவில் ஈடுபட வேண்டும் என்று விரும்பலாம். ஆயினும் ஏற்க னவே பழக்கப்படுத்தப்பட்ட மூளை, அவளை அவ்வாறு வெளிப்படையாகச் செயலுறத் தடுக்கிறது. இந்த நிலை யில், சில காலத்திற்குப் பின்னர், அவளுடைய கணவன், மெல்ல அவள்பால் கொண்ட ஈடுபாட்டை இழந்து, ஒரு திருப்தியான உடலுறவிற்கு ஏங்க ஆரம்பிக்கிறான். இத்தகைய சூழல்களில், தயக்கமின்றி, உள்ளக்கிடக் கையை வெளிப்படுத்தினால், பயனுள்ளதாக அமையும். ஆயினும், காமத்தை மறைத்து வைத்து மனம் திறந்து பேசுவது தவறு என வளர்க்கப்பட்ட விதம் நம்மை அவ் வாறு செய்வதிலிருந்து தடுக்கிறது.

பெரும்பாலும் ஓர் ஆண் உச்சமடையும் நேரம் தான் ஒரு பெண்ணின் வேட்கையே கிளறப்படுகிறது. ஆத லால் பெரும்பாலும் பெண்கள் கிளறப்பட்டு அவள் நிறைவு பெறாத ஒரு செயலாகவே கலவி என்பது உள் ளது. அவளை சும்மா விட்டிருந்தாலும் சுகமாகப் படுத்து உறங்கியாவது இருப்பாள். அவள் வேட்கை உச்சத்தில் இருக்கும் நேரம் பொதுவாக அவன் குறட்டை விட் டுத் தூங்கியே இருப்பான். இப்படித்தான் பெரும்பாலான கலவிகள் முடிகின்றன. அந்தப் பெண்ணின் பரிதாபகர மான நிலை குறித்துக் கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தால் புரியும். எவ்வளவு வெறுக்கத்தக்க நிலையில் அவள்

வாழ்வு இருக்கும்? இதை நான் சொல்ல வேண்டு மென்று சும்மா சொல்லவில்லை. என் சொந்த அனுப வத்திலிருந்தும் இன்னும் நான் பேசிய பல பெண்களிட மிருந்தும், படித்தும் தெரிந்து கொண்ட விஷயம் தான்.

இதற்கு முரணான போக்கும் நடைமுறையில் உள்ளது என்பதை, நான் ஒரு பெண் என்கிற முறையில் தெரிந் துகொண்ட போது திடுக்குற்றேன். இந்த நூல் குறித்து நான், எனது ஆண் நண்பர்களுள் ஒருவருடன் பேசிக் கொண்டிருந்தபோது, அவர் ஒரு விஷயத்தை என்னிடம் பகிர்ந்துகொண்டார். அந்த நண்பர் அவர் மனைவியி டம் உடலுறவு கொள்ள முனையும் போதெல்லாம், அவர் மனைவி அதற்கு உடன்படமாட்டார். இருந்தாலும், எப் போதாவது ஒருமுறை அவரது மனைவி, நண்பரிடம், தனக்கு வேண்டியதைச் செய்யச் சொல்லி, தான் உச் சத்தை அடைந்ததும், எழுந்து சென்றுவிடுவார்.

அதுநாள் வரை, அத்தகைய சூழல்கள் பெண்களுக்கு மட்டுமே ஏற்படும் என்றும், ஆண்கள் எப்போதும், தங் களுக்கு வேண்டியதை, பெண்களுக்கு விருப்பமில்லை என்ற போதிலும், பெற்றே விடுவர் என்றும் தவறாக நம்பியிருந்தேன். என் நண்பரிடமிருந்து அந்த முரணான வழக்கத்தைப் பற்றி அறிந்தபோது, நான் என் அறி யாமையை உணர்ந்தேன். இந்த ‘உண்மையை’ நான் வேறொரு ஆணுடன் பகிர்ந்து கொண்டபோது, அவரும், தான் அவ்வாறே பல வருடங்களாக வாழ்வதாகக் கூறி னார். அவரது மனைவி அவர் அருகில் ஒவ்வொரு முறை வரும்போதும், அவருடைய உடல்ரீதியான வேட்கை தணியும் என்று நம்பினாலும், ஒருமுறையேனும் அவ் வாறு அமைந்ததில்லை என்று அந்த நண்பர் கூறினார்.

இவ்விருவரில் ஒருவர், தற்போது திருமண வாழ்க்கை யைத் தொடரவில்லை. அடுத்தவர், அவருக்குக் குழந் தைகள் உள்ளதால், திருமண பந்தத்தைத் தொடர்கி

றார். என்றாலும், தன்னுடைய வேட்கையைத் தனித்துக் கொள்ள மற்ற பெண்களை நாடுவதைத் தவிர வேறு வழியில்லை என்கிறார்.

சமுதாயத்தின் வரைமுறைகளை மதிக்கும் ஒருவர், ஒரு குறிப்பிட்ட காலம்வரை மட்டுமே தன் போலித்தனத் தைக் கடைபிடிப்பார். பின்னர், அவனோ, அவளோ, உடல்ரீதியான காரணங்களைக் கூறிக்கொண்டு, தன் னுடைய துணையிடம் உடலுறவு கொள்வதைத் தவிர்ப் பார்.

இதற்கான தீர்வுகளும், பரிகாரங்களும், திருமண பந்தத் திற்குள்ளேயே கிடைக்கும் என்றாலும், அவை வெளி யிலேயே தேடப்படுகின்றன. இதற்கான காரணம், காமம் குறித்த செய்திகளை அறியாதிருத்தலும், தம்பதியி னர் இடையே இதுகுறித்துப் பேச்சுகள் இருக்கலாகாது என்ற புராதன நம்பிக்கை கொண்டிருத்தலுமே ஆகும்.

இத்தகைய நிலையில் உள்ளோர், அவரது வேட்கை களை வேறிடத்தில் தேடிப் பெற்றுக்கொள்ள முனையும் போதும், அவ்வாறு அவரது உடல்ரீதியான தேவைக ளைப் பூர்த்திசெய்யும் திறன் மிக்கவரைப் பெறுதல் என் பது அதிர்ஷ்டவசமாக நடந்தால் தான் உண்டு. அப்ப டியான அதிர்ஷ்டத்தைப் பெறாதவரின் வாழ்க்கை மீண் டும் பேரழிவிற்கு உள்ளாகும்.

திருமணம் நடந்து ஐந்து ஆண்டுகளுக்கு மேலான ஒரு நபர் என்னிடம் கூறியது. “ஒவ்வொரு முறை கலவி கொள்ளும்போதும் அவளிடம் கேட்கிறேன். “உனக்கு என்ன பிடிக்கும் என்று சொல்லு. நான் செய்வது எதுவும் பிடிக்கவில்லை என்றாலும் சொல்லு. உன் மகிழ்ச்சியும் எனக்கு முக்கியம்” என்று. ஆனால் எப்பொழுது கேட்டா லும் தனக்கெனத் தனி விருப்பம் எதுவும் இல்லை என் றும், நான் செய்வதெல்லாம் பிடித்தே இருக்கிறதென்

றும், தான் மகிழ்வாகத்தான் இருப்பதாகவும் சொல்கி றாள். ஆனால் எனக்கென்னவோ அவள் என்னைச் சகித்துக் கொள்கிறாள், விரும்பிக் கலவி கொள்வதா கத் தோன்றவில்லை. இன்னும் எனக்கு அவளுக்கு எது பிடிக்கும் எது பிடிக்காது எனத் தெரியவில்லை. அது குறித்து பேசவே மறுத்துவிடுகிறாள்". ஏன் அவருக்கு அப்படித் தோன்றுகிறது எனக் கேட்டதற்கு அவர் கூறி யது, "ஒன்று தானாக அவள் என்றுமே என்னிடம் வரு வதில்லை. நானாக அருகில் சென்றாலும் பெரும்பாலும் ஏதும் காரணம் சொல்லி மறுத்து விடுகிறாள். ஆனால் கேட்டால், தனக்கும் பிடித்துத் தான் செய்வதாக சொல் கிறாள். ஒரே குழப்பமாக இருக்கிறது என புலம்பினார்".

வாழ்வு முழுவதும் இணைந்து வாழத்தானே திருமணம் புரிகிறோம்? அதுவும் உடலுறவு என்பது இருவரையும் இணைத்து வைக்கும் முக்கியமான பாலம் அல்லவா? அது குறித்துப் பேசாமல், தயங்கி கொண்டோ, தவறென நினைத்துக் கொண்டோ வாழ்ந்து கொண்டிருந்தால் எத்தனை நாட்கள் தான் உயிரோட்டமில்லாத அந்த உடலுறவு தொடர இயலும்?

## புதிதாக எதையும் அறியும் / அனுபவிக்கும் ஆர்வம்

மக்கள் வெவ்வேறானவர்கள். யாரோ பல விதிகளை ஏற்படுத்தி இருந்தாலும், அதைப் பலர் பின்பற்றிவந்தா லும், அந்தப்போக்கே அவர்கள் எல்லோரையும் ஒன் றாக்கிவிடாது. சரிதானே? ஒவ்வொருவரும் தனிப்பட்ட குணமுடையவர். பலர் தங்கள் மனதாலும், செயலாலும், கீழ்ப்படியும் மனப்பான்மை உடையவர்கள். சிலர் செய லால் கீழ்ப்படியும் நிலையில் இருந்தாலும், மனதால் வேறுபட்டிருப்பர். மேலும் சிலர், தங்கள் மனதின் போக் கில் செயல்களைக் கொண்டவராக, அவர்கள் வாழ்க் கையை அவர் விருப்பப்படி வாழும் குணமுள்ளவராக இருப்பர்.

சிலர் தான் பிறந்த இடத்திலேயே கடைசி வரை வாழ விருப்பமுள்ளவராக இருப்பர். சிலர் அவ்வப்பொழுது இட மாற்றத்தை விரும்புவர். சிலருக்கு ஒவ்வொரு நொடியும் வித்தியாசமாக வாழ வேண்டும். புது இடங்கள், புது மனிதர்கள், புதுவகை உணவுகள், என பலவற்றையும் பார்க்க வேண்டும் அனுபவிக்க வேண்டும் என நினைப்பவர்களும் உண்டு தானே? அதே போல் சில ஆண்களுக்கும் பெண்களுக்கும் புதுப் புது உறவுகளில் நாட்டம் ஏற்படும். வித விதமாக உறவை ரசித்து பார்க்கும் எண்ணம் ஏற்படும். இவர்களுக்குத் திருமணம் ஆனதும் ஆகாததும் பொருட்டல்ல. வாழ்வே தனக்குப் பிடித்ததை செய்து வாழ்வது மட்டுமே என நினைப்பவர்கள் இவர்கள்.

ஓர் ஆணோ பெண்ணோ தான் மணந்தவரைத் தாண்டி வேறு யாராலும் ஈர்க்கப்பட மாட்டார்கள் என யார் சொன்னது? இது சமூகம் வகுத்த இலக்கணமேயன்றி, இப்படி மற்றவரால் ஈர்க்கப்படுபவரின் தவறில்லை. இது இயல்பே. அவர்கள் உண்மையாகத்தான் வாழ்கிறார்கள். தன்னை ஏமாற்றிக்கொண்டு வாழவில்லை! இதெப்படி நியாயம் எனத் தோன்றுகிறதா?

சரி இதை ஆய்ந்து பார்ப்போம். ஒரு திருமணம் என்பது இணையரின் காதலை நமக்குப் பெற்றுத் தரும் என்பது உத்திரவாதமா? அன்பு, காதல் இதெல்லாம் நம் மனதிலிருந்து இதயத்திலிருந்து உருவாகின்றவை, நம் மூளையிலிருந்து அல்ல. ஆயிரமாயிரம் காலங்களுக்கு முன்னால் மனிதனின் வாழ்வை நெறிப்படுத்துவதற்காக மிக அதீத அறிவுத்திறனுடன் அறிமுகப் படுத்தப்பட்ட ஒன்றே திருமணம் என்பது. தன்னிச்சையாக ஏற்படும் காதல், அன்பு போன்ற உணர்வுகளை எப்படி ஒரு நிறுவனத்திற்குள் அடைத்து வைக்க இயலும்? உடலால் நாம் செய்யும் செயல்களை வேண்டுமானால் தடுக்க இயலும்.

மனம், இதயம் இவை எல்லாம் தானாகச் செயல்படு பவை. அவற்றின் போக்கை கட்டுப் படுத்த இயலாது.

நாம் வெறும் சந்ததியினரை உருவாக்கும் எந்திரங்கள் அல்லர். எல்லோராலும் இல்லை என்றாலும், இயல்பா கவே, நாம், எதிர் பாலினத்தாரால் (ஆண் பெண்ணா லும், பெண் ஆணாலும்) கவரப்படுபவரே. நாம் யாரை நல்ல இதயம் உடையவர் என்றும், நல்ல அழகுடைய வர் என்றும் கருதுகிறோமோ அவர்களால் கவரப்படுகி றோம். நம்முடைய மன அதிர்வுகளை ஒத்தவர்களோடு நாம் ஒத்து இயைகிறோம். கவர்ச்சி என்பது இன்னும் பல்வேறு காரணங்களைக் கொண்டது.

மற்றவர்பால் கொண்ட கவர்ச்சி நம் இதயத்தில் ஓர் உணர்ச்சியை உருவாக்குகிறது. நம்மில் 99 சதவீதம், நம் முடைய வாழ்க்கைத்துணையல்லாத, வேறு ஒருவரால் - குறைந்த பட்சம் ஒருவரால் - நம் வாழ்நாளில் ஒருமு றையேனும் கவரப்பட்டு, உணர்ச்சிமயமாகி இருப்போம் என்பதை நான் உறுதியாக நம்புகிறேன்.

தனக்கான காதலன்/காதலியோ, கணவன்/மனை வியோ இருப்பதால் அவர்களை ஏமாற்றும் விதமாக, இப்படி நினைப்பது தகாத ஒன்று என்று நினைக்கும் மக்கள் உள்ளனர். அத்தகையோர், தத்தம் இதயங் களில் எழும் அத்தகைய உணர்ச்சிகளைக் கட்டுப்ப டுத்தி, வெளியேற்றுகின்றனர். அவர்களுள் சிலர் அத் தகைய உணர்வுடன் வாழ்கின்றனர் என்றாலும், மேற் கூறிய அதே காரணத்தினால், செயலில் இறங்குவது கிடையாது. மேலும் சிலர், மற்றவர்களிடம் அகப்பட்டுக் கொள்வோம் என்றும், மற்றவர்களால் புறந்தள்ளப்படு வோம் என்றும், வாழ்க்கையில் பல இழப்புகளைச் சந் திக்க நேரிடும் என்றும் வெவ்வேறான அச்சங்களோடு வாழ்கின்றனர். அதனால் அம்மாதிரியான செயல்களை முன்னெடுப்பதில்லை.

சிலர் இயல்பிலேயே சாகசம் புரியும் ஆவலிலேயே இருப்பர். எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்த்துக்கொண்டிருப்பதிலே அதிக ஆர்வம் உள்ளவராக இருப்பர். இவர்களில் சிலர் கொஞ்சம் சிந்தித்து ஆபத்து மிகவும் ஏற்படாத வகையில் செயல்படுவர். சிலர் பிரச்சினைகள் எதுவுமில்லாமல் புதுப் புது உறவுகளை ஏற்படுத்திக் கொண்டு இருப்பர். ஆனால் இது அனைவருக்கும் சாத்தியம் அன்று. செய்யும் செயலினால் வரும் ஆபத்திற்கு இந்த வேலை மதிப்பு மிக்கதா, தேவையான ஒன்றா என்று சிந்தித்தே செயல்பட வேண்டும். ஒரு தொழில் புரிவது போலத்தான். இந்தத் தொழிலை செய்வதால் ஒரு வேளை நஷ்டம் ஏற்பட்டால், அந்த நஷ்டத்தை நம்மால் தாங்க முடியுமா எனச் சிந்தித்து முனைவது போல் தான் இதுவும். இப்படிப்பட்ட ஒரு குடும்பமோ, சமூகமோ ஏற்றுக்கொள்ளாத ஓர் உறவை நாம் நாடுகையில் அதனால் ஏற்படக்கூடிய பிரச்சினைகளையும் நம்மால் சந்திக்க இயலுமா என்று யோசித்துச் செயல் படுதல் நலம்.

காமத்தைப் புதிய கோணங்களில் ஆராய முற்படுபவர்கள் பொதுவாக அதை வேற்றாருடன், இனி அவரைச் சந்திக்கும் அவசியமில்லை என்னும் நபருடன் செயல்படுத்துவதையே விரும்புகின்றனர். ஏனெனில், காமத்தை ஓர் இயல்பான, வாழ்வின் அடிப்படைத் தேடலாக, உந்துதலாக, சாதாரண விஷயமாகப் பார்க்காத தன்மையினால், இப்படிப் புதிதாக எதுவும் ஆராயும் ஆர்வம் காட்டுபவர்களை பொதுவாக அவரவர் இணையர்கள் காமுகன் என்றோ, இல்லை ஏதும் கோளாறு என்றோ நினைத்து விடுவார்களோ என்னும் பயம் இருக்கிறது.

நான் அனைவரும் திருமணம் தாண்டிய உறவுகள் வைத்துக்கொள்ள வேண்டும் எனக் கூறுவதாகப் பொருள் கொள்ள வேண்டாம். நான் சொல்வதெல்லாம்,

மனிதர்களின் பார்வைகளும் எண்ணங்களும் வித்தி யாசமாக இருக்கும் தன்மையுடையவையே; அதுவும் இயல்பே என்று மட்டும் தான். திருமணம் தாண்டிய உற வுகளைத் தேடுபவர்கள் அனைவருமே தவறானவர்கள் என முத்திரை குத்தப்பட வேண்டியவர்கள் இல்லை. மனைவி, மக்கள் என்ற எடுத்த பொறுப்பைச் சரியாக நிறைவேற்றி, அவர்களுக்கான மகிழ்வையும் அளித்து, அவர்களுக்கான நேரங்களையும் ஒதுக்கி, அவனும்/ அவளும் இப்படி மகிழ்வாக இருந்தால், இதில் குறை கூற எதுவுமில்லை என்பதே என் பார்வை.

## ஒருவரை ஒருவர் மணக்காத இருவரிடம் ஏற்படும் உண்மைக்காதல்

அன்பின் வடிவான இதயம், வாழ்க்கை முழுதும் மீண் டும் மீண்டும் காதல்வயப்படும். அத்தகைய இதயத் துக்கு ஒரு காதல் என்பது இல்லை. திரைப்படங்களில், இதற்கு முரணான வசனங்களை நாம் கேட்டிருப்போம். நாயகன் தன் காதலியிடம், “என்னிடம் இருப்பது ஒரே ஒரு இதயம்; அதில் நீ மட்டும்தான் இருத்தல் இயலும். வேறெவருக்கும் அதில் இடமில்லை.” என்பார்.

காதல் என்பது நடந்துகொண்டே இருக்கும்; காதல் என்பது மலர்ந்துகொண்டே இருக்கும். ஒருவர் அவர் இதயத்திற்கேற்ப எத்தனை நபர்களை வேண்டுமானா லும் காதலிக்கலாம். அவர் வாழ்க்கையில் எதிர்கொள் ளும் பலபேரை, பல சூழல்களில், அவர் மீண்டும் மீண் டும் காதலிக்கலாம்.

ஒருவர் அவர் இதயத்தில் உங்களைத்தவிர வேறெ வரும் வராதபடி சுவர் எழுப்பும் மனப்பான்மையைக் கொண்டவர் என்றால், தன் இதயத்தில், அவர் உங்க ளைச் சிறைசெய்கிறார் என்பதை நீங்கள் உணருங்கள். அதை விரும்பி ஏற்கும் நீங்களும் அவரை உங்கள் இத

யத்தில் சிறை படுத்துகிறீர்கள். இப்படியே சிறிது காலம் சென்றால், இருவரின் மீதான காதலும் இருவருக்குமே மூச்சு முட்டும் நிலை வந்து மரணித்து விடும் அபாயமே உள்ளது. இது தான் உங்களுக்குத் தேவையா என்ப தைச் சிந்தியுங்கள்.

“ஒருவனுக்கு ஒருத்தி” என்பதை ஒரு விதியாக்கி, நம் முடைய முன்னோர்கள், நம்முள் ஒரு கட்டுப்பாட்டை வைத்தனர். திருமணம் என்ற முறையில் அதற்கேயான சில பயன்கள் உள்ளன. அது ஒருவிதமான வசதியை நமக்கு ஏற்படுத்தி தருகிறது. நாம் ஒரு குடும்பத்தை உருவாக்குகிறோம், அக்குடும்பத்தைக் காப்பாற்றுகி றோம், பின்னர் அக்குடும்பம் நம்மைக் காப்பாற்றுகிறது. ஆணுக்குத் தேவையானதை ஒரு பெண் தருகிறாள்; பெண்ணுக்குத் தேவையானதை ஓர் ஆண் தருகிறான். நம்முடைய பெற்றோர் நம்முடைய இளம் வயதில் நமக் குத் தேவையானதைக் கொடுக்கின்றனர்; அவர்களு டைய வயதான காலத்தில், அவர்களுக்குத் தேவையா னதை நாம் கொடுக்கிறோம். இவை யாவும் நம் வசதிக ளுக்கானவையே. எனவே திருமணம் என்பது காதலை மட்டுமே அடிப்படையாக கொண்டதன்று. வசதி என் பதே குடும்ப வாழ்க்கையின் அடிப்படை தத்துவம்.

நமக்கு ஓரிரு பிள்ளைகள் இருக்கலாம். நாம் அவர்க ளிடம் இதயபூர்வமாக அன்புசெலுத்தலாம். சில நேரங் களில் நம்முடைய உறவினர் மற்றும் நண்பர்களின் பிள் ளைகளின் பாலும் இதைப்போன்ற உணர்வை நாம் கொள்கிறோம் இல்லையா? அவர்களின் தாயிடம் காட் டும் அந்த அண்மையை, என்னிடமும் பல குழந்தைகள் பகிர்ந்துகொள்கின்றன. இதுவே அன்பு எனப்படுவது. அன்பு என்பது தன்னிச்சையானது. எந்த வகையான விதிகளுக்கும் உட்படாத தன்மையைக் கொண்டதே அன்பு. சட்டமோ அல்லது சமுதாய விதிகளோ, காதலை

நிர்ப்பந்தப்படுத்த முடியாது. அத்தகைய விதிகள் யாவும், பௌதீக அல்லது பொருளாதாரக் கடமைகளை மட்டுமே வலியுறுத்த இயலும்.

நாம் திருமண பந்தத்தில் உட்படும்போது, நம்முடைய துணைவரையும், பிள்ளைகளையும் பாதுகாக்கும் பொறுப்பேற்கிறோம். நம்முடைய குடும்பத்தை நாம் மதிக்கிறோம்; அதை நாம் பௌதீகரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் நடத்திச் செல்கிறோம். ஆனால் காதல் என்பது அதுவாக மலர்கிறது. ஒரு திருமண பந்தத்தில் அது மலரவோ அல்லது மலராமல் போகவோ வாய்ப்புகள் உள்ளன. அப்படியே அவர்களுக்கிடையே காதல் மலர்ந்தாலும், அவர்களுள் ஒருவராவது, வேறொருவரால் கவரப்பட்டு, அவர்களிடம் காதல் வயப்படுவது சாத்தியமாகவே உள்ளது.

நான் முன்னர் பணி செய்த அலுவலகத்தில் என்னுடன் பணியாற்றியவர் ஒருவர் இருந்தார். அவரது மனைவியை நான் பலமுறை சந்தித்துள்ளேன். அவர் கண்களில், அவர் கணவன் மீதான காதலை நான் பார்த்திருக்கிறேன். அது மிகவும் அரிதானது. அதற்கு முன்னர், அத்தகைய நிலையைக்கொண்ட வெகு சிலரை மட்டுமே பார்த்துள்ளேன்; அதுவும் அவர்களின் திருமணத்திற்கு முன்னர். ஆனால், என் நண்பரும் அவருடைய மனைவியும் ஏறக்குறைய இருபது வருடங்கள் தாம்பத்திய வாழ்க்கையில் ஈடுபட்டவர்கள். அவர்கள் ஒருவரை ஒருவர் பார்க்கும் போதெல்லாம், அவர்கள் கண்களில் காதல் ஒளிர்வதைப் பார்த்திருக்கிறேன். ஏதோ அவர்களுடைய காதல் அன்றலர்ந்த மலர் போல, அதே பொலிவுடன் காணப்படும்!

ஒரு நாள் என் நண்பருடன் நான் தனிமையில் பேசும் வாய்ப்பு கிடைத்தது. நான் அவரிடம், அவருடைய கண்களிலும், அவர் மனைவியின் கண்களிலும்

கண்ட ஒளிர்தலைக் குறித்துப்பேசினேன். நான் உண் மையிலேயே அந்த நிலையைக் கண்டு மகிழ்ந்ததாகவும் கூறினேன். நான் வெளிப்படையாகப் பேசக்கூடியவள் என்பதால், என் நண்பர்கள், என்னிடம் தத்தம் சொந்த விஷயங்களை எவ்விதத் தடையும் இன்றிச் சொல்வது வழக்கம். அந்த அழியாத காதலுக்குத் தான் தான் கார ணம் என்று என்னிடம் என் நண்பர் பெருமையாகச் சொன்னபோது, நான், "இது இயல்பானதுதானே, உங் கள் இருவருக்கிடையேயான காதல் தொடர்வதில் உங் களுக்கும் பங்குள்ளதுதானே!" என்ற மிக வழக்கமான பதிலைச் சொன்னேன். ஆனால், அதற்கு என் நண் பர் பதிலளித்த போது நான் திகைத்து நின்றேன். "என் மனைவிக்கு, மேற்கே வசிக்கும் ஒரு தூரச் சொந்தக்கா ரரிடம் உறவு உள்ளது. அவள் வருடம் ஓரிரு முறைகள் அவரை போய்ப் பார்த்து அவருடன் நேரம் செலவழித்து விட்டு வருவாள்." என்றார். "ஓ!, ஆனால், பொதுவாக, ஆண்கள் இதை ஒப்புக்கொள்வதில்லை. நீங்கள் எப்படி இதை இத்தனை இலேசாக எடுத்துக் கொள்கிறீர்கள்?" என்று கேட்டேன். இக்கேள்விக்கு என் நண்பர் கூறிய பதிலைத்தான் நான் உங்களுடன் உண்மையிலேயே பகிர்ந்துகொள்ள விழைகிறேன்.

"பாருங்கள்! அவள் என்னைக் காதலிக்கிறாள்; என்னை எப்போதுமே காதலித்துக்கொண்டிருக்கிறாள். என்னை, என் வயதான தாயாரை, என் குழந்தைக ளைப் பார்த்துக்கொள்கிறாள். ஓர் ஆண், ஒரு பெண் ணிடம் என்னவெல்லாம் எதிர்பார்ப்பானோ அத்தனை யையும் அவள் கொண்டுள்ளாள். ஆனாலும், வேறொ ருவனையும் அவள் மிகவும் காதலிக்கிறாள் என்பதை நான் அறிவேன். அவன் மேல் கொண்டுள்ள அந்தக் காதலால், அவளுக்கு என் மீதான காதலில் எந்த குறை வையும் நான் காணவில்லை. ஓரிரு முறை அவனைப்

பார்ப்பதிலும், அவனோடு சில நாட்களைக் கழிப்பதி லும் அவள் மகிழ்வுறுகிறாள். அந்த மகிழ்ச்சி, அதுவாக எங்கள் வீட்டிலும் பரவுகிறது. ஏனெனில் நான் அவனுட னான அவள் உறவு குறித்துப் பேசுவதோ அல்லது அவ ளைச் சங்கடத்துக்குள்ளாக்குவதோ கிடையாது. அத னால் என்மீதான அவள் காதல் நாளுக்கு நாள் அதி கமாகிறது. அவளுடைய அந்தக் குற்ற மனப்பான்மை, என்மீதான காதலை அதிகரிக்கலாம் என்று நீங்கள் கூறலாம். அந்தக் குற்ற மனப்பான்மையால், அவள் என் மீது அதிகம் அக்கறை காட்டலாமே ஒழிய, குற்ற மனப் பான்மை என்மீதான காதலை எவ்வாறு அதிகரிக்கும்?"

"அவள் கண்களில் எனக்கான காதலைக் கண்ட தாகக் கூறினீர்கள் அல்லவா? அந்த ஒன்றே போதாதா நான் மகிழ்ச்சியாய் அவளுடன் என் வாழ்க்கையை நடத்த? எங்களுக்கு இரு குழந்தைகள் உள்ளனர்; அவர்கள் மீது அன்பு செலுத்த நாங்கள் இருவரும் உள் ளோம். அவன் மீது அவள் காட்டும் அக்கறையை விட, என் மீதான அக்கறை அதிகமானது. ஏனெனில் நாங்கள், இந்தக் குடும்பத்தை உருவாக்கியுள்ளோம்; அதை நடத்திச் செல்ல, அக்குடும்பத்தில் பிளவு வரா மல் இருக்க, ஒருவரை ஒருவர் ஆதரித்து வருகிறோம். காதல் என்பது அளக்க இயலாதது; அதற்கான தேவை யும் இல்லை. அப்படித்தான் நான் அதைப் பார்க்கிறேன். அவள் நினைத்த விதத்தில் நடந்துகொள்ள அவளுக் குத் தேவையான சுதந்திரம் உள்ளது; அதைப்போன்றே அவனுடன் என்னையும் காதலிக்கும் அளவில் அவ ளுக்கு இதயமும் உள்ளது. இதை நான் தவறாகப் பார்க்க ஒரு காரணமும் இல்லை."

"ஆனால், இந்த நிலையில், உங்கள் மனைவியைப் போன்றே, உங்கள் தேவைக்கேற்ப நீங்களும் வேறொ ருவரிடம் உறவு கொள்ளலாம் என்று நினைத்ததில்

லையா? அப்படி நீங்கள் செய்தால் உங்கள் மனைவிக்கு அது உடன்பாடாகும் என்று நினைக்கிறீர்களா?" என்று நான் அவரிடம் கேட்டேன்.

"முதலில், அவள் கொண்டுள்ள உறவைப் போல, எனக்கு அத்தகைய நெருக்கமான உறவு ஏதும் இல்லை. அவள் அவனிடம் உறவு கொண்டுள்ளாள் என்ற ஒரே காரணத்திற்காக, நான் வேறோர் உறவைத் தேட வேண்டிய நிர்ப்பந்தமும் இல்லை. அப்படியென்றால், காதல் என்பதை நான் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று தான் ஆகும். எப்போதெல்லாம் நாங்கள் ஒன்றாக இருக்கிறோமோ அப்போதெல்லாம் மகிழ்ச்சியாகவே உள்ளோம். அந்த உறவைக் குறித்துப் பேசுவதில்லை. அவளுடனான என் உறவு, அவர்களுக்கிடையே உள்ள உறவுடன் எந்த வகையிலும் சம்பந்தப்பட்டதன்று. என்றாவது ஒருவேளை நான் வேறொருவரிடம் காதல் வயப்பட்டால் அன்று பார்க்கலாம். ஆனால், அது நடக்கும் என்ற நம்பிக்கை எனக்கில்லை. அப்படியே நடந்தாலும், அதை நான் அவளிடம் சொல்வேனா தவிர்ப்பேனா என்றும் எனக்குத் தெரியாது. எங்கள் இருவருக்குமிடையேயான உறவிலும், தனிப்பட்ட உறவிலும் மகிழ்ச்சியாக நாங்கள் இருக்கும் பட்சத்தில், நாங்கள் ஒருவருக்கு ஒருவருமாகவும், எங்கள் குடும்பத்தினருக்கும் ஆதரவாய் இருக்கும் பட்சத்தில், வேறு எதுவுமே பொருட்டல்ல."

இந்த உரையாடலிலிருந்து நான் கற்றது மிக அதிகம் என்பதை உணர்ந்தேன். இது காதல் என்பதன் உண்மையான உணர்வை எனக்குத் தெளிய வைத்தது என்றே கூறலாம். ஒவ்வொருவரும் என் நண்பனைப் போல் யோசிக்க ஆரம்பித்தால், குடும்பம் என்ற முறை, மேலும் வாழத் தகுதியான இடமாக ஆகும். அன்பு நிறைந்த நெஞ்சமும், தெளிவான புரிதலும் உள்ள ஒரு

வருக்கு வாழ்க்கை எப்படி இன்பமயமானதாக ஆகிறது பாருங்கள்!

ஆயினும் நாம் நாள்தோறும் காண்பது என்ன? செய்தித் தாள்களில் படிப்பது என்ன? "ஏமாற்றப்பட்ட கணவன், மனைவியைத் தூக்கிலிட்டான். ஏமாற்றப்பட்ட மனைவி, கணவனின் காதலியை எரித்தாள்" என்பன போன்ற வையே!

அன்பும் காதலும் எங்கே இருக்கின்றன? வெறும் காமம் மட்டுமே உள்ளது. உடல் மட்டுமே எல்லோருக்கும் ஒரு பொருட்டாகத் தெரிகிறது. உணர்வுகளும் இல்லை; காதலும் இல்லை; குடும்பம் குறித்த பொறுப்புமில்லை; வெறும் உடல்ரீதியான காமமே இங்கே முக்கியப்படுத் தப்படுகிறது. ஒவ்வொருவரும் உடல் மட்டும், புனித மானதாகவும், பிறரால் தொடப்படாததாகவும் வேண்டும் என்றே விரும்புகிறார்கள்.

நச்சரிக்கும் மனைவி, குடிமயக்கத்தில் மனைவியையும் குழந்தைகளையும் அடித்துத் துன்புறுத்தும் கணவன், இவை குறித்தெல்லாம் யார் கவலைப்படுகிறார்கள்? தன் மனைவியைத் தவிர வேறொரு பெண்ணை ஏறெ டுத்தும் பார்க்காதவன் மிக நல்லவன். அவன் இரா மனின் அவதாரம். இங்கேயும், இராமன், தன்னுடைய மனைவியான சீதையின் கற்பில் சந்தேகப்பட்டதாகவே கூறப்படுகிறான். இங்கேயும் வெற்று உடலின் கற்பே பொருட்டாக உள்ளது.

## மாற்றமில்லா நிலையில் ஏற்படும் சலிப்பு

காதல் ததும்பும், ஆரோக்கியமான, மகிழ்ச்சியூட்டும் காமத்தைச் சுகித்து வரும் தம்பதியினரிடமும், சில வரு டங்களுக்குப் பிறகு, சலிப்பு நிலை உருவாகச் சாத்தி யம் உள்ளது. அதே தொடுதலும், அதே எதிர் நிகழ்வும், சலிப்புதட்டி, இருவரையும் ஈர்ப்பற்ற நிலைக்குத் தள்ளி

விடும் அபாயம் உள்ளது. இதை இவ்விருவரும் வெளிப் படையாக ஏற்றுக்கொள்ளாவிட்டாலும், உற்சாகத்தின் வேகம் படிப்படியாக குறைகிறது.

இந்த நிலையை யோசித்துப் பாருங்கள். காதலின் போதோ, அல்லது திருமணம் ஆன புதிதிலோ, காத லர்/துணைவர் சம்பந்தப்பட்ட எந்தவொரு பொருளும் நிகழ்வும் நம்மைக் கிளர்ச்சியூட்டும் விதத்தில் இருக்கும். நாம் நம் துணைவரைப்பற்றி தெரிந்து கொள்வதிலும், அவரைப் பற்றி மேலும் அறிந்து கொள்வதிலும் ஆர்வம் காட்டுவோம். பேசும்விதம், யோசிக்கும் திறன், ஆடை உடுத்தும் அழகு, ஆடை களையும் விதம் போன்ற அவர் குறித்த அத்தனை செயல்களிலும் ஆர்வம் உடையவ ராக இருப்போம். ஒவ்வொன்றும் புதிதாக இருப்பதால், நாம் அவருடன் இருக்கும் ஒவ்வொரு நிமிடமும், சுவார சியமானதாகவும், மகிழ்வூட்டுவதாகவும் இருக்கும்.

தெரிந்தோ தெரியாமலோ, அவரை ஈர்க்கும் பொருட்டு, வெளிப்படையாக நம் அன்பைக்காட்டுதல், பெருமைப் படுத்துதல், பரிசுப்பொருள்களை வழங்குதல், ஏதாகி லும் ஆச்சரியப்படுத்தும் வகையில் செய்தல் போன்ற செயல்களில் அதிக அக்கறை காட்டுவோம். ஆனால், காலப்போக்கில், ஒருவரையொருவர் பொருட்படுத்து வது குறைந்துபோகும்.

சில வருடங்களில், இருவரும், மற்றவரைப் பற்றிய அத் தனையையும் அறிந்துகொண்டு, இருவருக்குமிடையே வேறேதும் புதிதாக அறிந்து கொள்ள இல்லை என்னும் நிலைக்குத் தள்ளப்படுவோம். ஒவ்வொரு சூழலிலும், அடுத்தவர் அதை எப்படி அணுகுவார் என்பது நமக்கு முன்னரே தெரிந்து போகும். அடுத்தவரின் உடலை - ஒவ்வொரு பகுதியையும் - பார்த்தும் தொடுதலை உணர்ந்தும் பழக்கப்பட்டுவிடுவோம். புதிதாகப் பார்ப்ப தற்கு ஏதும் இல்லை என்று எண்ணும் வகையில் தள்

ளப்படுவோம். இந்நிலையில், நம்மை அறியாமலேயே, அவர் மீதான ஆசையற்றுப்போகும்.

இத்தகைய ஆசை அற்றுப்போகும் நிலைக்கு, குழந்தைகள் மீதான பொறுப்புகளும் காரணமாகின்றன. மிகுதியான பொறுப்பை நாம் நம் தோள்களில் சுமக்க ஆரம்பிக்கிறோம். வீட்டிற்கு உள்ளும், வெளியிலும், நம்முடைய பணிகள் மெல்ல மெல்ல மிகுந்து, நம் வாழ்க்கை எப்போதும் தீவிர கதியில் செல்ல ஆரம்பிக்கும். குழந்தைகள் வளர வளர, அவர்கள் வாழ்க்கை குறித்த கவலைகளும் நம்முள் வளர ஆரம்பிக்கும்.

குதூகலம், இலேசான இதயம், ஒருவிதமான முரட்டு ஒழுங்கின்மை ஆகிய இம்மூன்றும், காமத்தை முழுமையாகச் சுகிக்கத் தேவையான அடித்தளங்கள் ஆகும். ஆனால் நாம் வாழ்க்கையில் இதர பிற, கடமைகளிலும், பொறுப்புகளிலும் ஈடுபட்டு இருப்பதால், ஒருவிதமான தீவிர வாழ்க்கை அமைந்து போகிறது. காமவிளையாட்டு என்பது அடைய முடியாத ஓர் இலட்சியமாக ஆகிப்போகிறது.

இதனால், இயல்பாகவே, புதிதாக ஒருவரை நாம் சந்திக்கும்போது, அவரிடம், நம் ஆசைகளுக்கு ஏற்ற, புதிதாக ஏதோ ஒன்றைப் பார்க்கும்போது, நாம் அவரால் கவரப்படும் நிலைக்குத் தள்ளப்படுகிறோம்.

இவை தவிர, சூழல் சாதகமாக அமையும் பட்சத்தில், ஒரே பார்வையிலும் சிலரால் கவரப்பட்டு, அதன் மூலம் இன்பம் பெறுவதும் உண்டு. இவை ஏதோ இன்பமான பொழுதைப் பகிர்ந்துகொண்ட நினைவுகளாக மனதில் தங்கிவிடுமேயன்றி, அந்த உறவை மேலும் தொடர வேண்டிய தேவையும் இருக்காது.

தொகுப்பாக...

திருமண பந்தம் தாண்டி, ஏதோ காரணத்திற்காக, வெளியே உறவுகொள்ளும் ஒவ்வொருவரும், தங்கள் குடும்பத்தின் தேவைகளையும், எதிர்பார்ப்புகளையும் நிறைவாகச் செய்வதில் கவனம் கொள்ளவேண்டும். எல்லாவற்றையும்விட, குடும்பம் என்பது அவர்களு டைய பொறுப்பு. பிற உறவுகள் பாலான ஈடுபாட்டால், தங்களுடைய குடும்பங்களுக்குத் தேவையான அன் பையும், ஆதரவையும் தராமல் குடும்பத்தினரை வருத் துவதற்கு எவருக்கும் உரிமை இல்லை. அடிப்படை யான விதி இதுவாகத்தான் இருத்தல் இயலும்: "என் மகிழ்ச்சி எனக்கு முக்கியம்; அது எனக்கு வெளியில் கிடைக்கிறது; ஆனால் அதே சமயம் என் குடும்பத்தின் மகிழ்ச்சியும் எனக்கு முக்கியம்; அதனால் அதற்கு எந்த பங்கமும் வராமல் நான் பார்த்துக்கொள்வேன்."

நாம் நம் அலுவலகத்தில் பணிச்சுமை அதிகமாகி எரிச் சல் அடையும் போதோ, நம் சந்தோசம் எதனாலோ பாதிக்கப்படும்போதோ என்ன செய்கின்றோம்? நாம் சோர்வடையும்போது, நாம் என்ன செய்கிறோம்? பொது வாக, நம்மில் பலர், நம்மைச்சுற்றி உள்ள மக்களிட மும், நம் நெருங்கிய உறவுகளிடமும் அந்த வெறுப் பைக் கொட்டித் தீர்க்கிறோம். எனவே, நம்முடைய மன வுளைச்சலுக்குக் காரணமாக அமைவது வேறொன்றாக இருந்தாலும், அதனுடைய தாக்கம் நம்முடன் நெருக் கமானவர் மீதே சென்றடைகிறது. குறைந்தபட்சம், தற் காலிகமாகவாவது, இத்தகைய நிலையை நாம் எல் லோரும் அனுபவித்திருப்போம். நம்முடைய அந்த மன வெளிப்பாட்டைக் குறித்துப் பின்னர் வருத்தப்பட்டிருப் போம்.

உதாரணமாக, என்னுடைய அலுவலகத்தில் என்னு டைய நிர்வாகியைத் திருப்தி படுத்தும் அளவிலோ அல் லது, எனக்கே திருப்தியான அளவிலோ, ஒரு அலுவல

கப்பணியை முழுமையாகச் செய்ய முடியாமல் போகிறது என்று எடுத்துக்கொள்ளுங்கள். அப்போது நான் விரக்தியான நிலையில் அலுவலகத்தை விட்டு வெளியேறுகிறேன். வீட்டை அடையும் போது, பல மணி நேரம் என்னைப் பார்க்காமல் இருந்த என் பிள்ளைகள் ஆசையுடன் என்மீது தாவுகிறார்கள். பிள்ளைகளின் இச்செயல் குறித்து நான் மகிழ்வுறாமல், அவர்கள் எதிர்பார்ப்பின்படி பிரதி இன்பத்தைக் காட்டாமல், அவர்கள் மீது எரிந்து விழுகிறேன். அந்தக் கணத்தில், என்னுடைய அலுவலகத்தில் நிகழ்ந்த சம்பவத்தின் காரணமாக, இருக்கும் மனநிலையில், என் பிள்ளைகள் தொந்தரவாகத் தெரிவதால், என்னைத் தனியாக இருக்க விடும்படியும், வேறெங்காவது போய் அவர்களை விளையாடுமாறும் சொல்லிக் கூச்சல் போடுவேன். இந்த மனநிலை, ஓரிரு நாட்கள் தொடரலாம். அல்லது, என் குடும்பத்தை நடத்த உதவும் அந்தச் சம்பளம் ஒன்றுக்காக, எனக்குப் பிடிக்காத நிலையிலும், அங்குப் பணியைத் தொடர வேண்டும் என்ற நிர்ப்பந்தத்தால், நீண்ட காலத்திற்குத் தொடரவும் செய்யலாம்.

மேற்கூறிய சம்பவத்திலிருந்து நாம் அறிந்துகொள்வது என்ன? நம்மில் பெரும்பாலானவர், நிகழ்காலத்தில், இந்தக் கணத்தில் வாழ்வதைக் கற்காமல் இருக்கிறோம். இன்று அலுவலகத்தில் நடந்தது என்ன? நாளை என்ன நடக்கும்? என்ற இக்கேள்விகளில் தான் நம்முடைய முழுக்கவனமும் உள்ளது. எதிர்காலம் இருட்டாகி விடுமோ என்ற அச்சத்தில், நிகழ்காலத்தின் இன்பத்தையும் நாம் தவிர்க்கிறோம்.

பலர் இத்தகைய சூழலில்தான் இருப்பார்கள். குடும்பப் பொறுப்பை ஏற்றது என்பது நம்முடைய தேர்வு. நாம் வாழும் முறை என்பதும் நம்முடைய தேர்வே. நம் பணியும் நம் தேர்வே. ஆயினும், சில நேரங்க

ளில், எல்லாம் சுமையாகிப்போகும் நிலையையோ அல்லது அதன் மூலம் மனவுளைச்சலையோ நாம் அடைகிறோம். எனவே, நம்முடைய வாழ்வின் இலக்கான இன்பத்தை நாம் அடையமுடிவதில்லை. அதனால், நாம் நம்முடைய அன்பானவர்களையே - அவர்கள் நம்மைச் சார்ந்து இருந்தாலும் - தேவையற்ற சுமையாகப் பார்க்கத் தொடங்குகிறோம். இப்படி நாம் எண்ணத் தொடங்கிவிட்டால், நாம் அவர்களுக்கு அன்பையும் ஆதரவையும் எப்படிக் கொடுக்க இயலும்? நமக்குள் நாமே இன்பத்தைக் காணாத பட்சத்தில், நமக்கு நம்மீதே அன்பு இல்லாத பட்சத்தில், நம்மைச் சார்ந்து உள்ளவர்க்கு, அன்பையும் ஆதரவையும் நம்மால் கொடுக்க இயலுமா? நம்மில் சிலர் நம் சுற்றங்களின் நிலை அறிந்து, நாம் அவர்களுக்கு எந்த விதத்திலும் அசௌகரியத்தையோ, மகிழ்வின்மையையோ அளிக்க கூடாது என்று எண்ணி, எதுவுமே நம்மைப் பாதிக்காதது போல் ஒரு முகமூடி அணிந்து அவர்களை மகிழ்வாக வைத்துக்கொள்வதில் கவனமாக இருப்போம். ஆனால் எத்தனை நாட்கள் இல்லை வருடங்கள் உள்ளே இருக்கும் அயர்ச்சியையும், மகிழ்வின்மையையும் மறைத்து வாழ இயலும்? என்றாவது நம் உணர்வுகள் வெடித்து உடனிருப்பவர்களைக் காயப்படுத்தத்தான் செய்வோம். அப்படி இல்லையெனில் உள்ளுக்குள் எதன் மேலும் யார் மேலும் பற்றில்லாத ஒரு நிலையை அடைந்து விடுவோம். ஆக நாமும் மகிழ்வாக இல்லாமல், மற்றவருக்கும் மகிழ்வை கொடுக்க இயலாத ஒரு நிலைக்குத் தள்ளப்படுவோம்.

பணமும், பணியும் மட்டுமே நம் வாழ்க்கையில் இன்பத்தையும் துயரத்தையும் உண்டுபண்ணும் காரணிகள் இல்லை. சிறியதும் பெரியதுமாக உள்ள, பல இதர நடப்புகள் நம் இன்பத்தை நிர்ணயிக்கின்றன. அன்பு என்

பது அதிலொரு மிக முக்கியமான காரணியாகும். காலம் என்பதும் ஒரு காரணியே.

இங்குக் காதல் என்பது எதிர்பாலாரின் மேல் வரும் ஈர்ப்பு, அன்பு என கொண்டால், காதல் ஒரு முறை தான் வரும் எனப்படுவது ஒருவிதமான மூளைச்சலவையே. அன்பு என்றால் அன்பு. இதில் ஏன் இத்தனை வகைகள்? எதிர்பாலாரின் மேல் வரும் அன்பிற்கு மட்டும் காதல் என்ற பெயரிட்டு ஒரு கட்டுப்பாட்டைக் கொண்டு வருவதற்காகக் காதல் ஒரு முறை தான் மலரும் என நம்ப வைக்க எடுத்த முயற்சியே இது. மாற்றம் ஒன்றே மாறாதது என்னும்பொழுது, அன்புள்ளம் கொண்ட ஒருவர் உள்ளத்தில் எத்தனை முறைகள் வேண்டுமானால் காதல் மலரலாம் எத்தனை மனிதர்களிடம் வேண்டுமானாலும் ஈர்ப்பு வரலாம் என்பதை மட்டும் ஏன் ஏற்க மறுக்கிறோம்?

திருமண பந்தத்தில் உள்ள ஒருவர், வேறொருவரிடம், அவரைக் கவரக்கூடிய, ஒரு சிறப்புப் பண்பைக் கண்டால் என்ன? காணும் அந்த நபரும், இவரிடம் அதே போன்று ஒரு சிறப்புப் பண்பைக் கண்டால் என்ன? இது இயல்புதானே? நாம் நம்மைப் பழக்கப்படுத்திய நிலையிலிருந்து விலகி இது குறித்துக் கவனித்தல் வேண்டும். இத்தகைய நிகழ்வுகள் நம்மில் பெரும்பாலானவர்களுக்கு நடக்கக்கூடியதே. நம்மில் ஒரு சிலரே, இந்தச் சமுதாய நிர்ப்பந்தத்திலிருந்து விலகி, இயற்கையின் வழியில் வாழ்கின்றோம். திருமணம் மற்றும் குடும்பம் ஆகியவற்றை நடைமுறைக்கு ஏற்றவாறு புரிந்து கொள்ளும் போதே, இந்த உண்மையை உணரத் தொடங்குதல் இயலும்.

அத்தியாயம் - 10

# நம்பிக்கையையும் கடந்து...

தங்கள் வாழ்க்கைத்துணையைச் சந்தேகப்படும் மக்
களை
நான் பார்த்துள்ளேன். தங்கள் வாழ்க்கைத்துணையை முழுமையாக நம்புவதாகக் கூறுபவர்களையும் பார்த்துள்ளேன். இவற்றுள், முதலாவது 'தவறு' என்பது போலவும், இரண்டாவது 'நல்லது' என்பது போலவும் பார்க்கப்பட்டாலும், இந்த வாழ்க்கையில் எதுவுமே 'முழு நிறைவான' ஒன்றாக இருப்பதில்லை. உறவுகளில், மக்கள், நம்பிக்கையைக் கடந்து செல்லல் வேண்டும். நான் இதை மிகவும் உணர்ந்தே சொல்கின்றேன்.

ஒருவருக்குத் தன் வாழ்க்கைத்துணையின் மீது சந்தேகம் இருந்தால், அந்த உறவில் உள்ள காதல் அழிந்துபோகும். கணவனும் மனைவியும், சமுதாயத்திற்காகவும், பிற கட்டாயங்களுக்காகவும், வசதிகளுக்காகவும் மட்டுமே, அந்த உறவைத் தொடர்ந்து கொண்டிருத்தல் இயலும்.

நான் ஒருவரை நம்புகிறேன் என்றால், அவர் அந்த எண்ணத்தைக் குலைக்கும் வகையில் ஏதும் செய்யமாட்டார் என்றே நம்புகிறேன். இப்படிச் சொல்லும்போதே, அடிமட்டத்தில் தோன்றும் அவநம்பிக்கையை நான் வெளிக்காட்டுகிறேன். என்ன நான் சொல்ல வருகிறேன் என்றால், "அவர் இதைச் செய்யலாம்; அவர் செய்வதற்கான சூழல்கள் வரலாம்; ஆனாலும் அவர் செய்யமாட்டார்." என்பதே. எனவே, எனக்குள், இது குறித்த ஒருவகையான ஆய்வு ஓடிக்கொண்டிருக்கிறது.

என்னிடம் என் இணையர் குறித்து, அவர் என் நம்பிக் கையைக் குலைக்கும் வகையில் செயல்களைச் செய் கிறார் என்று, என் நம்பிக்கைக்குகந்த மூன்றாம் நபர் என்றாவது கூறுகிறார் என்று வைத்துக்கொள்வோம். அப்போது நான் அவர் அவ்வாறு உண்மையிலேயே செய்தாரா என்று ஆராய ஆரம்பித்துவிடுவேன். அந் தச் சூழல்களுக்கு ஏற்ப, அவர், என் நம்பிக்கையைக் குலைக்கும் வகையில், செய்திருப்பார் அல்லது செய்தி ருக்க மாட்டார் என்று ஒரு முடிவுக்கு நான் வந்துவிடுகி றேன். இது ஒரு நல்ல உறவுக்கான அடித்தளம் ஆகாது. இத்தகைய உறவு, நீண்ட காலத்திற்குத் தாங்கும் வலி மையற்றதாகப் போய்விடும்.

உறவுகள் இயல்பாக நிலைத்து நிற்க, ஒருவர், நம்பிக் கையைக் கடந்து செல்லல் அவசியம். கணவர், மனை வியிடம் அலுவலகத்தில் ஒரு கூட்டம் இருப்பதால் வர நேரமாகும் என்று கூறும்போதே அந்த விஷயம் முற் றுபெற்றுவிடுகிறது. மனைவி அதை நேரிடையாக ஏற் றுக்கொள்ளல் வேண்டும். அதன் பொருள் அவ்வளவே. கணவன் அவ்வாறு கூறும் போது, மனைவியின் அருகில் வேறொருவர் உள்ளார் என்று எடுத்துக்கொள்வோம். அருகில் உள்ள அந்த நபர், “கணவனுக்கு உண்மையி லேயே அலுவலகத்தில் பணிதான் உள்ளதா, அல்லது வேறெவரோடும் அவர் வெளியே செல்கிறாரா?” என்று கேட்கிறார் என
வைத்துக்கொண்டால், சந்தேகத்தில் உள்ள மனைவி, “யாருக்குத் தெரியும்? அப்படிச் செய்யக் கூடியவர் தான் அவர்!” என்கிறார். இந்த உதாரணத்தில், மனைவி தன் கணவனைச் சந்தேகப் பார்வையோடு பார்க்கிறார் என் பதை நாம் உணர்கிறோம். அத்தகைய நிலையில், கணவன் மீதான காதல் என்பது எங்கே போய்விடுகி றது?

ஆனால் கணவனை நம்பும் மனைவி, “இல்லவே இல்லை. அவர் அத்தகையவர் அல்லர். எனக்குத் தெரியும்” என்பார். இந்த உதாரணத்தில், மனைவி, தன் கணவன் தன்னைப் புண்படுத்தும் விதத்தில் எதையும் செய்ய மாட்டார் என்று நினைக்கிறார். கணவன் மீது நம்பிக்கையுள்ளவராக இருக்கிறார். மனிதன் மாறக்கூடியவன் என்பதால், இந்த நம்பிக்கையின் அடித்தளத்தில், ஒரு சிறிய அவநம்பிக்கை எப்போதுமே இருக்கும். சூழல்களாலும், வாய்ப்புகளாலும், அந்த நம்பிக்கைத்தன்மையை இழக்கவும் வாய்ப்புகள் உள்ளன. இது முன் கூறிய விதத்தை விட ஆபத்தானது. ஏனெனில், முந்தையதில், உண்மை வெளிவரும்போது மனைவி அதை எதிர்கொள்ளும் நிலையில் இருப்பார், ஏற்கனவே அவர் கணவன் மீது நம்பிக்கையற்றவர் தான். இரண்டாம் வகையில், மனைவி மனமுறிவை எதிர்கொள்வார்.

நம்பிக்கையைக் கடந்தவர் இத்தகைய நிலையில், “நான் இதைக்குறித்து ஏன் ஆராய்தல் வேண்டும்? அவர் தாமதமாக வருவார் என்றார், அது மட்டுமே எனக்குத் தேவையானது. நான் அவருக்குச் சமையல் செய்தல் வேண்டுமா என்றும், அவருக்காக நான் காத்திருத்தல் அவசியமா என்றும் முடிவு செய்ய மட்டுமே இந்தத் தகவல் எனக்குத் தேவை.” என்று நினைக்கிறார் என்றால் அங்கேயே முடிகிறது அந்த விஷயம். மனைவி, அவள் வழியில் மகிழ்ச்சியுடன் தன் வேலையைப் பார்த்துக்கொண்டு இருப்பார். அவர் எதைக் குறித்தும் ஆராய வேண்டியதில்லை. முடிவற்ற எண்ணங்களால் அவரது சக்தியையும், நேரத்தையும் அவர் வீணடிக்கவும் வேண்டியதில்லை. அவரே, தன் கணவனை முழுமையாகக் காதலிக்கும் மனைவி. இது ஒருவிதமான அலட்சியப் போக்கு என்று மக்கள் நினைக்கலாம். கண்டிப்பாக அது அப்படிப்பட்டதன்று. தன்னுடைய கணவன் பாது

காப்பாக உள்ளார் என்றும், அவர் அலுவலகத்திலேயே உணவை உண்பார் என்றும் அறிந்த பட்சத்தில், அது அலட்சியப்போக்கு ஆகாது. இதுவே காதல். இது வொன்றே காதலாக இருத்தல் இயலும்.

# அத்தியாயம் - 11

# நட்பே அடித்தளமாக......

"நட்பை அடித்தளமாக கொள்ளாத எந்த காதலும் (அன்பும்) மணல் மேல் எழுப்பிய மாளிகை போன்றது"

— Ella Wheeler Wicox

இதைப் படிக்கையில் எனக்கு நினைவிற்கு வருவது என் நண்பனொருவனின் கூற்று: "நட்பென்பது ஒரு மாளிகை போன்றது. அதில் எல்லாவற்றிற்கும் அறைகள் உண்டு"

முதல் கூற்று நட்பை விட மேலானது எதுவுமில்லை எனப் பொருள் கொள்கிறது. இரண்டாவது ஒரு கேள் வியை முன்வைக்கிறது. "ஏன் அன்பினால் ஏற்படும் அத் துணை உறவுகளையும் நட்பாகப் பார்க்கக்கூடாது?"

நட்பின் அழகே நாம் ஒரு நண்பரை நமக்கே நமக் கானவராக, நம் உடைமையாகச் சொந்தம் கொண்டாட மாட்டோம் என்பதே. அவர்களைத் தனி ஒரு மனிதராக நாம் மதிப்போம். ஆனால் ஒரு கணவன் - மனைவி உற விலோ, காதலர்கள் உறவிலோ இது பொதுவாகச் சாத் தியப்படுவதில்லை. நம்மொரு நண்பனுக்குப் பல நண் பர்கள் இருப்பார்கள்; சிலரை நமக்குத் தெரிந்திருக்கும்; சிலரைத் தெரியாமல் இருக்கும். ஆனால் அதைப் பற்றி யெல்லாம் நாம் கவலை கொள்வதில்லை.

நாம் அவரைச் சந்திக்கும் வேளைகளிலும் சரி, சந்திக் காத வேளைகளிலும் சரி அன்பென்ற ஓர் இழை அங்கு ஓடிக்கொண்டே தான் இருக்கும். அவருக்கு நம்மைத் தவிர இன்னும் பத்தோ நூறோ நண்பர்கள் இருந்தாலும் நம்மீது அவருக்கு அன்பு இல்லையென்றோ, இல்லை குறைந்துவிட்டது என்றோ சிந்திக்கவே மாட்டோம்.

அவருக்குப் புதுப்புது நட்புகள் ஏற்படும்போதும் நம்மை விட்டு அவர் விலகுகிறார் என்றோ, நம்மை ஏமாற்றிவிட்டார் என்றோ கவலை கொள்ள மாட்டோம். ஒரு வினாடி கூட, நம்மை அவருக்குப் பிடிக்காமல் போய் விட்டதோ, நம்மீது ஏதாவது குறை கண்டுவிட்டாரோ இல்லை நம் நட்பு இனி அவருக்குத் தேவைப் படவில்லையோ என்றெல்லாம் குழப்பிக்கொள்ள மாட்டோம்.

ஆனால் திருமணம், காதல் என்று ஏற்பட்டுவிட்டால் மட்டும், ஏன் இத்தனை குழப்பங்களும், வேண்டாத எண்ணங்களும் வந்து ஒட்டிக்கொள்கின்றன? இம்மாதிரியான எண்ணங்கள் எந்தவோர் உறவையும் அழித்து விடும் தன்மை கொண்டவை. ஆனாலும் நாம் பெருமையாகக் கூறிக்கொள்வோம் எங்கள் உறவு அன்பினாலானது என்று.

நட்பு என்பது ஓர் இயற்கையான உணர்வினால் ஏற்படும் உறவு. மற்ற எல்லா உறவுகளுக்கும் ஓர் இலக்கணம், சட்டம், வரைமுறை என உருவாக்கி வைத்திருக்கிறோம். அவை தான் பெரும்பாலும் நம் இயற்கை உணர்வுகளுடன் உரசி குழப்பங்களை உருவாக்கி விடுகின்றன.

ஒரு நட்பில் எதையும் செய்துதான் ஆகவேண்டும் என்ற எதிர்பார்ப்பில்லை. நம் தேவைகள் அனைத்தையும் ஒரு நண்பர் பூர்த்தி செய்துதான் தீரவேண்டும் என்ற கட்டாயமில்லை. உதாரணத்திற்கு நான் ஒரு நண்பரைக் கேட்கிறேன் இன்று மாலை எதுவும் திரைப்படத்திற்குச் செல்வோமா என. அவர் வேண்டாம் என ஏதோ ஒரு காரணத்தினால் சொல்கிறார் என வைத்துக்கொள்வோம். நான் அவர் எதனால் வரவில்லை என ஆராய மாட்டேன். அதனால் என்ன? இன்னொரு நாள் போய்க் கொள்ளலாம் என விட்டுவிடுவேன்.

அதே போல் நான் ஒரு நண்பரிடம் இன்றெனக்கு அவரைப் பார்க்க நேரமில்லை, இன்னொரு நாள் பார்த்துக் கொள்ளலாம் எனக் கூறினால், அவரும் சாதாரணமாகச் சரி என்று சொல்லிக் கடந்துவிடுவார்.

ஆனால் அதே சமயம் எனக்கோர் உதவி என்றால் எல்லாவற்றையும் போட்டுவிட்டு ஓடி வருவார். அவர் ஊரில் இல்லை எனில், அவர் வீட்டில் யாருக்காவது உடல் நிலை சரி இல்லை எனில் நான் ஓடுவேன். நான் இருக்கிறேன் கவலைப் படாதே என்ற ஓர் எழுதப்படாத நியதி இருக்கும்.

ஒரு குற்ற உணர்வோ, ஏமாற்றப்பட்ட உணர்வோ ஒரு நல்ல நட்பில் ஏற்பட வாய்ப்பே இல்லை. இதே விஷயங்கள் ஒரு கணவன் மனைவிக்குள் நடக்கையில், அது ஒரு பெரும் பிரச்சினையாகவே வெடிக்கிறது. ஏன்? நட்பில் நாம் ஒருவரை ஒருவர் கட்டுப்படுத்த நினைப்பதில்லை. ஆனால் உறவிற்குள் என் கட்டுக்குள் நீ என்றோ, எனக்காகவே நீ என்றோ ஒரு செயற்கையான கயிறைக் கட்டிவைக்க விழைகிறோம்.

நட்பில் ஆலோசனைகள் வழங்கிக்கொள்வோம், ஆனால், நம் ஆலோசனைப்படி தான் அவர் நடக்க வேண்டும் என நிர்ப்பந்திக்க மாட்டோம். ஆளுமையோ, அடக்கமோ நட்பில் தலை தூக்குவதில்லை.

ஒரு நண்பர் அவரின் இன்னொரு நண்பரை அறிமுகப் படுத்தினால், அவரை நமக்குப் பிடித்திருந்தால் நாமும் நட்பாவோம். இல்லையெனில், நம் நண்பரிடம் தனியாக எனக்கு அவரைப் பிடிக்கவில்லை, இனி அவர் வரும் பொழுது என்னைக் கூப்பிடாதே என்று வேண்டுமானால் சொல்வோம். எனக்கு அவரைப் பிடிக்கவில்லை, அதனால் நீயும் அவருடன் நட்பாயிராதே எனக் கூற மாட்டோம்.

இதே ஒரு திருமணத்திலோ, காதலர்களுக்குள்ளோ என்ன நடக்கும்? “ஒன்று அவன்/அவள் நட்பை நீ துண்டிக்க வேண்டும், இல்லை நான் உன் உறவைத் துண்டித்து விடுவேன்” என்று நிர்ப்பந்திக்கப்படுவோம்.

எந்த ஓர் உறவாக இருந்த போதிலும் அங்கு நட்பு என்ற ஒன்று போற்றப்படவேண்டும். நட்பே அடித்தளமாக இருத்தல் வேண்டும். ஓர் அம்மாவிற்கும் பிள்ளைகளுக்கும் இடையிலோ இல்லை அப்பாவிற்கும் பிள்ளைகளுக்கும் இடையிலோ, இல்லை உடன் பிறந்தவர்களுக்குள்ளோ நட்பு என்ற ஓர் அற்புதம் இருந்தால் வாழ்வு எத்தனை சுலபமாக இருக்கும்?

பல வருடங்கள் தொடர்பில் இல்லாமல் இருக்கும் நட்புகள் நடுவில் என்ன ஆகின்றது? நட்பு இன்னும் வலுப்பெறுகிறது. நட்பு நம்மைச் சிறைப் படுத்துவதில்லை, நம்மை விடுதலைப்படுத்துகிறது. நம்மீது எதையும் திணிப்பதில்லை.  எனக்கு மட்டுமே நீ என வசனம் பேசுவதில்லை. ஏன், நட்பு நிலைக்க வேண்டும் என்று கூடத் திணிப்பதில்லை. திணிக்கவும் இயலாது. எந்தச் சட்ட திட்டங்களுக்குள்ளும், இலக்கணங்களுக்குள்ளும் நட்பு விழுவதில்லை; அது இயற்கை தன்மை கொண்டது.

நட்பே அடித்தளமாகட்டும், எந்தவகையான உறவு முறையாக இருப்பினும்; காதலர்கள், இணையர்கள், பெற்றோர்-பிள்ளைகள், ஆசிரியர்-மாணவர்கள், உடன் பிறந்தவர்கள், எதுவாக இருப்பினும்.

நாம் ஒருவரின் மேல் அன்பு வைத்திருப்பதின் அறிகுறி என்னவென்றால், அவருக்கு இடைவெளி தேவைப்படும் நேரம் ஒதுங்கி இடம் கொடுப்பதும், நம் அருகாமையை விரும்பும் நேரம் அணைத்து ஆதரிப்பதும் ஆகும். அவர்களுடனேயே எப்பொழுதும்  இருக்க

வேண்டியதில்லை, அவர்களுக்குத் தேவைப்படும் நேரம், கூப்பிடு தொலைவில் நாம் இருந்தால் போதும். உண்மையான நட்பிற்கு இதுவே ஆதாரம்.

நம் எல்லா உறவுகளுக்கும் பாலமாக நட்பென்ற ஒன்றை அமைத்து விட்டால் போதும், நம் உறவுகள் நாமே ஆச்ச ரியப்படும் அளவிற்கு வலுப்பெறும்.

## அத்தியாயம் - 12

# பரிதவிப்பு

# (Desparation)

காமம், ஏன் ஒரு மூர்க்கத்தனமான தவிப்பை ஏற்படுத்துகிறது எனச் சில நிகழ்வுகள் என்னை சிந்திக்க வைக்கின்றன.

மனிதர்களிடம் காமத்திற்கு ஏன் இப்படி ஓர் அலைச்சல்? மற்றவர் விரும்பாத போது கூட அவர்களை ஏன் நச்சரிக்கும் வேலை? ஒருவர் மேல் ஈர்ப்பு வருவதில் தவறொன்றும் இல்லை. அனால் ஒருவர் தனக்கு விருப்பமில்லை என சொன்ன பிறகு, அதை விட்டுவிட்டு நட்பைத் தொடருவது தானே நியாயம்?

காமம் எப்பொழுதுமே மூளையில் இருந்து கொண்டே இருக்கிறது. ஆக எப்பொழுது சந்தர்ப்பம் கிடைக்கும் எனக் காத்து கிடக்கச் சொல்கிறது. சிலருக்கு வேண்டியது என்னவோ காமமாக இருந்தாலும், அதை அடைவதற்கு காதல், அன்பு போன்ற வார்த்தைகளைப் போட்டு நிரப்ப முயலுகின்றனர். சிலர் உன்மீது எனக்கு காதல் என்று சொல்லும்போதே அப்பட்டமாகத் தெரியும் அவர்களுக்குத் தேவை காமம் தான் என்று. நாம் காமம் வேண்டாம் எனச் சொல்லும் மாத்திரத்தில் அவர்கள் அன்பும் காணாமல் போய்விடும். சிலர் விடாமல் அவர்கள் அன்பை நாம் புரிந்துகொள்ளவில்லை என நச்சரித்துக்கொண்டே இருப்பார்கள், தன் காமத்தின் அலைச்சலில். இது மற்றவரை அவர் இச்சைக்குள் விழ வைக்கும் முயற்சி அல்லாது வேறொன்றுமில்லை.

காம அலைச்சலானது அவர்களை, வன்புணர்வு, பாலி யல் தொந்தரவு என எல்லா விதமான வக்கிர வேலை களுக்கும் தூண்டும். அலைச்சல் அவர்களை சுயமரி யாதை, கவுரவம் எல்லாவற்றையும் இழக்கச் செய்யும். காதல் என்ற பெயரில் காமத்திற்குப் பிச்சை எடுத்துக் கொண்டிருப்பார்கள்.

வக்கிர மனப்பான்மை கொண்டவர்களால் தான் நம் சமூகத்தில் பல கோர நிகழ்வுகள் நடக்கின்றன. குழந் தைகளிலிருந்து கிழவி வரையிலான பெண்களுக்குப் பாலியல் தொந்தரவு கொடுப்பது, வன்புணர்வு செய்வது. இது, சிறு வயது குழந்தைகளுக்கு, பாலியல் பேதமில் லாமல் ஆண் பிள்ளைகளுக்கும் நடக்கிறது. (இதைப் பெண்களும் சிறுவயது / விடலைப்பருவ ஆண் குழந் தைகளிடம் நடத்துகிறார்கள்). சில இடங்களில் பெற் றவர்கள் கூடத் தம் குழந்தைகளிடமே இவ்வாறான வக்கிர செயல்களை புரிவதுண்டு. தன் பிள்ளைகளின் கையறு நிலையை உபயோகித்து மிரட்டி உருட்டியோ, மனரீதியான இன்னல்களை உருவாக்கியோ தனக்குச் சாதகமாக அவர்களைப் பயன்படுத்துவதுண்டு.

வேர்கள் செல்லரித்துக் கிடக்க, நாம் இலைகளுக்கு மட்டும் மருந்தடித்து என்ன பயன்?

ஏன் இந்த அலைச்சல்? இப்படி வெறுக்கத்தக்க செயல் களைச் செய்ய எது அவர்களைத் தூண்டுகிறது?

இவ்வுலகில் மனித இனம் மட்டுமல்லாது, எல்லா உயிரி னங்களும் ஆண் பெண் என்று நிரவித்தான் இருக்கின் றன. ஆணும் பெண்ணும் சேர்ந்தாலே இங்கு வாழ்வு நிறைவு பெறுகிறது. இது தான் இயற்கை நியதி. வீட் டிற்குள்ளும் சரி, வேலை செய்யும் இடங்களிலும் சரி, ஆண்களும் பெண்களும் நிறைந்தே இருக்கிறோம். இங்கே மட்டுமல்லாது மனிதனின் அன்றாட வாழ்வில்

பலவற்றையும் ஆணும் பெண்ணும் சேர்ந்தே செய்வது தான் இயற்கை. ஆனால், நம் சமுதாயம், ஒழுக்கம், பாதுகாப்பு என்ற பெயரில் ஏனோ ஆணையும் பெண் ணையும் பிரித்து வைக்கும் முயற்சியையே மேற்கொண் டிருக்கிறது. ஏன் ஆணுக்கும் பெண்ணுக்கும் தனித்த னிப் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகளை நிறுவவேண்டும்? ஏன் எங்குப் போனாலும் ஆணுக்கும் பெண்ணுக்கும் தனித்தனி வரிசைகள்? ஏன் இருவருக்கும் இடையில் ஒரு தடுப்புச் சுவரை எழுப்பிக்கொண்டே இருக்கிறது? இந்தத் தடுப்புச் சுவர்களானது இருவருக்கும் இடையே ஒருவரைப் பற்றி இன்னொருவருக்கான ஆர்வத்தை கிளறிக்கொண்டே இருக்கிறது.

இந்த ஆர்வமானது எதிர்பாலினத்தாரைப் பற்றி மேலும் தெரிந்து கொள்ளும் ஆவலில், நிறைய திருட்டுத்தன மான வேலைகளைச் செய்யத் தூண்டுகிறது. இயற்கை யாக இருபாலரும் ஒருவருடன் ஒருவர் பழகிக் கலந்து வாழும் சூழ்நிலை இருந்தால், இம்மாதிரியான மனக்கு ழப்பங்கள் வளராதிருக்கும். ஓர் இயல்பான நட்பு இரு பாலாருக்குமிடையே மலரும். அந்த நட்பு ஒருவரை ஒருவர் மதிக்கச் செய்யும். ரகசியங்களாக எல்லாவற்றை யும் வைத்திருக்க வைத்திருக்க, இருவருக்கும் இடை யிலான தூரத்தை அதிகரிக்க அதிகரிக்க, மறைத் தும், மறுக்கப்பட்டும் வைக்கப்படும் விஷயத்தின் மேல் மேலும் ஆர்வம் தூண்டப்படுவதுடன், அதை அடைவ தற்கான ஒருவிதமான பரிதவிப்பும் ஏற்படுகிறது.

அப்படியே சாதாரணமாக அவர்களை வாழவிட்டாலே அவர்களாகவே புரிந்து தெளிந்து கொள்வார்கள். நாம் கூடாது என்று மறுத்து ஒதுங்கி வாழ நிர்ப்பந்திப்ப தால் மட்டும் உண்மையான கீழ்ப்படிதல் நடந்துவிடுமா என்ன? இதற்குப் பதிலாக, அவர்களுக்குப் புரியவைக்க லாம். தொண்ணூற்றி ஒன்பது சதவிகிதம் பெற்றோர்கள்

அந்த வயதிற்கான இயற்கையான உடல் மாற்றங்களை, காம உந்துதல்களைப் பற்றிப் பிள்ளைகளிடம் பேசுவதே இல்லை. இன்றைய குழந்தைகள் தான் நாளைய இளைஞர்கள் என்பதை நாம் மறந்துவிடுகிறோம்.

காம உந்துதலின் அடிப்படையைக் கற்காத பிள்ளைகள், ஒரு நல்ல உறவுக்கான பலமான அடித்தளம் என்னவென்று உணராத பிள்ளைகள், தவறுவதும் இயற்கை தானே? ஒன்றுமே தெரியாத ஒன்றைத் தானே தெரிந்து கொள்ள முற்படும்போது, அதுவும் மற்றவருக்குத் தெரியாமல் அறிய முற்படும்போது, அவர்கள் குழம்பித் தவித்துத் தவறான வழிகளில் போவதும், கிடைக்காத பட்சத்தில் முறைகேடான செயல்களில் ஈடுபடுவதும் நடக்கிறது.

என்னதான் திருமணம் என்பது இந்தச் சமூக ஆதரவுடன் எளிமையாக காம உந்துதல்களுக்கு வடிகால் கொடுப்பதாக நினைத்தாலும், காமம் என்ற ஒன்றை அதன் அழகை, அந்தப் பகிர்வை சரியாக இங்கு யாருமே புரிந்து கொள்வதில்லை. காம உந்துதலுக்கு ஒரு முழுமையான தீர்வே பெரும்பாலும் அமைவதில்லை. நம் உறவுகளில் ஒரு முழுமைத் தன்மை அடைய இயலாத ஒரு சூழலே இங்கு நிலவுகிறது. இந்தப் புத்தகத்தின் ஆரம்பத்தில் கூறியது போல், நாம் காமம் பற்றி நிறைய தவறாகவே சிந்திக்கிறோம் என்பதே உண்மை.

அத்தியாயம் - 13

# சுய இன்பம்

"சுய இன்பத்தைப் புறந்தள்ளாதே! எனக்குப் பிடித்த ஒருவருடன் நான் உறவு கொள்கிறேன்."

— Woody Allen.

ஒவ்வொருவரும் - ஆணாகிலும், பெண்ணாகிலும் - தங்களுக்கென்று நேரம் ஒதுக்க வேண்டும். அந்த நேரத்திலேயே, தன்னைப்பற்றி அறியவும், தனக்குள்ளான கற்பனை ஊற்று பெருக்கெடுக்கவும் அத்தகைய நேரம் உதவுகிறது. இது 100 சதவீதம் உண்மை. எவர் ஒருவர் அவருக்காகவே இருப்பதில் ஆர்வமுடையவராக இருக்கிறாரோ, எவர் ஒருவர், தனக்குள் பயணிக்க நேரம் ஒதுக்குகின்றாரோ, அவரே, மற்றவர்கள்பால் அன்பு பாராட்டவும், அவர்களைச் சுதந்திர மனிதர்களாக எதிர்கொள்ளும் மரியாதை தெரிந்தவராகவும் இருப்பார்.

பல பெரிய சிந்தனையாளர்கள், 'தனிமை' என்பது 'வெற்றிடம்' அன்று என்றே கூறியுள்ளனர். 'தனிமை' என்பது யாருமற்ற இடத்தில் இருப்பது அன்று; அது தன்னுடன் - தனக்குள்ளே - தனிமையில் இருத்தல் ஆகும். தனிமையில் இருத்தல் என்பது எதிர்மறையான எண்ணமன்று; மாறாக, தனிமையில் இருக்கும் திறமைக்கு ஈடானது எதுவுமே இல்லை.

அதையே நான் சுய இன்பத்துக்கும் கூறுவேன் - சற்றே வேறுபட்ட கோணத்தில். அவ்வப்போதாவது, ஒவ்வொருவரும், சுய இன்பத்தால், காமத்தின் உச்சத்தை அடையக் கற்றல் அவசியம். இதனால் தவறேதும் இல்லை. உண்மையில், இது சரியான செயலே ஆகும். சில சமயங்களில், நாம் நம்முடனே ஒன்றியிருத்தல் என்

பது அவசியம் ஆனதும் கூட. சில சமயங்களில், சுய இன்பத்தால் காமத்தின் உச்சியைச் சுகித்தல் என்ப தும் இனிமையானதே. இது பல்வேறு பிரச்சனைகளைத் தீர்ப்பதோடு மட்டும் அல்லாமல், உறவுகளுக்கிடையே நல்ல பல மாற்றங்களையும் ஏற்படுத்தும்.

ஒரு பதின்பருவ, ஆணோ அல்லது பெண்ணோ, சுய இன்பம் கொள்வதன் மூலம் காமத்தின் உச்சியை அடையும் வழியைக் கற்றுக்கொண்டால், அவரை ஒத்த வயதினரோடு பாலுறவு கொண்டே ஆகவேண்டும் என்ற எண்ணத்தையும் தள்ளிப்போடலாம். அவர்கள் செய லால் வரும் விளைவுகளைச் சந்தித்து அவற்றை எதிர் கொள்ளும் பக்குவம் வரவேண்டிய வயது வரை இப் பழக்கம் அவர்களைக் காக்கும். அடக்கி வைக்கப்பட் டுள்ள அவர்களது காம உணர்வு வெளியேற இச்செயல் ஒரு வழியாகும் என்பதால், அதற்காக மற்றவரை நாடும் தேவையும் இருக்காது. சுயஇன்பத்தை முறையாகக் கற்ற இளைஞர்கள், தேவையான காலங்களில் சுயசார் புடையவராக இருக்கும் மனப்பக்குவத்தையும் பெறுவர். மேலும், காமத்துக்காக எதிர்பாலினரின் பின்னால் ஓடும் நிலைமையிலிருந்து மாறலாம். இதன்மூலம் அவர்கள் பயன்பெறலாம்.

"நான் சுய இன்பத்தை ஊக்குவிப்பவன்;
மற்றவருடன் உறவுகொள்ள தொடங்கிவிடாதீர்
கள். அதற்கு முன்னர் சுயஇன்பம் அடைதலைக்
கற்றுக் கொள்ளுங்கள்! ஆண்கள் முயல்கிறார்கள்;
பெண்கள் முயல்வதில்லை. ஆனால் அவர்களும்
முயலுதல் வேண்டும்."

— Taylor Momsen

Myth: Masturbation is injurious to health (http://www.rediff.com/getahead/2008/aug/04sex.htm)

பாலுறவு வல்லுநர்கள் மற்றும், உறவுமுறை ஆலோசகர் கள், சுயஇன்பம் கொள்ளுதல் சுகாதாரக் கேடுகளை ஏற்படுத்தும் என்ற ஒரு பொதுவான கருத்தைக் கட்டுக் கதை என்கின்றனர். மும்பை நகரைச் சேர்ந்த பாலுறவு வல்லுனர், டாக்டர், பிரகாஷ் நானாலால் கோத்தாரி கூறு கிறார்: "அதிகப்படியாகச் சுய இன்பம் கொள்ளும் பழக் கத்தால், ஆண்மையின்மை, காசநோய், தன்பாலியல் உடலுறவைத்தூண்டும் பழக்கம் ஆகியவை ஏற்படும் என்று சில நோயாளிகள் நம்புகிறார்கள்." இக்கூற்றைக் கண்டிப்பாக மறுக்கும் டாக்டர் கோத்தாரி, "சுயஇன்பம் கொள்ளுதல் என்பது உடலுறவு கொள்வதைப் போன்ற செயலே ஆகும்" என்கிறார். "உடலுறவின் போது, பெண் ணின் பிறப்புறுப்புக்குள், ஆண்குறி அடையும் அதே நிலையைத்தான், சுயஇன்பம் கொள்ளும்போது, மடங் கிய கைக்குள் உள்ளபோதும் அது அடைகிறது." என்கி றார்.

"எப்படி ஒரு மொழியில் தேர்ச்சியிருந்தால், நல்ல நண் பர்களை எளிதாக நாம் அடைகிறோமோ, அதைப் போன்றே, சுய இன்பத்தில் பழக்கமுடைய ஒருவர், எளி தாக மற்றவருடனான உடலுறவிலும் இன்பம் பெற இய லும்." என்கிறார்.

இவற்றுக்கும் மேலாக, டாக்டர் கோத்தாரி: "அதிகப்ப டியான சுய இன்பம் கொள்ளுதலால், ஆண் உறுப்பு சேதமடையும் என்பதெல்லாம் அடிப்படையற்ற நம்பிக் கைகள். ஒருவன் அதிகமாகப் பேசுகிறான் என்பதால், அவனுடைய நாக்கு சேதமடைந்து விடுவதில்லை; மாறாக, மௌனமாய் இருந்தால் அதிகப்படியான வலு வையும் அடைவதில்லை." என்கிறார்.

துரதிர்ஷ்டவசமாக, தத்தம் துணைவரின் மூலம் தேவைப்பட்ட காம இன்பத்தைப் பெறாதவர், விரக்தியு டன், சுய இன்பத்தை மேற்கொள்ளுதல் என்பது பொது

வான பழக்கமாக உள்ளது. ஒரு விரக்தி நிலையில் மேற் கொள்ளப்படுவதால், இது ஒரு தனிமை உணர்ச்சியை யும், சில நேரங்களில் அவமான உணர்வையும் ஏற்படுத் திவிடுகிறது. எவையெல்லாம் இயற்கையால் படைக்கப் பட்டனவோ அவையெல்லாம் அவமானத்தை ஏற்படுத் தும் நிலைக்கு நம்மைத் தள்ளாது. இதில் உங்களுக்கு மேலும் ஐயம் இருந்தால், பாலுறவு வல்லுநரைச் சந் தித்து ஆலோசனை பெறலாம்.

"நாம் சுயஇன்பம் கொள்வதைக் கடவுள் திட்டமிடாது இருந்திருந்தால், அவர் நம் கரங்க ளின் நீளத்தைக் குறைவாக அமைத்திருப்பார்."

— George Carli

"அது எளிமையானது; மனமகிழ்வைத் தரக்கூடியது; எவரையும் புண்படுத்தாதது"

— Louis CK

ஒருவருக்குத் தனிமை எப்படிச் சுயபரிசோதனைக் கான காலத்தை வழங்குகிறதோ அப்படியே, சுயஇன்பம் கொள்ளுதல், ஒருவருக்கு அவருடைய உடலை ஆரா யும் வழியைக் கொடுக்கிறது. நம் உடலின் எந்தப்பாகம் நம்மைத் தூண்டும் என்றும், எந்தப்பாகத்தை தொடும் போதோ, தடவும்போதோ, அல்லது பிசையும்போதோ, நம்முள் கிளர்ச்சியை உண்டுபண்ணும் என்றும் நமக்குத் தெரியவைக்கிறது. இந்தப் புரிதலின் உதவியால், பாலு றவின் போது, துணைவரை, நம்முடைய அந்தப் பாகங்க ளின்பால் ஆர்வம் காட்டச்செய்தல் இயலும். அதன்மூல மாக மேம்பட்ட இன்பத்தைப் பெறவும் இயலும்.

தங்களுக்குள்ளாகவே எதுவும் சாத்தியப்படும் என்று நம்பத்தொடங்கும் போதும், தங்களுக்குள்ளாகவே முயல்வதில் தவறில்லை என்று உணரும் போதும், சமு தாயத்தில், அருவருப்பான செயல்கள் குறையத்தொ

டங்கும். சுயஇன்பம் கொள்வதை அவமானமாகக் கரு தாத நிலையிலும், காமவேட்கையைச் சுயமாகத் தீர்த் துக்கொள்ளுதல் ஓர் இயற்கையான செயல் என்று கருதும்போதும், சமுதாயத்தில் வன்புணர்வு, பாலியல்மீ றல் போன்ற செயல்களின் எண்ணிக்கையும் குறையும். சுயஇன்பம் கொள்ளுதல் சமுதாயத்தின் இத்தகைய செயல்களை முற்றிலுமாக நீக்கும் என்று நான் சொல் லவரவில்லை; மாறாக, சுயஇன்பம் குறித்த மனநிலை உணர்வுகளின் மாற்றம், கண்டிப்பாகக் காமம் குறித்த விரக்தி எண்ணத்தையும், அதன் விளைவாக ஏற்படும் அருவருக்கத்தக்கச் செயல்களையும் மாற்றும் என்றே நான் நம்புகிறேன்.

நம் உடலை நாம் நன்றாக அறிந்தவராகவும், நேசிப்ப வராகவும் இருந்தால், எதிர்பாலினரோடு உறவுகொள் ளும் போது முழுமையை அனுபவிப்போம். அது விரக்தி நிலையில் அல்லாது, அன்பின் வழியில் அமையும். பின் னர், ஆண், பெண் இடையேயான உறவு, ஒன்றுகலக்க விழையும் இயற்கையான உணர்வாகவும், ஆதரவாக வும், அன்பைப் பகிர்ந்துகொள்ளும் வகையிலும் அமை யுமேயன்றி, எதையோ வெளியேற்ற உதவும் உடல் சம் பந்தமான ஒரு சாதாரணச் செயலாக அமையாது.

தனிமையை நாம் அனுபவிக்க, நம்மைப் பழக்கிக் கொள்ளும் போது, வாழ்க்கையில் நம்மைச் செறி வாக்கும் மக்களையும், நம்முடன் பழகத் தகுந்தவர்க ளையும் கண்டுகொள்ள இயலும். ஏதோ பழகவேண் டும் என்பதற்காக மட்டுமே பழகும் நிலையையும் நாம் விடுப்போம். நாம் தனிமையில் உள்ளோம் என்ற ஒரே காரணத்திற்காக மட்டும் எவரையோ நாம் உறவாகத் தேர்ந்தெடுக்கும் நிலை மாறும். தேவையற்ற மனிதர்க ளிடம் பழகி, நேரத்தை வீணாக்குவதை விட, நம்முடைய நிலையில் நாம் இருப்பதே சிறந்தது என்று உணரும் பக்

குவம் பெறுகிறோம். நம்முள் நாமே தனிமையில் இருப் பதை விரும்பும் நிலையில், யாருடன் வேண்டுமானாலும் உறவுகொள்ளலாம் என்ற விரக்திநிலை அகலும். நம் முடன் மகிழ்ச்சியான கணங்களைப் பகிர்ந்துகொள்ள, தக்க நபர்களை நாம் தேர்ந்தெடுக்கும் பக்குவத்தையும் அடைகிறோம்.

நான் சமைப்பேன்; சமைத்ததை உண்பேன். ஆனால், வேறொருவருக்காகச் சமைக்கும்போது, அவர் என் சமையலை ருசித்து உண்பதைக் கண்டு நான் இன் புறுவேன். அன்பினால் மட்டுமே இது சாத்தியப்படும். அது என்னையே நான் விரும்பும்போது மட்டுமே சாத் தியம். நாம் சுய இன்பம் கொள்ளும்போது, நம்மை நாம் விரும்பக் கற்றுக்கொள்கிறோம். அத்தகைய நிலையில் எவருடனாவது உடலுறவு கொண்டே ஆகவேண்டும் என்ற கட்டாயத்தில் நாம் இருக்க மாட்டோம். நம் அன் பைப் பகிர்ந்துகொள்ள ஒருவர் நம்முடன் உள்ளபோது, அவர்தம் உடல் தரும் சுகத்தைப் பகிர்ந்துகொள்ள வும், பாராட்டவும் கூடிய மன நிலையைப் பெறுவோம். அடுத்து அவரோடு நாம் சேரும் வரையில், அவரிடமி ருந்து கொண்ட அன்பின் நினைப்பில், அதுகுறித்து மன மகிழ்ச்சியுடனும் நிறைவுடனும் இருப்போம்.

பாலியல் (சுயஇன்பம் உட்பட) குறித்த முறையான கல்வி, காதல் மற்றும் காமம் குறித்த ஆரோக்கிய மான கண்ணோட்டத்தை வளர்க்க உதவும். மேம்பட்ட சுயநம்பிக்கை உடையவர், மேம்பட்ட முறையில், மிக வும் கவனமாகத் தத்தம் துணைவரைத் தேர்ந்தெடுப்பர். தனிமையை அனுபவிக்கும் பக்குவம் பெற்றமையால், துணைவர் இல்லாத நேரத்திலும், உறவு வேண்டியே ஆகவேண்டும் என்ற விரக்தி நிலையில், வேறு வழிக ளைத் தேர்ந்தெடுக்க மாட்டார். அத்தகைய விரக்தியற்ற நிலையில், நம்முடைய இதயமும், மூளையும் மேம்பட்டு

செயல்படுவதால், ஒருமித்த எண்ணத்தோடு இருவரும் அமைவர்.

"உடலுறவின் அத்தனை முறைகளிலும்,

பெண்கள் பெரும்பான்மையான நேரங்களில்

உச்சத்தை அடைவது சுயஇன்பத்தின் மூலமே"

— "Sexual Behavior in the Human Female" என்ற

நூலில்,

Alfred Charles Kinsey

அத்தியாயம் - 14

# ஈர உரையாடல்கள் (Wet chats)

முகம் தெரியாத எவருடனோ, தொலைபேசியிலோ அல்லது இணையம் மூலமாகவோ உரையாடும் போது, சிலர் அலைச்சலின் உச்சிக்கே போய்விடுகின்றனர். இது காமம் என்பது அன்பின் வெளிப்பாடாகப் பார்க்கப் படுவதில்லை என்பதற்குச் சான்றில்லாமல் வேறென்ன? காமம் என்பது வாழ்வின் அடிப்படையான தேவை என் றும், அது அன்பின் வெளிப்பாடு என்றும், ஒருவர் அறிந்து கொள்ள வாய்ப்புகள் கிடைத்திருந்தால், இத்த கைய விபரீத நிலை அடைய வேண்டிய தேவை இருந்தி ருக்குமா?

அன்பு என்னும் ஊற்றின் தன்னிச்சையான வெளிப்பா டாக அமைந்திருக்க வேண்டியது காமம். ஒருவரோடு ஒன்றியிருக்கவும், அவரோடு அனைத்தையும் பகிர்ந் துகொள்ளக் கூடியதாகவும் இருந்திருக்கவேண்டியது காதல். இவற்றைவிடுத்து, கிளர்ச்சியூட்டப்படவேண்டும் என்றும், உடலியல் ரீதியாக உச்சத்தை அடைதல் வேண்டும் என்ற நோக்கில் மட்டும், நாம் நமது கவனத் தைச் செலுத்துகிறோம். ஒருவர் மற்றவரைத் தெரிந்து கொள்வதிலும், விரும்புவதிலும், காதல் கொள்வதிலும் கவனம் செலுத்தாது, காமத்தின்பால் மட்டுமே கவரப் பட்டுக்கிடக்கின்றோம். அன்பு மற்றும் காதல் ஏற்படுத் தும் அந்தத் தொடுதல் என்னும் மாயத்தை அனுப விக்கத் தவறுகிறோம். காதல் நம்முள் ததும்பும் அந்தத் தருணத்திற்காகக் காத்திருக்க மறுக்கிறோம். காமத்தில்

விழுந்து எழ மட்டுமே நாம் எண்ணுகிறோம். பார்க்கும் யாவற்றிலும், காமத்தையே காணவும், படிக்கவும் செய்கி றோம்.

வாட்ஸ் ஆப் செயலியின் மூலம் எனக்குக் கிடைத்த செய்தி இது. காமத்தின்பால் நமக்குண்டான அதீத ஆசையால், இந்த அளவிற்கு நாம் விழ இயலுமா? (இச் செய்தியின் நம்பிக்கைத்தன்மைக்கு என்னிடம் ஆதா ரம் இல்லை)

மருத்துவத்திற்கான நோபல் பரிசு வென்ற, டி டிரெள சியோ வெரே சொல்வதாக வந்த செய்தி அது. "அதி கமான பணத்தை, ஆண்தன்மையை அதிகம் அடை வதற்கும், பெண் மார்பகங்களைப் பெரிதாகும் சிலிகா னுக்காகவும் செலவழிக்கிறோம். இன்னும் சில வருடங் களில், வயதான பெண்கள், பெரிய மார்பகங்களுடனும், வயதான ஆண்கள், விறைத்த குறிகளுடனும் இருந்தா லும், அவை எதற்காக என்பதை மறந்தவர்களாகவே இருப்பர்."

அத்தியாயம் - 15

# திருமணம் எனப்படும் அமைப்பு

திருமணம் என்பது இருவர் இணைந்து, ஒருவர்மேல் ஒருவர் காதல் கொண்டு, அன்புடன், பிணைப்புடன், பிள்ளைகள் பெற்று, ஒருவருக்கொருவர் ஆதரவாக இருப்பதற்காக ஏற்படுத்தப்பட்டதாகவும், அது வாழ் விற்கு ஒரு முக்கியத் தேவை எனவும் சிறு வயதில் நினைத்திருந்தேன்.

பெரியவளாகி, திருமணமும் செய்து, திருமணம் செய்த மற்ற இணையர்களையும் பார்த்து, திருமணம் என் னும் பந்தத்தில் உள்ள போலித்தனங்களைக் கவ னிக்க ஆரம்பித்தேன். திருமணமான அநேக ஆண் பெண்களுக்கு இடையே உணர்வு பூர்வமான எந்த ஒரு பிணைப்பையும் என்னால் காண முடியவில்லை. திரு மணம் என்பது இருவரை, உடல்ரீதியாகவும், சமுதா யரீதியாகவும் மட்டுமே இணைக்கிறது. இதயங்களுக்கு இடையேயான இணைப்பைப் பார்க்க இயலவில்லை. அது அவர்களிடையே அன்பிருந்தால் மட்டுமே சாத்தி யப்படும்.

வீட்டில் பெரியோர்களால் பார்த்து நிச்சயிக்கப்பட்ட திரு மணங்கள் உள்ளன. நம்மால் ‘காதல் திருமணம்’ என்று அழைக்கப்படும் சில திருமணங்களும் உள்ளன. ஆயி னும் பெருவாரியாக இவ்விரண்டும் போலியாகவே முடி கின்றன. இத்தகைய நிலை எதனால் ஏற்படுகிறது?

காதல் என்பது கண்மூடித்தனமானது என்றும் குருட் டுத்தன்மை வாய்ந்தது என்றும் நாம் கூறுகிறோம்.

இல்லை. காதல் என்பது கண்மூடித்தனமானதாக இருக்க இயலாது. அது நம் வாழ்வின் மையக்கரு. "இந்தியாவில் நடைபெறும் திருமணங்களில் 95 சதவீ தம் பெற்றோர்களால நிச்சயிக்கப் படுபவையே என்றும், அவற்றுள் வெறும் 5 சதவீதம் மட்டுமே மணமுறிவைச் சந்திக்கின்றன" என்றும் ஒரு செய்தியை, அண்மையில், ஓர் ஆய்வுக்கட்டுரையில் படித்தேன். இந்தக் கணக் கெடுப்பில் பெருமிதம் கொள்ள என்ன இருக்கிறது? வெறும் சட்ட ரீதியான விவாகரத்துகளின் எண்ணிக்கை தான் திருமண பந்தத்தின் வெற்றியை நிர்ணயிக்கிறதா? சட்ட ரீதியாக இல்லாமல், பலர் தனித்து வாழ்கிறார்கள். தனித்து வாழ்வதற்கான தகுந்த காரணங்களும் அவர் களிடம் இருக்கும். அவர்கள் அமைதியாகப் பிரிந்து வாழும் வரையில், சட்டரீதியான விவாகரத்து தேவை இல்லை என்று அவர்கள் நினைக்கலாம். விவாகரத்துக் காக, நீதிமன்றங்களில் அலைந்து கொண்டிருப்பதில் ஆர்வமற்றவர்களாகவும் சிலர் இருக்கலாம். அதனால் தனித்து வாழ்தலை, விவாகரத்தைவிட எளிதான வழி யாக அவர்கள் மேற்கொண்டிருக்கலாம்.

ஒரே வீட்டில் இருந்துகொண்டே, எந்தவிதமான பிணைப்போ, பந்தமோ இல்லாது வாழ்ந்து கொண்டி ருக்கும் தம்பதியினரும் உள்ளனர். அவர்களது குழந் தைகள், பொருளாதார நிலை, வேறு சில வசதிகள் அல் லது சமுதாய எதிர்பார்ப்புகள் போன்ற காரணங்களால் அவர்கள் அவ்வாறு ஒன்றாகவே வாழலாம். வெளியுல கிற்கு அவர்கள் சட்டரீதியான தம்பதியர். எத்தனை பேர் உண்மையிலேயே தாங்கள் அன்பார்ந்த தம்பதியினர் தாம் என்று இதயபூர்வமாகச் சொல்லத்துணிவார்கள்? இத்தகைய திருமண பந்தங்களில் பெருமைப்பட என்ன இருக்கிறது?

பெற்றோர்களால் நிச்சயிக்கப்பட்ட திருமணங்களின் கதி இதுவென்றால், ‘காதல்’ திருமணங்கள் என்று கரு தப்படும் பந்தங்களும் அத்தகைய பேரழிவுகளையே சந் திக்கின்றன. பெற்றோர்களால் நிச்சயிக்கப்பட்ட திரும ணங்களில், குறைந்த பட்சம், இருவரும் எப்படிப்பட்டவர் என்பதை முன்னரே அறியாத பட்சத்தில், பல்வேறு சம ரசமுயற்சிகளால், தங்களுக்கு இடையே அணுக்கத்தை ஏற்படுத்திக்கொள்ள விழைகின்றனர். ஆனால், காதல் திருமணங்களில் தாங்கள் ஒருவரை ஒருவர் முன்னரே நன்கு தெரிந்து வைத்துள்ளோம் என்ற மாயையில் உள்ளனர். அவர்கள் தம்பதியராக வாழ முற்படும்போது தான், இணையரின் மறுபக்கத்தை அவர்கள் காண ஆரம்பிக்கின்றனர்.

திருமணம் செய்துகொண்ட ஒருவரை நாம், நம்முடைய உடைமையாகக் கருதி, உரிமைகொண்டாடத் தொடங் குகிறோம். அத்தகைய நிலையில், நாம் எதிர்பார்த்த வண்ணம் அவர் செயல்பட வேண்டும் என்று விரும்பவும் செய்கிறோம். எத்தனை பேருடைய இத்தகைய விருப் பங்கள் நிறைவேறுகின்றன? அப்படி நிறைவேறவில்லை என்றால், ஏமாற்றம் ஏற்படுகிறது. எதிர்பார்ப்புகள் நிறை வேறாத நிலையில், சிறிய பிணக்குகளும், கருத்துவே றுபாடுகளும் தோன்ற ஆரம்பிக்கின்றன. இருப்பினும் பல்வேறு காரணங்ககளுக்காக, இந்தப் பந்தத்திலிருந்து விடுபட நினைப்பதில்லை. சுயகௌரவம் ஒரு காரண மாக இருக்கலாம். தாங்கள் பந்தத்தில் தோல்வி அடைந்துவிட்டோம் என்பதைப் பிறருக்குத் தெரிவிக்க விரும்பாமல் இருக்கலாம். சிலர், அவர் தாங்களாகவே விரும்பி, இந்தப் பந்தத்தில் ஈடுபட்டதால், அதைக் கடைசி வரை காப்பாற்ற வேண்டும் என்றும் விழைய லாம். சிலர் தங்கள் பெற்றோர், “நான் தான் முன்னரே சொன்னேனே” என்று அவர்களையே குறைகூறுவார்

களோ என்ற அச்சத்தால் சொல்லாது இருக்கலாம். காதல் திருமணத்தால், ஒன்றுபட்டோர் பலருக்கு அவர் களின் பெற்றோர் வழியில், பொதுவாக, ஆதரவு கிடைப் பதில்லை. அவர்களுக்கு ஆலோசனை சொல்லவும் எவரும் இல்லாத நிலையில் உள்ளனர்.

திருமணம் முடிந்து பல வருடங்கள் கழிந்த பின்ன ரும், தொடக்க நாட்களில் இருந்தது போன்றே, அவர் களிடையேயான நெருக்கத்தை இன்னும் விரும்புபவர் களாகவும், இருவரும் விரும்பத்தக்க நிலையில் காதல், காமம், பாதுகாப்பு ஆகிய உணர்வுகள் நீடித்திருந்தால், அத்தகைய திருமணங்களே, “வெற்றித் திருமணங்கள்” ஆகும். “உங்கள் திருமண வாழ்க்கை எப்படி உள்ளது?” என்று எவரேனும் கேட்டால், அத்தகைய தம்பதியினர், தங்கள் இதயத்தின் அடித்தளத்திலிருந்து, தங்கள் திரு மணம் சிறப்பாக உள்ளது என்பர்.

“ஏதோ ஓடிட்டு இருக்கு, கல்யாணம், குடும்பம் என் றாலே பிரச்சினை தானே” என்று சிலர் கூறலாம். அவர் கள் ஏன் அவ்வாறு கூறுகிறார்கள்? திருமணம் என்பது தேவையான ஒரு தீங்கு (Necessary evil) என்ற கருத் தைத் தீர்வாகச் சொல்லவா? சமுதாயத்தின் எதிர்பார்ப் புகளுக்காக, நாம் நம்முடைய வாழ்க்கையை இழக்க வேண்டுமா? நாம் திருமணத்தைத் தீங்கு என்கிறோம். பின் ஏன் அத்தீங்கை ஆரத் தழுவிக்கொள்கிறோம்?

நம்முடைய சுதந்திரம், அமைதி, இன்பம் ஆகியவற்றைக் குலைக்கும் என்றால், அத்தகைய திருமண பந்தத்தில் நாம் இணைவதற்கான தேவை என்ன? திருமணம் என் பது காமத்திற்கும், பிள்ளைகளைப் பெற்றெடுப்பதற்கும் மட்டும்தானா? பாதுகாப்பான பாலுறவு, பொறுப்பை ஏற் கும் நிலை, பிள்ளைப்பேறு ஆகிய காரணங்களுக்காக, சமுதாயம், திருமணம் என்னும் ஒரு முறையை ஏற்ப

டுத்தியுள்ளது என்பது நமக்குத் தெரியும். ஆனால், அது அப்படித்தான் உள்ளதா?

ஒரு நல்ல கோணத்தில், திருமணம் என்பது, வாழ்நாள் முழுவதற்குமான ஒரு வாழ்க்கைத்துணையை அமைத்துக் கொடுக்கிறது எனலாம். திருமணம் ஆனபிறகு, நமக்குத் தேவை என்று ஏற்பட்டால் நமக்காக ஒருவர் உள்ளார். திருமணம் என்பது நம் வசதிக்கேயானது. தம்பதிகளாகிய நாம், வெவ்வேறு பொறுப்புகளை ஏற்றுக் கொண்டு, இன்பத்தையும், அமைதியையும் பெற ஒருவர் மற்றொருவரின் தேவைகளை நிரப்பிக்கொண்டு வாழ்கிறோம். திருமணம் என்பது பிள்ளைப்பேற்றை ஒருசேர அனுபவிக்கும் அந்த அனுபவத்தை நமக்கு வழங்குகிறது. ஆனால், அப்படிப்பட்ட தோழமை, திருமண பந்தத்தில் அமையவில்லை என்றான பிறகும், அந்த உறவில் தொடர்ந்து இருப்பதற்கான காரணம் என்ன?

பெற்றோர்களால் நிச்சயிக்கப்படும் திருமணங்கள் (இந்தியாவில் பெரும்பான்மையாக நடக்கும், சாதகமாகக் கருதப்படும் திருமணமுறை) குறித்து முதலில் நாம் பார்ப்போம்.

நம் சமுதாயத்தில், தனி மனிதராக (ஓர் ஆணோ அல்லது பெண்ணோ) ஒரு குறிப்பிட்ட வயதுவரை இருக்க இயலும். அந்த வயது அடைந்தவுடன், பாலுறவிற்காக, அவர் திருமண பந்தத்தில் இணைய வேண்டிய நிர்ப்பந்தம் உள்ளது. எனவே ஒருவரை ஒருவர் அறியாத இருவர், இப்பந்தத்தின் மூலமாக, இறுதிவரை, ஒருவரோடு ஒருவர் இருப்பதாக உறுதிமொழி அளிக்க வேண்டிய கட்டாயம் உருவாகிறது.

திருமணம் என்பது பாலுறவு கொள்வதற்கான சாத்தியங்களை எளிதாக்குகிறது. எனவே பெற்றோர்களால் நிச்சயிக்கப்பட திருமணங்களுக்கான அடிப்படையாய்,

பாலுறவு அமைகிறது. இல்லம் என்கிற அமைப்பு, சமைப்பதற்காக ஒருவர், தேவைகளைப் பூர்த்தி செய்வ தற்காக ஒருவர் என ஒரு சில வசதிகளையும் திருமணம் அமைத்துத் தருகிறது. எனவே, திருமணம் என்ற பெய ரில் மக்கள் ஒரு வணிக பேரத்திற்கு ஆளாகிறார்கள். ஒரு பண்டமாற்று முறையாக, "நான் இவற்றை உனக் குத் தருகிறேன், நீ இவற்றை எனக்குத் தா" என்று ஒரு வருக்கொருவர் கூறும் நிலைபோல் ஏற்படுகிறது. சில நேரங்களில் இத்தகைய விதிமுறைகள் முன்னதாகவே விவாதிக்கப்படுகின்றன; சில நேரங்களில் அவ்வாறு விவாதிக்கப்படாமல், கூறாத விதிகளாகவே எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

கீழ்க்கண்ட பல்வேறு நிலைகளைக் காண்போம்.

1. முதல் சந்திப்பிலேயே காதல் மலர்ந்து நாள டைவில் அது திடப்படுகிறது. அவர்கள் இறுதிவரை இன்பமாக வாழ்கின்றனர். (இந்த நிலைக்கான சாத் தியக்கூறுகள் மிகக்குறைவே)

2. காதல் வர சில கால அவகாசம் எடுக்கிறது; பிறகு வலுவடைகிறது. (இந்த நிலைக்கான சாத்தியக் கூறுகளும் மிகக்குறைவே என்றாலும், மேலே கூறப் பட்ட நிலையைவிட சற்று அதிகமே)

3. பார்த்த உடனோ அல்லது சிறிது காலத்திற் குப் பிறகோ காதல் மலர்ந்தாலும், ஒரு காலத்திற் குப்பின் குறைந்து அழிந்துவிடுகிறது. குழந்தைகள், குடும்பம், சமுதாயக் கட்டமைப்பு ஆகிய காரணங்க ளால் இத்தம்பதியர் சேர்ந்தே வாழ்வர். (இது சாத் தியம்தான். இவ்வகைக்கு, மேற்கூறிய இரு வகைக ளைக் காட்டிலும் அதிக அளவில் சாத்தியக்கூறுகள் உள்ளன)

4. காதல் மலர்வதே இல்லை. (இதற்கான சாத்தியக் கூறுகள் மிக அதிகம்)

நடுத்தர வயதான பல ஆண், பெண்களிடம், நான் மேற்கொண்ட உரையாடல்களின் மூலம், அவர்க ளுள் பெரும்பான்மையானவர், திருப்திகரமான திரும ணவாழ்க்கையை அனுபவிக்கவில்லை என்பதை நான் ஆணித்தரமாகக் கூறுவேன். ஆண்களில் பெரும்பான் மையானோர், அவர்களுடைய மனைவியர், உடலுறவில் நாட்டமில்லாதவர்கள் என்றும், சில வருடங்களாகவே உடலுறவில் சரியாக ஈடுபடாதவராகவும் உள்ளனர் என்று நொந்துகொள்கின்றனர். சில மாதங்கள் அல்லது வருடத் தொல்லைக்குப் பிறகு, ஆண்களுக்கு வாய்ப்பே தும் இல்லாமல் போகிறது. எனவே, அவர்கள் மனைவி யர்களுக்கு வயதாகிவிட்டது என்றும், நடுத்தர வயதைக் கடந்த பெண்கள் உடலுறவு குறித்த ஆசையை இழந் துவிடுகிறார்கள் என்றும் கருதுகின்றனர். பெண்களும் இத்தகைய நிலையைத் தங்களுக்கு வசதியாகவே கரு தத்தொடங்குகின்றனர். இருந்தாலும், பெரும்பாலான பெண்கள் (அவர்களுள் சிலர் இதை அறியாமல் கூட இருக்கலாம்), தங்கள் கணவரால் மேற்கொள்ளப்படும் உடலுறவு முறைகளால் சலிப்புற்ற நிலையில்தான் உள் ளனர் என்பதே உண்மை. பெண்களை எப்படி மகிழ் விக்க இயலும் என்பதையே ஆண்கள் அறியாதிருக் கின்றனர்.

இத்தகைய நிலை, தத்துவ அறிஞரான ஜிட்டு கிருஷ் ணமூர்த்தியின் (JK) கூற்று ஒன்றை நினைவுக்குக் கொண்டுவருகிறது: “கணவன் தன் மனைவியிடம் நேர டியாக தொடர்பு கொள்வதில்லை; மனைவியும் தன் கணவனுடன் நேரடியாக தொடர்பு கொள்வதில்லை. மாறாக, அவர்களாகவே கற்பனை செய்து வைத்துள்ள, தத்தம் கணவன் அல்லது மனைவி ஆகியவர்களின்

பிம்பங்களுடனேயே தொடர்பு வைத்துக் கொள்கிறார் கள்." தம்பதியர்கள் மட்டும் அல்லாது, இது எல்லாவ கையான உறவுகளுக்கும் பொருந்தும். அவர் சொல்வது பாலியல் உறவு முறைகளுடன் பொருத்திப் பார்க்கை யில் 100% சதவீதம் உண்மையாகவே எனக்குத் தோன் றுகிறது.

உறவின்போது, தான் முனையும் முயற்சியில் ஏதாகிலும் தவறு உள்ளதா என்றும், தன் மனைவி ஏன் அதன்பால் நாட்டம் இல்லாது இருக்கிறாள் என்றும், ஆண், ஒரு கணம் நிதானித்து யோசிப்பதில்லை. அதற்காக, ஆண் களை மட்டும் நாம் குற்றம் கூறவும் இயலாது. ஏனெ னில், தன் மனைவி உடலுறவில் மகிழ்ச்சியாகத்தான் இருக்கிறாள் என்று ஆண் நினைக்கிறான். ஆனால், உண்மையிலேயே, அவள் அவன்பாலுள்ள காதலால், அவன் செயல்களைப் பொறுத்துக்கொண்டு, அவ னைத் திருப்தி படுத்துவதே தனது கடமையாக எண் ணிக்கொண்டு இருக்கிறாள். மேலும் தான் மகிழ்வடை யவில்லை என்று சொல்லி அவனைப் புண்படுத்தவும் அவள் விரும்புவதில்லை. என்னதான் முயன்றாலும் எத் தனை நாட்கள் நடித்துக்கொண்டே இருக்க இயலும்? சிறிது காலத்திற்குப் பிறகு சலிப்பின் காரணமாக அவள் ஒத்துழைக்க மறுக்கிறாள். இதை அறிந்திராத கணவன், அவளுக்கு வயதாகி விட்டது என்றும், உடலுறவில் அவ ளுக்கு விருப்பம் தீர்ந்துவிட்டது என்றும் நினைக்கிறான்.

உண்மையில் ஆண் செய்யவேண்டியது என்னவென் றால், அவன் எண்ணங்களையும், முறைகளையும் மாற்ற நினைத்தலே ஆகும். தன் மனைவியைத் திருப்திபடுத் துவதற்காக அவன் முயலுதல் அவசியம்.

மனைவி, அது குறித்து அவனுடன் முன்னரே பேசியி ருந்தால், கணவனும் முன்னரே புரிந்து செயல்பட ஏது வாக இருந்திருக்கும். 'பதி விரதம்' என்ற போர்வை

யில் மனைவி, கணவனுடன் எந்திர கதியில் உடலுறவு கொள்வதால், காமம் குறித்த மற்ற முறைகளை அறி யாதவளாயும், அதை எப்போதுமே அனுபவிக்காமலும் அவள் முடங்கி விடுகிறாள். கணவன் சொல்படி, அவன் வழிமுறையில், அவனைத் திருப்தி படுத்தும் வகையில் நடப்பது மட்டுமே தன் கடமை என்ற நம்பிக்கையில் அவள் வாழ்க்கை முடிந்துவிடுகிறது.

திருமணம் புரிந்தும், திருப்திகரமாகப் பாலுறவு அமை யாத பட்சத்தில், பல ஆண்கள், பாலுறவிற்காக வெளி யில் அலையும் நிலையில் உள்ளனர். இத்தகைய நிலையே, பேருந்துகளில்
மிக நெருக்கமாக நின்றுகொண்டு, பெண்களை உர சுவதும், சிறிய குழந்தைகளைப் பாலியல் மீறல்க ளுக்கு ஆளாக்குவதுமாகிய மோசமான செயல்களுக்கு அடிகோலுகின்றன. வீட்டில் தங்களுக்குக் கிடைக்காத இன்பத்தால் விரக்தியுற்ற இவர்கள், அவர்கள் வயதில், வெளிமண உறவுகளை ஏற்படுத்திக்கொள்ளவும் அச் சப்படுகின்றனர். எனவே சிறிது காலத்தில், வக்கிரம் அடைந்து, மேற்கூறிய செயல்களில் ஈடுபடத் தொடங் குகின்றனர். காம உணர்வு என்பது அவர்கள் மனதில் எப்போதுமே மேலோங்கி இருப்பதால், அவர்களுடைய அந்த வேட்கையைத் தணிக்கும் சிறிய வாய்ப்பிருந்தா லும், அவர்களால் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடிவதில்லை.

# அத்தியாயம் - 16

# திருமணமும் குடும்பமும்

எல்லா உறவுகளும் ஏதோ ஒரு பயன் கருதியே என் பதை நாம் உணர்ந்துகொள்வோம். திருமணமும் அவ் வாறானதே. நாம் எல்லோரும் நமது பெற்றோர்களால் வளர்க்கப்பட்டு வந்தவர்கள். நாம் வளரும்போது அவர் கள் நம்முடைய ஆதாரமாகவும் ஆதரவாகவும் உள்ள னர். நாம் வளர்ந்து அவர்கள் முதியவர்களாக ஆகும் போது, நாம் அவர்களுக்கு ஆதாரமாகவும், ஆதரவாக வும் மாறுகிறோம். அப்படி நாம் அவர்களுக்கு ஆதர வாக இருக்கும்போது, நம்முடைய வயோதிக நாட்களை நினைத்துப் பார்த்து, அந்த நாட்களில், நம் பிள்ளை கள் நம்மை ஆதரிப்பார்கள் என்று நம்புகிறோம். அத னால், பிள்ளைகளைப் பெற நாம் நினைக்கிறோம். இதுவே திருமணத்தின் மிகப்பெரிய இலக்காகும். நம் பெற்றோர்கள் முதியவர்களாய் மாறி, அவர்களுடைய இறுதியை நெருங்கும்போது, நம்முடைய முதியவயதைக் குறித்தும் நாம் நினைக்க ஆரம்பிக்கிறோம். நமக்குத் திருமணமாகாமல் இருந்து, நமக்கென்று ஒரு குடும் பம் இல்லாமல் இருந்தால், நமது வாழ்க்கை, கேள் விக்குறியாக இருக்கும் என்று எண்ணுகிறோம். நாம் இந்த உலகில் தனிமனிதராய் ஆகிவிடுவோம் என்று அச்சப்படுகிறோம். நமக்குத் திருமணம் ஆகி, குடும்பம் என்று ஆகிவிட்டால், நாம் பிறவிப்பயன் அடைந்ததாய் எண்ணிக்கொள்கிறோம். மனைவி என்ற பெயரிலும், பிள்ளைகள் என்ற பெயரிலும், நம்முடன் புதிய பொறுப் புகளைச் சேர்த்துக் கொள்வதால், நமக்கு ஒரு மன நிறைவு ஏற்படுகிறது. நம் பெற்றோரின் மரணம் நம்மை பெருந்துயரத்தில் ஆழ்த்தினாலும், நமக்காக வேறு கட

மைகள் உள்ளன என்று உணர்ந்து, வாழ்வில் பயணம் செய்கிறோம்.

நான் இந்த முறையிலிருந்து சற்றே வேறுபட்டுச் சிந் திக்க விழைகிறேன். வாழ்க்கையில் திருமணம் செய் துகொண்டு, பிள்ளைகளைப் பெறுதலே, ஒருவரின் கடமை ஆகாது. இவை எல்லாம் இல்லாமலும், ஒவ் வொருவரின் பிறப்பிலும் ஒரு தனித்துவமான நோக்கம் இருக்கிறது என்றே நான் கருதுகிறேன். இப்படி நான் சொல்வதால், திருமணமும் குடும்பமும், தத்தம் வசதிக் காகவும், சுகத்துக்காகவும் நிறுவப்பட்ட அமைப்பு என் பதை மறுக்கிறேன் என்றாகாது.

ஒரு குடும்பத்தை உருவாக்க, ஓர் ஆணுக்குப் பெண் ணும், ஒரு பெண்ணுக்கும் ஆணும் தேவையாக உள்ள னர். திருமணம் நடந்தேறியபிறகு, வீட்டை அடைந்தால், வீட்டில் நமக்காக ஒருவர், நம்முடைய தேவைகளைப் பூர்த்தி செய்ய ஒருவர், நமக்கு என்ன தேவை என் பதை அறிந்த ஒருவர், அவற்றைச் செய்துகொடுக்கும் விருப்பமுடைய ஒருவர் உள்ளார். நம்முடைய இன்ப துன்பங்களைப் பகிர்ந்து கொள்ள ஒருவர் உள்ளார். மிக முக்கியமாக, நம்முடைய காமவேட்கையைத் தணித் துக்கொண்டு, இன்பமுற, நமக்கென்று தயாராக ஒருவர் உள்ளார். நல்லது. பல காலமாக, வெளியோரின் பார் வைக்கு, திருமணம் என்ற உயர்ந்த பந்தம் நன்றாகவே இயங்கி வருகிறது. ஆனாலும், அது எல்லோருக்கும் சிறந்த முறையில் அமைகிறதா? சில நேரங்களில் அது அமைகிறது; பெரும்பான்மையான நேரங்களில் அது அமைவதில்லை.

ஆனால், வாழ்வில் மற்ற இலக்கணங்கள் போல், திரு மணம் என்பதையும் நாம் ஏற்றுக்கொள்ள நமக்குக் கற் றுத்தரப்பட்டுள்ளது. வாழ்க்கை அப்படித்தான் இருக்கும் என்றும், நாம் நம்மைச் சரிக்கட்டிக்கொண்டு வாழ்தல்

வேண்டும் என்றும் போதிக்கப்பட்டுள்ளோம். சமுதா யத்திற்காக, வேடம் தரித்தாவது நாங்களும் நாங்கள் உருவாக்கிய குழந்தைகளும் ஒற்றுமையாக வாழ்ந்து கொண்டிருக்கிறோம் எனப் பறைச் சாற்றிக்கொண்டி ருக்கிறோம். இதற்காகவே, பல தம்பதியினர், தங்கள் திருமணத்தின் வெள்ளிவிழாவையும், பொன்விழாவை யும் கொண்டாடுகின்றனர்.

இப்போது இந்தச் சூழ்நிலையை எண்ணிப்பாருங்கள்.

ஒருவன் தன்னுடைய பணியை முடித்து விட்டு, உடல் தளர்ந்துபோய் வீட்டிற்கு வருகிறான். மனைவியும் வீட் டில் அன்று மிக அதிகமான பணிகளைச்செய்து முடித் துள்ளாள். மாலையில், மனைவி, சமையல் செய்து, தன் கணவனுக்குப் பரிமாறுகிறாள். அந்தச் சமையலுக்குப் பின்னால் உள்ள பணிச்சுமைகளை கணவன் சிந்திப் பதில்லை. மனைவியும், கணவனின் அலுவலக பணிச் சுமை குறித்துச் சிந்திப்பதில்லை. மனைவி என்பவளின் கடமை, அவனுக்குச் சமையல் செய்து பரிமாறுவதே என்று அவன் நினைப்பதால், கணவன் உண்ணும் உண வைக் குறித்துப் பாராட்டிப் பேசுவதில்லை. மனைவியும் அலுவலகம் சென்று பணிசெய்து வருவது கணவனின் கடமை என்று நினைப்பதால் அவளும் அப்பணி குறித்து அக்கறையுடன் விசாரிப்பதில்லை.

அவர்கள் இருவரும் உணவு உண்ட பின்னர், பிள்ளை கள் தத்தம் வகுப்பில் எப்படிப் படிக்கிறார்கள் என்றும், வருங்காலத்தில் அவர்கள் எப்படி ஆவார்கள் என்றும் பேசிக்கொள்கின்றனர். ஏன் குழந்தைகள் எப்படியாவது 'ஆக' வேண்டும் என்று நான் திகைக்கிறேன். ஏற் கனவே குழந்தை, மனிதப் பிறப்பைக் கொண்டுள்ளது என்றால், மேலும் எப்படி 'ஆக' முடியும்? ஓ! குழந்தை கள், பரம்பரையின் புகழைக் காப்பாற்ற வேண்டும் இல் லையா? நான் அதை மறந்துவிட்டேன்! மன்னிக்கவும்!

பின் என்ன நடக்கிறது? நாளை என்ன உணவு என்றும், நாளை அலுவலகத்தில் என்ன பணி இருக்கிறது என்றும் நினைத்தவாறே படுக்கைக்குச் செல்லும் நேரம் அது. தூங்குவதற்கு முன்னர் சற்றே இளைப்பாற நினைத்தால், அவர்கள் பாலுறவில் ஈடுபடலாம். அல்லது ஞாயிறு அன்று விடுமுறை என்பதால், உணவு குறித்தும், அலுவலகப்பணி குறித்தும் எந்தக் கவலையும் இருக்காது என்பதால், அந்தப் பணியைச் சனிக்கிழமைக்குத் தள்ளி வைக்கலாம். வாரத்தின் இடையே, மனைவிக்கு உடல்ரீதியான இச்சை உண்டாகலாம் இருந்தாலும், கணவன் தளர்ந்து வருவானென்றும், அடுத்த நாள் அலுவலகம் செல்ல வேண்டும் என்றும் அவள் அறிவாள். எனவே அவன் சிந்தனையைக் கலைக்கக்கூடாது என முடிவுசெய்வாள். அவனுக்கும் அது வேண்டியதாகத்தான் இருக்கும். இருந்தாலும் நேரமில்லை. இருந்தாலும் அவன் தன் வேட்கையைத் தணித்துக்கொள்ள வேண்டும்.

இந்தியத் திரைப்படங்களில் வருவது போன்று, காதல் ததும்பும் கண்களுடன், நெற்றியில் முத்தமிட்டவாறு தொடங்கும் காட்சிகள் போல இருக்காது நான் விவரித்த படுக்கையறைக் காட்சி. தயவுசெய்து நம்புங்கள். உண்மையில் அது மிகவும் குறுகிய நேரத்தில் உடைகளைக் களைந்து விட்டு (சில நேரங்களில் அது கூட செய்யாது) உடனடியாகச் செயல்படுவதே நடக்கிறது. “இவன் ஏன் இவ்வளவு நேரம் எடுக்கிறான்? சீக்கிரம் முடித்து தொலைத்தால் நிம்மதியாக தூங்கவாவது செய்யலாம்” என்று மனைவியும், கணவனோ, ஏதோ செய்யவேண்டும் என்பதற்காகச் செய்வதுபோல், நாலைந்து முறை மனைவியின் மீது இயங்கிவிட்டு, கொட்டிவிட்டு நிறுத்திக்கொள்வான். அதோடு முடிந்தது விளையாட்டு. கணவன் தளர்ந்துபோய், மறுபக்கம் திரும்பிப் படுத்த

வாறு தூங்கிப் போயிருப்பான். கிளறிவிடப்பட்ட காம உணர்வுகள் முழுமை அடையாமல் அவள் உறக்க மின்றி தவிப்பாள். அடுத்த நாள் காலையில், தன் மனைவி, அன்புடன் தனக்கு சிற்றுண்டி அளிப்பாள் என்ற எதிர்பார்ப்புடன் கணவன் விழிப்பான்! மனித மன தின் எதிர்பார்ப்புகள் வேடிக்கையானவை !

வாழ்க்கை இப்படி எந்திரத்தனமாகவும், அசுவாரஸ்ய மாகவும் ஆகிவிட்ட பிறகு திருமணம் என்ற கோட் பாட்டின் வலுவான காரணிகள் ஆட்டம் காண்கின்றன. இருப்பினும் நாம் அனைவரும் திருமணம் புரிவதையும், பிள்ளைகள் பெறுவதையும் விரும்புகிறோம். இதற்கு நிறைய காரணங்கள் உண்டு. முதற்காரணம், இதைத் தான் நம் பெற்றோர்களும், நம் சமூகமும் நம்மிடம் எதிர்பார்க்கிறது. இன்னொன்று, திருமணமும் குழந் தைகளுமே நம் வாழ்வை முழுமையாக ஆக்கும் என நாமெல்லாம் மூளைச்சலவை செய்யப்பட்டிருக்கிறோம். கணவன்/மனைவியாவதும், தாய் / தந்தையர் ஆவதும் நம் வாழ்வின் முழுமுதற் குறிக்கோள். கிடைத்திருக்கும் நம் ஒரு வாழ்வை நாம் அழகாக வாழ்வதை விட, மற்றவர் எதிர்பார்ப்பிற்கு தகுந்தாற்போல் நம் வாழ்வை அமைத் துக் கொள்வது நமக்கெல்லாம் மிகவும் முக்கியமாகிப் போகிறது. இன்னொரு காரணம் என்னவென்றால், சமூக அழுத்தம். நம் வயதை ஒத்தவர்கள் ஒவ்வொரு வராக திருமணம் புரிகையில், நாம் தனியாக நின்றுவிட் டால், நாம் ஒதுக்கப் பட்டுவிடுவோமோ என்ற அச்சம். நம்மைச் சுற்றியுள்ள கூட்டம் முட்டாள்களாலும், ஏமாற் றுக்காரர்களாலும் ஆனதாக இருந்தால் கூட, நாமும் அவர்களில் ஒருவராக இருப்பது நமக்கெல்லாம் மிகவும் அவசியமாகப்படுகிறது.

நாம் இன்பமான வாழ்க்கையை வாழ விரும்பினால், திருமணம் மற்றும் குடும்பம் மீதான நம் பார்வையில்

பெருத்த மாற்றங்கள் வருதல் வேண்டும் என்பதை நான் வலுவாக நம்புகிறேன். அவ்வாறு நடந்தால், திருமணத்தில் இன்பம் சூழ்ந்து அதனால், இன்பமும், அன்பும் குடும்பத்தில் தவழும்.

எத்தகைய மாற்றங்களை நாம் கொண்டுவருதல் வேண்டும்?

ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்து போட்டு, அதில் கண்டிருக்கும் விதிகள் படி நடப்பதற்கு, திருமணம் என்பது ஒரு வியாபாரம் இல்லை. வியாபாரம் என்பது சேவைகளையும் பொருட்களையும் மையமாக வைத்துச் செயல்படுபவை. திருமணம் என்பது மனித மனங்களையும் உணர்வுகளையும் மையமாக கொண்டவை. இதை நாம் தெளிவாக புரிந்து கொள்ளுதல் அவசியம். காதல் / அன்பு இவை இயற்கையான உணர்வுகள்; இவற்றை ஓர் ஒப்பந்தத்திற்குள் திணிக்க இயலாது.

திருமணம் என்ற பந்தத்தில் நாம் ஒருவர் மற்றவருடைய தேவைகளைக் கடைசிவரை பூர்த்தி செய்வோம் என்று உறுதி அளிக்கலாம்; ஆனாலும் இவையும் ஒரு மனிதரின் உடல் ஆரோக்கியம், பொருளீட்டும் திறன் இவை எல்லாவற்றிற்கும் உட்பட்டதே. அதிர்ஷ்ட வசமாக, உடல் ஆரோக்கியத்துடனும், நன்றாக பொருளீட்டும் சக்தியுடனும் இருந்தால், அவர் தன் வாக்கை நிறைவேற்ற இயலும். ஆனால் எப்படி ஒருவரைக் கடைசி வரை காதலிப்போம் என வாக்குறுதி அளிக்க இயலும்? இயற்கையாக ஏற்படுவது, கரைந்து காணாமல் போவதும் இயற்கை தானே?

ஒரு வணிகத்தில், தொடர்ச்சியாக நஷ்டம் ஏற்பட்டுக் கொண்டிருந்தால், அதைத்தொடர்வது என்பது சாத்தியமில்லை. வரும் லாபமும், நஷ்டமும் தாம், அவ்வணிகத்தில் நாம் தொடர்ந்து இருக்கவேண்டுமா என்ப

தைத் தீர்மானிக்கிறது. பணம் ஈட்டுவதே வணிகத்தின் இலட்சியம். ஆனால், திருமண பந்தத்தின் இலட்சியம், ஒரு குடும்பத்தை உருவாக்கி, கடைசி வரை இணைந்து வாழ்வதே. அதனால், திருமண பந்தத்தை விட்டுப்பிரி தல் என்பது அவ்வளவு எளிதான காரியம் அன்று. இந் தச் சூழல்களில், திருமண பந்தத்தில், அப்பந்தத்தைத் தொடர்வதற்காக, சில சலுகைகளை நாம் அமைக்க லாம்.

திருமண பந்தத்தில், நம் இணையர் நம்முடைய எண் ணங்களுக்கும் செயல்களுக்கும் ஏற்ப, அவர் தம்மைத் தகவமைத்துக் கொண்டு வருதல் வேண்டும் என்று நினைக்கிறோம். இங்கு நாம் உணரவேண்டியது: திரும ணம் என்பது ஒருவருக்கு ஒருவர் ஆதரவாக இருத்தல் வேண்டும் என்ற எண்ணத்துடன் கூடும் இரு தனிமனி தர்களின் சேர்க்கை ஆகும். திருமணம் என்பது ஒரு வர் இன்னொருவர் மீது ஆதிக்கம் செலுத்தி உரிமை கொண்டாடுவதற்கான களமில்லை.

என் இணையர் மகிழ்வாக இருக்க வேண்டுமெனில், நான் மகிழ்வாக இருத்தல் அவசியம். நான் மகிழ்வாக இருக்க வேண்டுமெனில், என் இணையர் மகிழ்வாக இருத்தல் அவசியமாகிறது. ஆனால் ஒரே கூரையின் கீழ் ஒருவர் இன்பமாக இல்லாத போது இன்னொருவர் மட் டும் எப்படி இன்பமாக வாழ இயலும்? எத்தனை காலம் அப்படி இருப்பது போல் இருவரும் வேடம் தரித்து வாழ இயலும்?

நம்பிக்கை / நம்பிக்கையின்மையைத் தாண்டிய உறவாக இருக்க வேண்டும் கணவன் / மனைவி உறவென் பது. இருவரும் சேர்ந்தே பயணிக்க வேண்டி இருந்தா லும், அதிலும் சிறிது இடைவெளி விட்டு, அவரவருக் கான கடமைகளைச் செவ்வனே செய்து, ஒருவரை ஒருவர் நட்பாகப் பாவித்து, ஆளுமைகளும் அடிமைப்

படுத்தும் எண்ணமும் இல்லாமல், ஒருவருக்கான தனி வெளியில் இன்னொருவர் நுழையாமல், ஒருவர் விருப்பு வெறுப்பு அறிந்து, ஒருவர் முன்னேற்றத்திற்கு இன்னொ ருவர் துணையிருந்து, இயன்ற வரை ஒருவர் வேலைப் பளுவுடன் திண்டாடும் நேரங்களில் தோள் கொடுத்து என எளிமையாக, அழகாக வாழ வேண்டியவை திரும ணம்/குடும்பம் எனும் பந்தங்கள்.

மனிதர்கள் பொருட்களல்ல. நான் அவர்களை வாங்கிக் காட்சிப் பொருளாக்கிப் பூட்டி வைத்து அழகு பார்க்க, இல்லை உபயோகிக்க. யாருக்கும் யார்மேலும் எப்பொ ழுது வேண்டுமானாலும் ஓர் ஈர்ப்பு வரலாம். அது வெறும் ஈர்ப்பாகச் சில காலம் இருந்து மறையலாம். இல்லை காதலாக, அன்பாக மலரலாம். வெகு காலமும் நிலைக் கலாம். திருமணம் என்பதும், ஒருவரிடம் மட்டுமே காதல் வரும் என்பதும் இயற்கைக்குப் புறம்பானது. இந்த உண் மையைச் சிந்தித்து புரிந்து கொள்ளுதல் அவசியம்.

நமக்கு இரண்டாவது குழந்தை பிறந்ததும் முதல் குழந் தையின் மீதான அன்பு குறைந்து விடுகிறதா என்ன? அன்பு என்பது ஒரு குறிப்பிட்ட அளவில் நம் இதயத் தில் தேக்கி வைத்திருக்கும் பொருள் அன்று. அதைப் பங்கிட்டு, ஒருவருக்குக் கொஞ்சம், இன்னொருவருக்கு அதிகம் எனக் கொடுப்பதற்கு. அன்பு என்பது கொடுப்ப தினால் குறைந்து விடுவதில்லை. அன்பை கொடுக்கக் கொடுக்க நம் இதயத்தில் அன்பெனும் ஊற்று பெரு கிக் கொண்டே தான் இருக்கும். அது அழியும் பொருள் அன்று. அன்பின் வலு எப்படி என்றால், நாம் எவ்வ ளவுக்கு அதிகமாக அன்பு செலுத்துகிறோமோ அந்த அளவுக்குப் பெருகிக்கொண்டே இருக்கும். எவ்வள வுக்கு நாம் குறைவாகச் செலுத்துகிறோமோ அவ்வளவு குறைந்து கொண்டே இருந்து ஒரு நாள் காணாமலும்

போய்விடும். அன்பிற்கு எல்லை என்பது இல்லை. நாம் ஏதையும் யாரையும் அன்பால் நிரப்பலாம்.

உங்களின் இந்த புரிதலே, அவருக்கு உங்கள் மீதான ஈர்ப்பை, காதலை, அன்பை அதிகமாக்கலாம். உங்கள் பிணைப்பு இன்னும் உறுதிகூட ஆகலாம். ஒருவர் மகிழ்ச்சியைக் கொன்று அவருடன் நாம் மகிழ்வாக இருத்தல் சாத்தியமாகுமா? சாதிப்பது என்ன? அவர் மகிழ்வையும் கெடுத்து, நம் மகிழ்வையும் கெடுத்து, நம்மைச் சார்ந்துள்ள குழந்தைகளின் மகிழ்வையும் கெடுத்துக்கொள்வதை தவிர?

திருமணங்களில், மேலோட்டமான விஷயங்களான சடங்குகள், தாலி போன்றவையே மனித உணர்வுகளை விட அதிகமாக மதிக்கப்படுகின்றன.

தங்கள் கணவரின் சடலத்தின் மீது விழுந்து புரண்டு அழும் பெண்கள் சிலரை நான் பார்த்திருக்கிறேன். தங்கள் கணவர் இறந்துவிட்டார் என்பதை விடத் தான் பூவும் பொட்டும் இழந்து ஓர் அமங்கலி என்ற பட்டத்துடன் வாழ வேண்டி இருக்குமே என்ற கவலை மேலோங்கி நிற்பதைக் கண்டிருக்கிறேன். அவ்வாறிருக்கையில், அவள் அழுகை கணவன்பால் கொண்டுள்ள அன்பின் வெளிப்பாடாய் அமைந்ததல்ல. அவளுடைய சுய இரக்கத்தின் வெளிப்பாடே அது. இது சமுதாயத்தால் உண்டானது. நாம் சமுதாயத்திற்காகவே வாழ்கிறோம். நம்முடைய வாழ்க்கையை நாம் தேர்ந்தெடுத்து வாழ்வதை விட்டுவிட்டு, இத்தகைய தேவையற்ற சடங்குகளுக்கு நாம் முக்கியத்துவம் அளிக்கிறோம். ஒன்றை நினைவில் கொள்ளல் வேண்டும். நம் வாழ்வில் இன்பத்தை இழந்தால், நாம் உயிரற்ற ஜடமாகிவிடுவோம். அப்படியான ஒரு நிலையில், இந்தச் சமுதாயம் நம்மைப் பற்றிக் கவலைப் படப்போவதில்லை.

நம்மால் இன்னொரு மனித உயிருக்கு மரியாதை தர முடியாதபோது, தேவையற்ற சடங்குகளுக்கு மரியாதை எதற்கு? இது ஒட்டுமொத்த வாழ்க்கை முறையையே கேலிக்கூத்தாக்குகிறது!

உங்கள் திருமணம் வெற்றியென்று நீங்கள் நினைத்தால் அதுகுறித்துப் பேசுங்கள். உங்களைச் சுற்றியுள்ள மனிதர்கள், திருமணத்தை எப்படி வெற்றியடையச் செய்தல் இயலும் என்பதைக் கற்றுக்கொள்ளட்டும். உங்கள் திருமணம் தோற்றுப்போய்விட்டாலும், அதுகுறித்தும் பேசுங்கள். உங்களைச் சுற்றியுள்ள மனிதர்கள், திருமணம் ஏன் தோல்வி அடைகிறது என்பதைக் கற்றுக்கொள்ளட்டும்.

அத்தியாயம் - 17

# சொந்தம் கொண்டாடும் மனப்பான்மை (Possessiveness)

"காதல் என்பது சொந்தம் கொண்டாட மட்டுமே என்றால், அது காதல் ஆகாது"

— Thich Nhat Hanh in "Peace Is Every Step: The Path of Mindfulness in Everyday Life"

நாம் நம் இணையரை நம் உடமை போல் பாவித்து அவர் நமக்கே ஆனவர் என்றுப் பெருமையாக பறைச்சாற்றிக் கொள்கிறோம். ஒரு காதலன் தன் காதலியிடம் "நீ என் னுடையவள்" என்று கூறினால், அந்தக் காதலி மிகவும் பெருமையாக உணர்கிறாள். இதில் பெருமை கொள்ள என்ன இருக்கிறது? யார் யாருடையவராக முடியும்? நாம் பெற்ற பிள்ளைகளே நமக்குச் சொந்தமானவர்கள் இல்லை. அவர்கள் தனி மனிதர்கள். ஆனால் அன் பென்ற பெயரில் நாம் அவரை ஆதிக்கம் செலுத்தவே இந்த மாதிரியான சொற்கள் பயன்படுகின்றன. இப்படிப் பட்ட எண்ணங்களால் நாம் மற்றவரை வாழ்வு முழுவதும் நம்முடன் இருத்தி வைக்க முயலுகிறோம்.

கீழ்க்கண்ட இந்த மேற்கோளை சற்றே அலசு வோம்:

"அன்பு கொடுப்பதும்

எடுத்துக்கொள்வதும் தன்னிடமிருந்தே

அன்பு பற்றிக்கொள்வதில்லை;

அதை பற்றிக்கொள்ளவும் இயலாது

அன்பு மட்டுமே போதுமானது அன்பிற்கு!"

— Khalil Gibran in The Prophet

"என்னுடையது என  சொந்தம் கொண்டாடும்

இந்த காதல் மொழியானது யாருடைய

மேம்பாட்டிற்கும் உதவாது என்பதற்கான முதல்

எச்சரிக்கை."

— Holly Black in Black Heart

உயிரற்ற பொருள்களே சொந்தம் கொண்டாடப் படக்கூடியவை. நம் காதலின் பொருள் வேறொரு உயிரென்றால், அது வளரவும், பூக்கவும், அதற்குண்டான வெளியும், காற்றும் அவசியம்.

'சொந்தம் கொண்டாடும் மனப்பான்மை' எப்படி நாம் காதலிக்கும் பொருளையே அழித்துவிடுகிறது என்பதை நமக்குப் புரிய வைக்கும் வகையில் ஓஷோ ஒரு குட்டிக் கதையைக் கூறி இருக்கிறார். காதலையும், காதலிக்கும் பொருளையும் அது அழித்துவிடும் என்பதால், அவர் சொந்தம் கொண்டாடும் மனப்பான்மையை, காதல் என்று பொருள் கொள்ள மறுக்கிறார்.

ஒரு பெண் பாதிரி, அறிவொளியை, ஞானத்தைத் தேடி அலைந்துகொண்டிருக்கிறார். புத்தரின் ஒரு உருவத்தை மரத்தால் செய்து அதைத் தங்கத் தகட்டால் மூடி வைத்திருக்கிறார். மிக அழகாக இருந்த அந்த உருவத்தைத் தான் எங்குசென்றாலும் உடன் எடுத்துச் செல்வது வழக்கம்.

காலம் கடந்தாலும் அந்த புத்தரின் உருவம் அவரிடமே இருந்தது. ஒரு சிறிய ஊரில் உள்ள ஒரு கோவிலில் அவர் இறுதியாகத் தங்கிவிட்டார். அந்தக் கோவிலில், புத்தரின் சிலைகள் பல இருந்தன. அவை ஒவ்வொன் றிற்கும் ஒரு பீடமும் அமைக்கப் பட்டிருந்தன.

தன்னுடைய பொன்புத்தருக்குத் தினமும் அந்த பெண் பாதிரியார், ஊதுவத்தி கொளுத்தி வைப்பது வழக்கம். ஆனால், அந்த வத்தியின் மணம், அடுத்துள்ள சிலை களுக்குச் செல்வதை அவர் விரும்பவில்லை. அதனால் அவர் தன்னுடைய புத்தர் சிலைக்கு மட்டுமே வத்தியின் புகை செல்லும் வண்ணம் ஒரு கருவியையும் அமைத்தி ருந்தார். அந்தக் கருவி, ஊதுவத்தியின் புகை, பொன் புத்தரின் முகத்தில் வீசுவதுபோல் அமைக்கப்பட்டிருந் தது. அதனால், பொன் புத்தரின் முகம் நாட்பட நாட்படப் புகையால் கறுத்து விகாரமாகிவிட்டது.

சொந்தம் கொண்டாடும் மனப்பான்மையால் இத்தகைய நிலையே ஏற்படும். விகாரம் ஏற்பட்டு அந்த உறவையே அழித்துவிடும்.

நம்மீது நமக்கே அன்பில்லை என்றால், மற்றவர் மீதும் நாம் அன்பு காட்ட இயலாது. நாம் நம்மீது அன்பாய் இருக்கும்போது, நம் அமைதியைக் குலைக்க விரும் புவதில்லை. நம்முடைய அமைதி குலையாது இருக்க வேண்டுமானால், அவநம்பிக்கை, ஐயம் மற்றும் சொந் தம் கொண்டாடும் மனப்பான்மை இவற்றைக் கடந்து நாம் செல்லல் அவசியம்.

ஐயமுற்ற கண்களுக்கு, தண்ணீரும், கானல் நீராகவே தெரியும். பல நேரங்களில், நம் ஐயங்களின் வலிமையின் காரணமாகவே, அவை உண்மை என்பதுபோல் தோன் றும். அதனால், ஐயம் மற்றும் அவநம்பிக்கை ஆகியவற் றைத் தவிர்ப்போம். எவரையும் சொந்தம் கொண்டாட

விரும்பாது இருக்கும் நிலையை ஏற்போம். இணைய ருடன் ஒன்றாய்க் கலந்து இருப்போம். காதல் அழகா னது. ஏன் அந்த அழகைத் தொலைக்கும் காரியங்களை மேற்கொள்ள வேண்டும்?

பெரும்பான்மையான நேரங்களில், நாம் காதலிக்கி றோம் என்று நம்பும் ஒருவரின் இதயமோ அல்லது மனமோ நமக்குப் புலப்படுவதில்லை. மாறாக அவரின் உடலை மட்டும் சொந்தம் கொண்டாடும் மனநிலையில் தான் உள்ளோம். இந்த மனநிலையில் இருக்கையில் அவரை ஒரு முழு மனிதராக உணர்வதற்கான சாத்தி யங்கள் இல்லை. உடல் எவ்வளவு கட்டுண்டு உள் ளதோ, அவ்வளவு சுதந்திரத்தை இதயம் தேட ஆரம் பிப்பதால், மனது அந்தச் சுதந்திரத்தை அடையும் வழி களைக் கண்டுபிடிக்க ஆரம்பிக்கிறது. இந்த வகையில் நாம் ஒருவரை முழுமையாக இழந்துவிடுகிறோம்.

நாம் எவ்வளவுக்கு எவ்வளவு ஒருவரைச் சொந்தம் கொண்டாட முயல்கிறோமோ, அவ்வளவுக்கு அவ்வ ளவு நம்முடைய தீய எண்ணங்களே நம்மைச் சொந்தம் கொண்டாடத் தொடங்குகின்றன.

நாம் வாங்கும் பொருள்களைப் போன்று ஒருவரை நாம் சொந்தம் கொண்டாட நினைக்கும்போதே பல்வேறு பிரச்சனைகள் உருவாகின்றன. நாம் ஒவ்வொருவரும் தனிப்பட்டவர்கள் என்றும் ஒருவரும் நம்முடைய கண் ணாடி பிம்பம் ஆக மாட்டார் என்றும் கவனத்தில் வைக்க வேண்டும். மற்றவர் நம்முடைய எண்ணங்களையும், கருத்துகளையும் பிரதிபலிக்க வாய்ப்பில்லை. அந்த மரி யாதையை நாம் ஒருவருக்கு ஒருவர் செலுத்திக்கொள் ளுதல் அவசியம். திணிக்கும் செய்கைகளால் எதுவும் நடக்காது.

அன்பு என்பது அடுத்தவருக்கான சுதந்திரத்தைக் கொடுத்து அவரது வாழ்வை அவர் விருப்பப்படி வாழச் செய்வதே ஆகும். மற்றவரை உடும்பு போல் பற்றிக் கொள்ளலாகாது. இறப்பு என்னும் ஒன்று உள்ளது; அதி லிருந்து எவரும் தப்பிக்க முடியாது என்பதே உண்மை. நாம் ஒவ்வொருவரும் ஒரு நாள் மரணத்தை எதிர் கொள்ளப்போகிறோம். எனவே, இந்த ஒற்றை வாழ்க் கையில், நாம் நம்மீது அன்பு செலுத்தியும், மற்றவர்கள் மீது அன்பு செலுத்தியும் வாழ்வோம்.

நம்மீது நாம் அன்பைக் காட்டுகிறோமா? நமக்கு இன் பத்தைக் கொடுக்கும் செயல்களில் நாம் ஈடுபடுகி றோமா? உறவு முறிந்து விட்டால் கூட என்ன? அந்த உறவே மரணிக்கும் தருவாயில் இருப்பதாக தோன்றி னாலும் அன்பு செலுத்துவதை ஏன் நிறுத்த வேண்டும்? யாருக்கு தெரியும், ஒரு வேளை இந்த அன்பே ஒரு அரு மருந்தாக அந்த உறவை நிலைக்க வைக்கலாம். வாழ்வு முழுவதும் உயிர்ப்புடன் வைத்திருக்கும் ஒரு சோமபான மாக மாறலாம். ஆனால் இந்த சொந்தம் கொண்டாடும் மனப்பான்மை, ஆதிக்கம் செலுத்தும் மனப்பான்மை மேலும் ஒரு உறவை அழிவை நோக்கி நகர்த்தி ஒரு கேவல நிலைக்கு தள்ளிவிடும். திருமணம் நிலைத்தி ருக்கலாம், ஆனால் மனதால் ஆன உறவு மரணித்து விடும். உறவில் இருக்கும் மனிதர்களும் சிறிது சிறிதாக மனதால் மரித்து விடுவர்.

அத்தியாயம் - 18

# ஒருவரை ஒருவர் முழுமையாக்குதல் (Complementing each other)

ஆண் பெண்ணிற்கு இடையிலான வேற்றுமைகள் குறித்து நான் அடிக்கடி ஆச்சரியப்படுவதுண்டு. இயற்கை ஏற்படுத்திய வேற்றுமைகள் அதற்கான காரணங்கள், மனிதன் ஏற்படுத்திய வேற்றுமைகள், அவற்றின் மூலங்கள், மேலும் இந்த வேற்றுமைகளினால் மனிதர் வாழ்வில் ஏற்பட்ட தாக்கங்கள் குறித்து சிந்திப்பதுண்டு.

ஆண் பெண் கலந்து வாழும் வாழ்வு அற்புதமானது, நிறைவானது. ஆண், பெண் சேர்க்கையினால் தான் காலம் காலமாக பல உயிரினங்கள் மலர்ந்து கொண்டும் வாழ்ந்து கொண்டும் இருக்கின்றன. இந்தச் சேர்க்கையானது மகிழ்வையும், இயற்கை செல்வத்தையும் இந்த உலகிற்கு வழங்கிக் கொண்டே இருக்கிறது. அன்று பிறந்த ஒரு சிறு சிசுவை கையிலேந்துவது ஒரு அன்பான, அழகான தருணம், அது எந்த உயிரினமாக இருந்தாலும் - கள்ளமில்லா ஏதுமறியா ஒரு ஜீவன் இருபாலரின் கலப்பில் உண்டாகிறது.

இதில் இன்னும் அழகென்னவென்றால், ஓர் உயிரை உருவாக்கும் செயலான இரண்டு உடல்களின் பிணைதலும் அத்தனை மகிழ்வை நமக்கு உண்டாக்குவது தான். ஆணும் பெண்ணும் பிணைதலை எத்தனை

சுவாரசியமாக இயற்கை உருவாக்கி வைத்திருக்கிறது? இதற்கு இயற்கைக்கு நாம் நன்றி சொல்லக் கடமைப் பட்டிருக்கிறோம். இது இத்தனை சுவாரசியம் இல்லை யெனில் நாம் இன்று இங்கு இருக்க மாட்டோம்.

இவ்வளவு அழகான சேர்க்கை, ஓர் அழகான இன் னோர் உயிரை நமக்கு அளிக்கிறது. இந்தச் சேர்க் கையை நாம் கலவி என்கிறோம். இத்தனை அருமை யான ஒரு விஷயத்தை ஓர் இயற்கை உந்துதலை, உயிர் உருவாக்கும் இந்தச் செயலை ஏன் நாம் அசிங்கம் என் பதாக, பேசக்கூடாத பொருளாக உருவகித்து வைத்தி ருக்கிறோம்? ஆனால் திருமணம் என்று வந்தால் மட்டும் அதற்கு ஒரு புனிதத்தன்மையைப் புகுத்துகிறோம்?

ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழும் வகையிலேயே நம் படைப்பு நிகழ்கிறது. இந்தச் சார்பு நிலை ஒரு குழந்தை உருவாவதற்கு கூட இருவரின் கூட்டு முயற்சி தேவைப்படும்படியே இயற்கையின் படைப்பிருக்கிறது. பிறக்கும் குழந்தை எந்தப் பாலி னத்தை சேர்ந்ததாக இருப்பினும், அதை உருவாக்க என்னவோ இரு பாலாரின் விழைவும் தேவைப்படுகி றது. பெண்ணின் செயல்பாடு ஒரு விதமாகவும், ஆணின் செயல்பாடு வேறுவிதமாகவும் அமைக்கப்பட்டிருக்கி றது. ஒருவர் இல்லாமல் இன்னொருவர் இல்லை. வியக் கத்தக்கதன்றோ இயற்கையின் இச்செயல்?

இரு பாலாருக்கும் உடல் தோற்றத்திலும், செயலாற் றத்திலும் வேற்றுமைகளை வைத்து, இருவருக்குள்ளும் ஒரு ஈர்ப்பு சக்தியை வைத்து, இருவரும் இணைந்து இன்னோர் உயிர் உருவாக வைத்து, இருவரையும் சேர்ந்துப் பயணிக்க வைத்து, சந்ததிகள் உருவாக்கவும், ஒருவரை ஒருவர் கவனித்து, பறிமாற்றம் செய்து வாழும் வகையில் என்னவொரு படைப்பு!

பெண்ணில் கருமுட்டையை வைத்து ஆணில் விந்துவை வைத்து, முழுமையான ஓர் உயிர் உருவாக, ஆணிடம் இல்லாததை பெண்ணிடம் கொடுத்து, பெண்ணிடம் இல்லாததை ஆணிடம் வைத்து, இருவரின் கூட்டு வழி தான் வாழ்வின் நிறை என்பதாக வைத்திருக்கிறது இயற்கை.

குடும்பம் என்பது மானுடத்தின் முக்கியமானதும் அழகானதுமான ஒரு கண்டுபிடிப்பு. மகிழ்ச்சியான தம்பதியினரையும், மகிழ்ச்சியான குழந்தைகளையும் நான் பார்க்கும்போதெல்லாம், குடும்பம் என்கிற கருத்தாக்கத்தை உண்டாக்கியவர்களை எண்ணி வியந்திருக்கிறேன். வேண்டிய வசதிகளையும், இன்பத்தையும், வேண்டுபவர்களுக்கான ஆதரவவையும், பாதுகாப்பையும் வழங்கிக்கொண்டிருக்கும் வரை, குடும்பம், திருமணம் என்ற இந்த இருமுறைகளும் மானுடத்திற்குக் கிடைத்த மிகப் பெரிய வரங்கள் என்றே நினைக்கிறேன்.

இருந்தபோதும், குடும்பம் மற்றும் திருமணம் என்ற பெயர்களில், எத்தனை பேர், அவர்கள் விரும்பும் வண்ணம் அவர்களது வாழ்க்கையை வாழ்ந்து வருகின்றனர்? திருமணம் என்பது ஏன் ஒவ்வொருவரின் வாழ்விலும், கட்டாய மற்றும் அத்தியாவசியத் தேவையாகப் பார்க்கப்படுகிறது? இன்றைய நிலையில் திருமணம் என்பது, ஆதியில் எந்த நோக்கத்திற்காக அமைக்கப்பட்டதோ, அந்த நிலையிலிருந்து சுருங்கி, கேலிக்கூத்தாகி, கபடதாரிகளையும், போலியான வாழ்க்கை முறைகளையும் கொண்டதாக மாறிவிட்டது.

“திருமணம் என்பது தேவையான தீங்கு (Necessary Evil)” என்று சிலர் வேடிக்கையாகக் கூறும்போது, அது எனக்கு வேடிக்கையாகத் தெரியவில்லை. திருமணம் என்பது மிகவும் தீவிரமான விஷயம். ஒருவர், வாழ்க்கையில் தன் பெற்றோரிடம் இருப்பதைவிட அதிக

காலம் தன்னுடைய துணைவருடன் கழிக்கிறார். நம் சமுதாயத்தில் பொதுவாகத் திருமணம், 25-30 வயதுக் குள் நடைபெறுகிறது. அதன் பிறகு அவர், தன்னுடைய வாழ்க்கைத் துணைவருடன் தன் வாழ்நாள் இறுதிவரை வாழ்கிறார். எத்தனை பேர், தங்கள் திருமணத்தின் போது, தங்களுடைய குடும்ப வாழ்க்கை குறித்த புரிதலு டன் உள்ளனர்? தங்கள் துணைவருடனும், அவருடைய பெற்றோருடனும், தங்கள் குழந்தைகளுடனும் எப்படிப் பழகவேண்டும் என்பது குறித்தும், திருமண பந்தத்தில் எப்படிப்பட்ட பொறுப்புகளை ஏற்றல் வேண்டும் என்பது குறித்தும் எத்தனைபேர், தெளிவான சிந்தனை உடை யவர்களாக உள்ளனர்? வந்து சேரும் புதிய உறவுகளால், தன் உடன்பிறந்தோரிடத்தும், பெற்றோரிடத்தும் உள்ள உறவுகளில் ஏற்படும் மாற்றம் குறித்து அவர்கள் உணர் கிறார்களா?

குழந்தை பள்ளிக்குச் செல்ல விழைகிறதோ இல் லையோ, மூன்று வயதை அடையும்போது, பள்ளியில் சேர்க்கிறோம். பள்ளிக்கல்வி முடிந்தவுடன், கல்லூரி யில் சேர்க்கப்படுகின்றனர். அப்போதைய சூழலில் எந் தத்
துறையில் அதிகப் பணம் ஈட்ட முடியுமோ அதில் சேர்த் துவிடுகிறார்கள். பிள்ளைகளின் நன்மைக்காகவே எல் லாவற்றையும் தாங்கள் செய்வதாகப் பெற்றோர் கரு துகின்றனர். இளைஞர்கள் நடைமுறைக்கு ஒத்தவராக இருத்தல் வேண்டும் என்றும் அவர்களது கனவுகளை அவர்கள் தூக்கி எறிதல் வேண்டும் என்றும் எதிர்பார்க் கப்படுகிறது. இளைஞர்கள் திருமணம் செய்யத்தக்க வயதை அடையும்போது, பெற்றோர்
அவர்களைத் திருமணம் செய்துகொள்ள அழுத்தம் கொடுப்பர். குடும்பம் என்னும் பொறுப்பைச் சுமக்கும்

மனநிலையை இளைஞர்கள் பெற்றுள்ளனரா என்று யாரும் நினைப்பதில்லை.

நாம் ஒவ்வொருவரும் மேற்கூறிய சூழ்நிலையைக் கடந்தே வருகிறோம். நீங்களும் அத்தகைய சூழ்நிலை யைக் கடந்துவந்திருப்பீர்கள். மூன்று வயதில், நமக்கு என்ன செய்ய வேண்டும் என்று அறிந்திருக்க வாய்ப் பில்லை. அதனால், பெற்றோர் சொல்படி பள்ளிக்குச் செல்கிறோம். கல்லூரியில், நமக்கு இதழியல் குறித்த ஆர்வம் இருந்தாலும், பெற்றோர் சொற்படிப் பொறியியல் படிப்பில் சேர்வோம். அதுவரையில் நாம் பெற்றோரின் பராமரிப்பில் உள்ளதால், இதைக்கூட நாம் சரியென்றே கொள்ளலாம். நாம் புத்திசாலியாகவும், ஆர்வமுடையவ ராகவும் இருந்தால், பொறியியல் முடித்தபின்னர் கூட, இதழியலை முடிக்கலாம். எங்கே பின்தங்கி விடு வோமோ என்ற அச்சத்தில், ஒரு கூட்ட மனப்பான்மை யில், பெற்றோர் நமக்காக எடுக்கும் முடிவை நாம் மறுக்க இயலாதிருக்கிறோம். ஆனால், அது அத்துடன் முடிந்து விடுவதில்லை. படிப்பை முடித்த பிறகும், நமக்காக நாம் முடிவு எடுக்கும் முதிர்ச்சியைப் பெற்ற பின்னரும், பெற் றோரின் கைப்பாவைகளாகவே இயங்குகிறோம்.

சுயமாக முடிவெடுக்கும் மனிதர்கள் கூட்டத்தினின்று தனிப்பட்டு நிற்கும் திடம் உள்ளவர்களாக இருக்கிறார் கள். இவர்கள் பாராட்டுக்குரியவர்கள். ஆனால் பெரும் பாலான மனிதர்கள் கூட்டத்தில் ஒருவராக இருக் கும் முனைப்பிலும், சமூகத்தின் கோட்பாடுகளினாலும் மட்டுமே திருமணம் புரிகின்றனர். இவர்கள் தனித்து இருக்க விரும்புவதில்லை. வயதான காலங்களில் தனித்து விடப்படுவோமோ என அஞ்சுகின்றனர். சுற்றி இருப்பவர்களின் கேள்விகளுக்கு பயந்தே சிலர் திரும ணம் புரிந்து கொள்கின்றனர். சிலர் தனக்கு ஏதும் ஆண் மைக் குறைவோ இல்லை ஏதும் தீரா வியாதியோ எனச்

சந்தேகிப்பார்களோ என்று பயந்தும் திருமணம் புரிகின் றனர். பெண்கள் கேட்கவே வேண்டாம். நம் சமூதாயத் தில் ஓர் ஆண் துணை இன்றி பெண் எப்படி வாழமுடியும், முடியவே முடியாது என்று அவர்களே முடிவெடுத்துத் திருமணம் செய்து  கொண்டு விடுகிறார்கள். இதெல் லாம் ஒரு காரணமா, திருமணம் புரிய?

உங்களைப் பொருத்தவரை  வெற்றிபெற்ற திருமணம் என்பது எது? ஒரே கூரையின் கீழ் இருவர் பல வரு டங்கள் சேர்ந்து இருந்தாலே அது வெற்றி என நீங் கள் நினைத்தால், நீங்கள் வெற்றி என்ற வார்த்தைக்கு என்ன பொருள் கொண்டிருக்கிறீர்கள் என்பதே எனக் குச் சந்தேகமாக உள்ளது; கணவனுக்காக மனைவி சமைப்பதும், மனைவிக்காகக் கணவன் சம்பாதிப்பதும், எந்திரம் போல் அவ்வப்போது இருவரும் உடலுறவு கொள்வதும் காதல் என நீங்கள் சொன்னால், காதல் என்ற வார்த்தைக்கு உங்கள் பொருள் என்ன என நினைத்து வியக்கிறேன்; குழந்தைகளை வளர்ப்பதற் காக இருவரும் சேர்ந்து வாழ்வதை ஒரு வெற்றி பெற்ற திருமணம் என நீங்கள் கொண்டால், மன்னிக்கவும் குழந்தைகள் வளர்ப்பையும் திருமணத்தையும் நீங்கள் போட்டுக் குழப்பிக் கொள்கிறீர்கள் எனவே கூறுவேன்.

ஏன் மக்கள் இத்தனை வேடதாரிகளாக உள்ளனர்? எல்லோரும், திருமணம் என்பது ஓர் ஒப்பந்தம் என் றும், ஒருமுறை அந்த ஒப்பந்தத்துக்குக் கட்டுப்பட்ட பின்னர், பிடித்தாலும், பிடிக்கவில்லையாயினும், அதை விடாது கடைப்பிடித்தல் வேண்டும் என்றும் கூறுகின்ற னர். ஆம், திருமணம் என்பது ஓர் ஒப்பந்தம் என்பதை நான் ஏற்கிறேன். ஆனால், அது எத்தகைய ஒப்பந் தம்? வாழ்க்கைத் துணைவரின் கட்டுத்திட்டங்களுக்கு அடங்கி, அவருடைய தேவைகளைப் பூர்த்தி செய்து, அவர் எப்போதெல்லாம் விழைகிறாரோ அப்போதெல்

லாம் அவருடன் உடலுறவு மேற்கொள்வதே ஒப்பந்தமா? குழந்தைகளைப் பெற்றெடுத்தலே ஒப்பந்தமா? ஆதர்ச தம்பதியினர் என்று சமுதாயத்திற்குக் காட்டுவதற்காக வாழும் வாழ்க்கையா? இதற்காகவா மக்கள் திரும ணம் செய்து கொள்கிறார்கள்? இது ஒரு பாலினத்தை மட்டுமே கேட்கும் கேள்வியன்று; இருபாலினருக்கும் பொதுவான கேள்வியே.

எத்தனை பேர் திருமணம் என்பது கீழ்க்கண்டவற்றுக் கான ஒப்பந்தம் என்று கருதுகின்றனர்?

1. முதலாவதாகவும், முக்கியமானதாகவும், தத்தம் துணைவரைச் சமமான மனிதராக கருதுவதற்கு

2. தத்தம் துணைவருக்கு அவருக்கேயான மனமும், இதயமும், தொப்புளும் உள்ளதாகக் கருது வதற்கு (சக்தியின் மூலம் இதயத்திலிருந்து இல்லை, அது தொப்புளிலிருந்துதான் என்று எங்கேயோ படித்த நினைவு)

3. நாம் எப்படி நம் வாழ்க்கையை வாழ்கிறோமோ, அப்படியே நம் இணையருக்கும் அவர் வாழ்வை வாழ உரிமை உள்ளது என்று கருதுவதற்கு

4. நாம் எப்படி நம் சுதந்திரத்தை அனுபவிக்கி றோமோ, அதே போல் அவரும் அவர் சுதந்திரத்தை அனுபவிக்க வேண்டும் என்று கருதுவதற்கு

5. குடும்பம் குறித்தான விஷயங்களில் தத்தம் கருத்து, நோக்கு இவைகளை இருவரும் பகிர்ந்து செயலாற்றுவதற்கு

6. வீட்டில் இருந்துகொண்டு குடும்பத்திற்காகப் பாடு படும் தன் இணையரின் உழைப்பை புரிந்து கொள்வ தற்கு

7. பொருளீட்ட வெளியே செல்லும் நபர் தன் சுய கௌரவத்தை இழந்து, குடும்பத்திற்காக, எல்லாவி தமான மனரீதியான அல்லது உடல்ரீதியான செயல் களையும் செய்து குடும்பத்தைக் காப்பாற்றுவதை உணர்ந்துகொள்வதற்கு

8. தன் இணையரும் தனிமனிதர். அவருக்கென்று, அவர் விரும்பும் செயல்களைச் செய்ய, வெளியும் நேர மும் அவசியம் என்பதை உணர்வதற்கு

9. தன் இணையரும், தனக்கான கனவுக ளையும், இலக்குகளையும் கொண்டவராக இருப்பார் என்பதை ஏற்பதற்கு

10. எல்லாவற்றிற்கும் மேலாக, கணவன், மனைவி என்பது வெறும் சமைப்பதற்கும், சம்பாதிப்பதற்கும், உடலுறவு கொள்வதற்கும், பிள்ளைகளைப் பெற்று வளர்ப்பதற்கும், மட்டுமேயன்றி, அந்தந்தக் காலத் திற்கு ஏற்ப அத்தனை பணிகளையும் செய்யத் தயாராகவும், வாழ்நாள் இறுதிவரை, ஒருவருக்கு ஒரு வர் ஆதரவாக இருப்பதற்காகவும்.

என்னுடைய பார்வையில், கணவன் மனைவி என்பவர், வாழ்க்கை முழுதும் நண்பர்களாக வாழ்ந்து, ஒருவருக்கு ஒருவர் ஆதரவாக இருத்தல் வேண்டும். நட்பு என் பதே தம்பதியினர் இடையே நல்ல உறவை ஏற்படுத்தும். வெற்றிபெற்ற தம்பதியினரைக் கண்டால், அவர்களுக்கு இடையே உள்ள நட்புணர்வை நாம் உணரலாம். அவர் கள், அத்தகைய போக்கை 'நட்பு' என்று உணராமல், இயல்பாகவே கூட அவர்கள் தோழமையுடன் இருக்க லாம்.

நம் சமுதாயத்தில், உறவுகளுக்கு மத்தியில், நட்பு என் பது இல்லை என்றே சொல்லலாம். பெற்றோர், தங்கள் பிள்ளைகளை வளர்ப்பதைத் தங்கள் கடமையாகவும்

பொறுப்பாகவும் கருதுவதால், குழந்தைகள் அவர்கள் சொல் கேட்டல் வேண்டும் என்று நினைக்கின்றனர். குழந்தைகளின் நல்வாழ்விற்காக, அவர்கள் தங்கள் சொல்லை மதித்தல் வேண்டும் என்று பெற்றோர் விரும் புகின்றனர். குழந்தைகள் எவ்வளவுதான் வளர்ந்தாலும், அவர்கள் சுயமாக ஆராய்ந்து முடிவெடுக்கும் ஆற்ற லைப் பெற்றுள்ளனரா என்று கண்டுகொள்ளாமலேயே உள்ளனர். தாங்கள் பெற்றதாலும், சிரமப்பட்டு வளர்ப் பதாலும், வயதால் மூத்தவராக இருப்பதாலும், பிள்ளை கள் தங்கள் சொல்லைக் கேட்டல் வேண்டும் என்று பெற்றோர்கள் எதிர்பார்க்கிறார்கள். அதைப்போலவே (பெரும்பாலும்), கணவன், மனைவியைவிட மூத்தவ னாக இருப்பதால், மனைவி அவன் சொல்லைக் கேட்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பும் உள்ளது. கணவன் தன் பொறுப்புகளைச் சரிவர செய்கிறானோ இல்லையோ, அவனது மனைவி, சில பணிகளைச் செய்தே ஆக வேண்டும் என்று கணவன் எதிர்பார்க்கிறான்.

மனைவியும் தன் மீது திணிக்கப்பட்டிருக்கும் சில கட மைகள் போலவே, தன்னைப் பாதுகாப்பதும், தன் தேவைகளை பூர்த்தி செய்வதும் கணவனின் கடமை யாகத் திணிக்கிறாள். அவளால் இயன்ற செயல்களை கூடச் செய்யாமல், அவனைச் சார்ந்தே இருக்க முற்ப டுகிறாள். இப்படிப்பட்ட உறவுகள் பெரும்பாலும் ஒரு வணிக ரீதியிலேயே இருக்கின்றன.

அன்பு / காதல் என்ற பெயரில் (மேற்பூச்சில்) நாம் மற்றவரைச் சிறைவைக்கிறோம். அவரைக் கட்டுக்குள் வைத்து, சொந்தம் கொண்டாடி, ஆதிக்கம் செலுத்துகி றோம். இதனால் திருமணம் என்பது ஒரு விலங்காகிப் போகிறது. நம்மை அழுத்தி வைத்திருக்கும் ஒரு சுமை யாகிறது. நம்மால் அதை நம் வழியிலிருந்து அகற்ற முடி யாமல் போகிறது. ஒருவரைக் கட்டுக்குள் வைக்க நாம்

எடுக்கும் ஒவ்வொரு முயற்சியும் அவரை மூச்சுத் திண றல் கொள்ள வைக்கிறது. விளைவு? சுயசார்பு கொண்டு, தைரியமாக இருப்பவர்கள், திருமண பந்தத்திலிருந்து வெளிவந்து, சுதந்திரக் காற்றை சுவாசித்து தனக்கான வாழ்வை வாழ ஆரம்பிக்கின்றனர். ஆனால் தெளிவில் லாதவர்கள், திண்மை இல்லாதவர்கள், அடங்கி ஒடுங்கி, மூச்சு முட்டி, ஜடமாகி, சுயம் இழந்து, சிறிது சிறிதாக மரணம் நோக்கி நகர்கின்றனர். பல தம்பதியினர் இறந்து விட்ட மனங்களுடனும், இதயங்களுடனும், தொப்புள்க ளுடனும் சேர்ந்து இருக்கின்றனரே தவிர சேர்ந்து “வாழ் வ”தில்லை. ஆனால் இவர்களும் காதல் / அன்பு பற்றி நிறையப் பேசுவார்கள். மரணித்து விட்ட இதயத்தில் அன்பெங்கு வாழும்?

அத்தியாயம் - 19

# மனத்தடைகளின் நீக்கம்
# (Driving away Inhibitions)

உடலுறவில் தங்களுடைய விருப்பு வெறுப்புகளை, இணையர்கள் தங்களுக்குள் வெளிப்படையாகப் பகிர்ந்து கொள்ளாமல் இருந்தால், அது அவர்களுக்கி டையே மனவேற்றுமை வளர வழிவகுக்கும். இது முடி வில் மனவெறுப்பில் கொண்டுபோய் நிறுத்தும். இருவ ருள் ஒருவர், தான் பாலுறவிற்குத் தகுதியற்றவர் என்றோ அல்லது தன்னுடைய பாலுறவில் போதிய நாட்டம் இல்லை என்றோ நினைக்கும் நிலைக்குத் தள்ளும். இத்தகைய பிரச்சனையை நாம் எப்படி எதிர்கொள் வது? பொதுவாக, ஒரு துணை கிடைத்தவுடன், பாலுறவு குறித்து அத்தனையும் கற்றுக்கொண்டு விடுவர் என்ற கருத்து நிலவுகிறது. ஆம், அவர்கள் கற்றுக்கொள்ள லாம்; ஆனால், ஒருவர் மற்றவரின் விருப்பு வெறுப்பு களை எவ்வாறு அறிந்து கொள்வது?

இது, இசை மற்றும் சமையல் ஆகியவற்றைக் கற்றலை ஒத்தது. தன்னுடைய இணையருக்கு ருசிக்காத பட் சத்தில், ஒருவர் என்னதான் சமைத்தால் என்ன? ஒரு வர் பாடுவது மற்றவருக்குப் பிடிக்காத பட்சத்தில், அவர் கேட்டுத்தான் ஆகவேண்டும் என்று பாடினால் எப் படி? இங்கு இருவருக்குமிடையே தேவையானது, மனத் தடைகளற்ற, அவர்கள் விருப்பு, வெறுப்புகள் குறித்த, தெளிவான கருத்துப் பரிமாற்றம். “இந்தச் சமையல் உனக்குப் பிடித்துள்ளதா?”, “நான் பாடும் பாடல் உனக்கு விருப்பமானதா?” போன்ற கேள்விகளை நாம் பிறரி டம் கேட்பதில்லையா? மற்றவர் எதை விரும்புகிறார்

என்று கண்டு அதன்படி நாம் செய்வதில்லையா? அப்படியானால், அத்தகைய கருத்துப் பகிர்வு, உடலுறவு குறித்து மட்டும் ஏன் நடைபெறுவதில்லை? இத்தகைய மனம் திறந்த உரையாடல்கள் ஒருவரை ஒருவர் புரிந்து செயல்பட்டு அவர்களின் பந்தத்தை மேலும் மேலும் மெருகுகூட்டி, அவர்களுக்கிடையேயான ஈர்ப்பை எப்பொழுதும் அணையாமல் பார்த்துக்கொள்ளாதா?

இவை எல்லாவற்றிற்கும் காரணம் காமம் என்ற சொல்லை ஒரு தவறான வார்த்தையாக நோக்குவதே. நம் இணையரிடம் கூட இது குறித்துப் பேச நாம் விரும்புவதில்லை. கலவி வைத்துக்கொள்வதில் நமக்கு ஒரு பிரச்சனையும் இல்லை. இணையருடன் படுக்கையில் படுத்ததும் நாம் கலவி கொள்ள தயாராகத்தான் இருக்கிறோம். சமயத்தில் நண்பர்களிடம் கூடப் பேசுவோம், ஆனால் இணையரோடு பேசுவதற்கு மட்டும் ஏனோ நம்மால் முடிவதே இல்லை. செய்வதில் அவமானம் இல்லாத ஓர் இயற்கை நடைமுறை பேசுகையில் மட்டும் அவமானச் சின்னமாக எப்படி ஆகிப்போகிறது?

நம் சுற்றுச்சூழலில் சில முதிய இணையர்கள் கலவி கொள்வதைப் பார்க்கும் சந்தர்ப்பம் கூட நம்மில் சிலருக்கு எப்பொழுதேனும் அமைந்திருக்கலாம்; ஆனால் அவர்கள் அது குறித்துப் பேசுவதை கேட்கும் சந்தர்ப்பமே அமைந்திருக்காது. ஏனெனில் அது பேசக் கூடாத பொருள். வாழ்க்கைத் துணைவர்களுக்கு இடையே பாலுறவு என்பது அவர்கள் வாழ்க்கையோடு ஒருங்கிணைந்த ஒரு செயல் என்பதை நாம் ஏன் உணர்வதில்லை? பேசுவதைக்கூட தடைசெய்யும் மனப்பான்மையை உதறிவிட்டு, நாம் ஏன் நம் பிள்ளைகளுடன் இது குறித்து வெளிப்படையாகப் பேசக்கூடாது? ஹார்மோன்களால் வரும் மாற்றங்களைக் குறித்து நாம் ஏன் அவர்களுக்கு விளக்கக்கூடாது? உடலுறவு என்

பது இயல்பானது என்றும் அதில் ரகசியமோ அல்லது மறைப்புத்தன்மையோ தேவையில்லை என்றும் அவர்களுக்கு நாம் ஏன் எடுத்துச் சொல்லக் கூடாது? நாம் பெற்றோர்களிடமிருந்து அதுகுறித்த தெளிவைப் பெற்றிருப்போமானால், நம் துணைவரிடமும் அது குறித்துப் பேசுவதில் நமக்கு மனத்தடை இருந்திருக்காது.

பாலுறவு குறித்துக் கட்டமைக்கப்பட்டுள்ள இத்தகைய செயற்கைத்தனத்தைக் கண்டும் காணாதது போல் ஏன் இருக்கிறோம்? நாம் எதற்குப் பயப்படுகிறோம்? நம்முடைய மரபின் புனிதம் கெட்டுவிடும் என்று நம்புகிறோமா? மரபுகள் யாவும், காலத்திற்கேற்ப, சில மாறுதல்களைச் சந்தித்தே ஆகுதல் வேண்டும். நம்முடைய முன் சந்ததியினர், தட்டச்சு எந்திரத்தைப் பயன்படுத்தினார்கள் என்பதற்காகவே, அதனை நாமும் ஏற்றுக்கொண்டு, கணினியின் பயன்பாட்டைப் புறக்கணிப்போமா? பொதுவாக நாம் அப்படித்தான் உள்ளோம். முன்சந்ததியினரின் மரபை மாற்றாது பின்பற்றிக்கொண்டிருக்கிறோம். நம் ஒவ்வொருவருக்கும் தனித்துவமான மனம் உள்ளது. கண்களை மூடிக்கொண்டு மூதாதையரின் வழியைப் பின்பற்றுவது என்பது தேவையற்றது. நாம் அப்படிச் செய்வதால், நம்முடைய சுதந்திரத்தையும், நம்முடைய வருங்காலச் சந்ததியினரின் சுதந்திரத்தையும் ஒடுக்குகிறோம். மாற்றங்கள் இல்லையென்றால், வளர்ச்சி என்பது எந்தத் துறையிலும் சாத்தியமாகாது - பாலுறவிலும் கூட.

இருவரை இணைக்கும் வல்லமை பெற்ற உடலுறவு என்பது, சரியான வழியில் கையாளப்படவில்லை என்றால், அவ்விருவரைப் பிரிக்கும் சக்தியையும் பெற்றுவிடும்.

அண்மையில், தொலைகாட்சியில் நடைபெற்ற பாலுறவு குறித்த கலந்துரையாடல் ஒன்றைப் பின்னிரவில்

பார்த்தேன். முதலாவதாக, இத்தகைய நிகழ்ச்சிகள் ஏன் இரவில் மட்டும் இடம்பெறுகின்றன? பாலுறவு என்பது அத்தகைய கள்ளத்தனமானதா? அத்தகைய நிகழ்ச்சி கள் ஒரு முறையான பயிற்சி வகுப்புகள் இல்லையா? பாலுறவு என்பது மானுடத்தின் மையக்கரு என்பதால், அத்தகைய நிகழ்ச்சிகளில் உரையாடப்படும் கருத்துக ளின் விழுமம், ஒவ்வொருவரும் கற்றுக்கொள்ள வேண் டிய ஒன்று. அப்படி நள்ளிரவில் அத்தகைய நிகழ்ச்சி களை அமைப்பதன் காரணம், அது பெரியோர்களால் மட்டுமே பார்க்கப்படுதல் வேண்டும் என்றால், இன்றைய வாழ்க்கை முறையில், பெற்றோர்களைவிட, பிள்ளை களே, தாமதமாகத் தூங்கச் செல்கிறார்கள்.

இருக்கட்டும்; நான் அந்த நிகழ்ச்சியில் மருத்துவர் முன் வைத்த ஒரு கருத்தை இங்கு வைக்கிறேன். கணக்கெ டுப்பின் படி, உலகின் 35 சதவீதம் பெண்கள், காமத்தில் உச்சத்தைப் பெறாதவர்களாகவே உள்ளனர். இந்தியா வில் இந்தச் சதவீதம் இன்னும் அதிகமாக இருக்கும் என்று அந்த மருத்துவர் கூறினார். அதற்குக் காரணமாக அவர் மேலும் கூறியதாவது : பெரும்பாலான ஆண்கள், தத்தம் துணைவரைக் கிளர்ச்சியூட்டுவதே இல்லை அல்லது, அதுகுறித்த கவலை அற்றவர்களாகவே உள் ளனர். ஓர் ஆண், தன் விந்தை வெளியேற்ற மட்டுமே ஒரு பெண்ணைப் பயன்படுத்திக்கொள்கிறான்; அத்து டன் உடலுறவு என்பது முற்று பெற்றதாகக் கொள் ளப்படுகிறது. என் சொந்த அனுபவத்திலும், எனக்குத் தெரிந்த பல்வேறு பெண்களிடமிருந்தும் நான் அறிந்து கொண்ட வகையில், இந்த மருத்துவர் கூறிய கூற்றை முழுமையாக ஏற்கிறேன். சில ஆண்கள், பெண்கள் உச்சம் அடைவார்கள் என்ற உண்மையை அறியாத வர்களாகவே உள்ளனர். சில பெண்கள், உடல்ரீதியா கத் தங்களுக்கு ஏதோ கோளாறு என்றும் அதனால்

தான் தங்களால், உச்சத்தை அடைய முடியவில்லை என்றும் நினைக்கிறார்கள். எங்கே ஆண்கள் தங்களை, உடலுறவிற்கு ஏற்றவள் இல்லை என்று எண்ணிவிடு வார்களோ, அல்லது தங்களை விட்டுச் சென்றுவிடு வார்களோ என்ற அச்சத்தில், பெண்கள், அதுகுறித் துத் தத்தம் துணைவர்களுடன் பேசவும் பயந்தவர்களாக உள்ளனர். சில பெண்கள், எங்கே அப்படி வெளிப்படுத் திவிட்டால், அவள் தன் இயலாமையைத் தான் குறிப் பிடுகிறாளோ என்று ஆண்கள் எண்ண வேண்டிவரும் என்பதால், ஆணின் மனதை நோகச்செய்தல் கூடாது என்று சொல்லாமல் விட்டுவிடுகின்றனர்.

ஆண்கள் உண்மையிலேயே இதுகுறித்து அறியாமல் உள்ளனரா அல்லது அறியாமல் இருப்பதுபோல் நடிக் கின்றனரா என்று நான் திகைக்கிறேன். உண்மை எது வாகினும், பெண்ணின் பிறப்புறுப்பு துவாரமானது, ஆண் கள் தத்தம் விந்துவைக் கழிக்க அமரும் 'கழிவறை இருக்கை' ஆகவே உபயோகப்படுத்தப் படுகிறது.

இணையர்கள் தங்களுக்கிடையேயான பாலுறவில் நிறைவைப் பெற, சில யுக்திகளை கையாளலாம்:

1. பெண்கள் தங்கள் மனத்தடையை மெல்ல மெல்ல அகற்றி, தங்கள் விருப்பு, வெறுப்புகள் குறித்து, வெளிப்படையாகப் பேசுதல் வேண்டும்.

2. அத்தகைய நிலையில், பெண்கள் தங்கள் மனத் தடையை அகற்றி வரும்வரை, ஆண்கள் பொறுமை யைக் காத்தல் அவசியம்.

3. இருவரின் ஒருமித்த ஈடுபாடே இன்பத்தை அடை யச் செய்யும் என்பதை உணர்தல் வேண்டும். அதற் கான வழிமுறைகளை மேற்கொள்ளுதலும் அவசியம்.

4. இருவரும், தங்களுக்கிடையே விருப்பு வெறுப்புக ளைக் குறித்துப் பகிர்ந்து கொள்வதில் பொறுமையை யும், விழைவையும் காட்டுதல் அவசியம்.

காமம் என்பது பகிர்ந்து கொள்ளும் செயலே அன்றி அது பெண்களிடமிருந்து பறிக்கப்பட வேண் டிய பொருள் இல்லை என்பதை ஆண்கள் உணர்தல் அவசியம். இதை உணர்ந்தால் மட்டுமே அவன் பெண் ணைக் கவர இயலும்; இல்லையெனில், விரைவில், அவள், தனக்குத் தலைவலி என்று தொடங்கி, உடலுற விலிருந்து விலக விழையும் மனப்பான்மையைக் காண நேரிடும். காலம் கடக்கும்போது, பெண் தன்னுடைய வயதை ஒரு சாக்காகப் பயன்படுத்திக்கொண்டு, உட லுறவைத் தவிர்ப்பாள். அவள், தான் தன் இளமை யைக் கடந்துவிட்டதாகவும், சக்தியற்று இருப்பதாகவும் கூறத்தொடங்குவாள். இது அந்த ஆணுக்கு இதயத்தை நொறுக்கும் விளைவை ஏற்படுத்தும்.

நான் ஐம்பது வயது கடந்த பத்துக்கும் மேற்பட்ட ஆண் களிடம் இது குறித்து விவாதித்துள்ளேன். அவர்கள் அனைவரும், குழந்தைகள் பெரியவர்களாகி விட்டத னாலும், தத்தம் மனைவியர், பாலுறவை அனுபவிக் கும் வயதைக் கடந்துவிட்டதாலும், மனைவியர்களுக் குப் பாலுறவின்பால் ஈடுபாடு அற்றுவிட்டது என்று கூறி னர்.

தன்னுடைய தேவைகளைக் குறித்து வெளிப்படையா கத் தன்னுடைய துணைவரிடம் சொல்லாத பட்சத் தில், தான் தன் ஆணின் ‘கழிவறை இருக்கை ’ ஆகவே இருப்போம் என்றும், மனம், உடல் இரண்டுக் கும், மகிழ்ச்சியையும் நிறைவையும் ஏற்படுத்தும் கல வியை, முழுமையாகக் கடைசிவரை அனுபவிக்காம லேயே இறப்போம் என்றும் பெண்கள் உணர்தல் மிக முக்கியம்.

எல்லாவற்றிற்கும் மேலாக நமக்கு இருப்பது ஒரே வாழ்க்கை. அவ்வாழ்க்கையில், நாம் துணைவரைப் பெற்றிருந்தும், அவரால் கிடைக்கக்கூடிய இன்ப அனுப வத்தைப் புறக்கணித்தல் அவசியமா?

அத்தியாயம் - 20

# ஆண் அகந்தை

# (Male Ego)

பாலுறவையும் ஆணின் அகந்தையையும் நாம் எப்ப டியோ பிணைத்து வைத்துள்ளோம். ஒரு பெண் அவனு டன் உடலுறவு கொள்ள மறுக்கும்போதும், உடலுறவின் போது தான் அத்தனை இன்பமுறவில்லை என்று ஒரு பெண் சொல்லும்போதும், அவனுடைய அகந்தை அடி படுகிறது.

மனிதனின் வாழ்வாதாரமாகிய உணவைச் சமைப்பதற் குத் தனக்குத் தெரியாது என்பதை பெருமையுடன் சொல்லிக்கொள்ளும் ஓர் ஆண், உடலுறவின் போது இயலாத நிலையை மட்டும் ஏன் எளிதாக எடுத் துக்கொள்ள முடிவதில்லை? ஒரு பெண், உடலுறவில், அவனால் திருப்தியடையவில்லை என்று கூறக்கேட்ட தும், அவன் ஏன் அச்சம் கொள்கிறான்? ஏதோ ஆணின் சுயகௌரவத்தைத் தாக்குவதே ஒரு பெண்ணின் எண் ணம் போன்று அதனை ஏன் அவன் எடுத்துக்கொள்ள வேண்டும்?

நான் என் திருமணத்திற்குப் பிறகே சமைப்பதை ஆரம் பித்தேன். என் கணவர் வாங்கிவந்த சமையல்குறிப்புப் புத்தகத்தின் படிச் செய்ய ஆரம்பித்து பின்னர் நானே கற்றுக்கொண்டேன். விரைவில், என் சமையலை என் கணவரும் மற்றவரும் சிலாகிக்கும் வண்ணம் என் னால் சமைக்க இயன்றது. உடலுறவில் மேலும் தெரிந் துகொள்ள வேண்டும் என்று நினைக்கும்போது, ஓர் ஆணோ அல்லது ஒரு பெண்ணோ, பாலுறவு குறித்தும்

இதைப்போன்றேயன்றோ கற்றுக்கொள்ள வேண்டும்? அதை ஏன் அவமானமாகக் கருத வேண்டும்?

காமம் என்பது, ஆணின் ஆண்மையுடனும் அவன் அகந்தையுடனும் ஏன் இணைக்கப்படவேண்டும்? காமம் என்பது இரு பாலினரும் மகிழ்ந்து செயலாற்ற வேண்டிய ஒன்று. அந்தச் செயலில், பெண் ஒரு பாகத்தையும், ஆண் ஒரு பாகத்தையும் மேற்கொள்கின்றனர். இருவரும் அவர்களுடைய பகுதியைத் திறன்பட செய்யும்போது தான், அவர்கள் ஒன்றாக இன்புறுவதும் ஒன்றாக உச்சம் அடைவதும் சாத்தியமாகிறது. இதில் ஒருவர், சரியாகச் செயல்பட இல்லையாயின், அவர் தன் குறை என்ன என்று அறிதல் முக்கியம். தன்னுடைய துணைவருக்கு எப்படி மகிழ்ச்சியை உண்டாக்க வேண்டும் என்று அவர் அறிதல் முக்கியம். அதைப்போலவே அவருக்கான தேவைகளை, தன் துணைவரிடம் எடுத்துச் சொல்லுதலும் அவசியம்.

இத்தகைய இயல்பான நிகழ்வில், ஒருவரின் சுய கௌரவம் எப்படி உடைபடுகிறது? உடலுறவின்போது, ஆணோ, அல்லது பெண்ணோ, அவர்களது துணைவரின் தேவைக்கு ஏற்ப, தன் வழிகளை மாற்றிக்கொண்டால், இருவரும் அதிக இன்பம் பெறமுடியும் அல்லவா? ஓர் ஆண், பெண்ணின் தேவைகளைப் புரிந்து கொள்வதில் நாட்டம் காட்டி, அவளது தேவைகளை நிவர்த்தி செய்தால், அந்தப் பெண்ணும் அவனது தேவைகளை நிவர்த்தி செய்வாள். இத்தகைய முனைவு, உடல்ரீதியாக மட்டுமல்லாது, மனரீதியாகவும், அவர்களுக்கு இடையே நெருக்கத்தை ஏற்படுத்தும். இத்தகைய அன்னியோன்னியமான முனைவு, கலவி என்பது வெறும் விந்துவை வெளியேற்றும் நிகழ்வு என்றில்லாமல், மகிழ்வூட்டக்கூடியதாகவும், விளையாட்டாகவும் அமையும் அல்லவா?

உங்களுக்கு என்ன பிரச்சினை ஆண்களே? பெண்க ளைப் புரிந்துகொள்ளுதல் மிகவும் கடினமான காரியம் என்கிறீர்கள் எப்பொழுதும்! உடலுறவு குறித்தான விஷ யங்களில் நீங்கள் தான் பெரும் புதிராகத் தோன்றுகிறீர் கள்!

# அத்தியாயம் - 21

# பாலியற் கல்வி

பாலுறவில் ஈடுபடுவதற்கு முன்பாக, அது குறித்த தக வல்களை ஒவ்வொருவரும் அறிதல் முக்கியம். நம்மு டைய பிள்ளைகள் பாலுறவில் ஈடுபடுவதற்கு முன்னரே, அதுகுறித்த நுட்பமான தகவல்களை, நம்மில் எத்தனை பேர் அவர்களுக்குக் கற்றுக்கொடுக்க எண்ணுகிறோம்? உடலியல் கல்வி என்பது அறிவியலின் ஒரு பிரிவாகக் கற்றுக்கொடுத்தல் வேண்டும். உடல்ரீதியான மாற்றங் கள், அவற்றால் தூண்டப்படும் உணர்வுகள், எல்லாவற் றையும் கற்றுக்கொடுத்தல் மிகவும் அவசியம். உடலு றவு குறித்த கல்விக்கு நாம் வெளிப்படையான அணு குமுறையைக் கையாளுதல் வேண்டும். இத்தகைய முனைவு, இளைஞர்களின் மத்தியில், பாலியல் குறித்த கண்ணோட்டத்தைச் சமநிலைப்படுத்த உதவும்.

காலாவதியான நம் மரபுகளை இன்னும் பிடித்துக் கொண்டு இருப்பவராக இருந்தால், பிள்ளைகளிடம் நேரே இது குறித்து பேசத் தயங்குபவராக இருந்தால், வேறுபல வழிகள் உள்ளன. பதின்ம வயதை அடைந் ததும், நம் பிள்ளைகளுக்கு, நல்ல, தரமான, பாலுறவு குறித்த நூலை வாங்கித் தரலாம். இது அவர்களுக்கு உடலுறவு குறித்த சரியான கருத்தை எடுத்துவைப்பது டன், தேவையான தகவல்களை, அத்தகைய செயல்க ளில் ஈடுபடுவதற்கு முன்னர் அவர்கள் அறிந்துகொள்ள உதவும். ஒருவேளை, அத்தகைய நூல்களை நேரடியா கக் கொடுப்பதற்குத் தயங்கினால், அவர்கள் அறியாத வகையில், அவர்களுடைய கண்பார்வையில் படுமாறு வைக்கலாம்.

பதின்ம வயதில் உள்ள ஒவ்வோர் இளைஞரும், பாலி யல் என்ற சொல்லால் ஈர்க்கப்படுகிறார்கள். அப்படி, பெற்றோர்களின் முன்னர் எடுத்துப் படிக்கத் தயங்குப வராக இருப்பினும், மறைந்தாவது அந்தப் புத்தகத்தை எடுத்துப் படிப்பர். சரியான பருவத்தில், ஆரோக்கியமான உடலுறவு குறித்து அறிந்துகொள்ள இப்படி ஒரு சந்தர்ப் பத்தை நாம் உருவாக்கலாம்.

காமம் என்பது உலகெங்கும் வியாபித்துள்ளது. இந்த அண்டத்தில் பிறந்து வளரும் ஒவ்வோர் உயிரினத்துட னும் இது கலந்துள்ளது. காமம் என்பதே இந்த உலகை இயக்குகிறது. எனவே, இளைஞர்களிடமிருந்து இதை மறைத்து, அவர்களை அது குறித்த கல்வியற்றவர்க ளாய், சில நேரங்களில் இறக்கும்வரை அந்த நிலையி லேயே இருக்குமாறு, செய்வதில் என்ன பயன் உள்ளது?

பாலுறவு குறித்த சரியான புரிதலைப் பெற்றவராக நாம் நம் இளைஞர்களைப் பயிற்றுவித்தால், அந்த அறிவு, சரியான நேரத்தில், அவர்கள் கொள்ளும் உறவுகளைச் செம்மையாக்க உதவி புரியும்.

இருவரின் சேர்க்கை என்பது ஒரு மர்மமாக எத்தனை நாட்கள் நீடிக்கும்? இருவரின் உறவு என்பது என் றென்றும் தானாகவே நீடித்திருக்கும் என்ற மாயை எத் தனை நாட்கள் அகலாமல் இருக்கும்? இருவர் சேர்ந்து உறவு கொள்ள, உறவு நீடித்து நிற்க, இருவரும் சேர்ந்து உழைத்தல் அவசியம். இந்த உழைப்பை போட அவர்க ளுக்கு போதிய தெளிவும், முயற்சியும் தேவைப்படுகிறது. ஆனால் விந்தையிலும் விந்தையாக, நம் சமுதாயம் திரு மணம் என்பது ஏதோ ஓர் அறியமுடியாத விந்தையாக, இருவர் திருமணத்திற்குள் புகுந்து விட்டால், தானே அந்த உறவு வலுப்பெற்றுவிடும் என்பது போலவும், காலம் முழுவதும் அந்த உறவு இருவருக்கும் இனிமை யாய் இருக்கும் என்பது போலவும் ஒரு தவறான பிம்

பத்தை உருவாக்கி வைத்திருக்கிறது. இந்த அனுமானம் எனக்கு எப்பொழுதும் மர்மமாகவே தென்படுகிறது!

திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுவ தில்லை. தேவதைகள் எந்த இணையரையும் காலம் முழுவதும் காத்து நிற்பதில்லை. திருமணங்கள் கண் டிப்பாக இங்கு, நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் இந்த பூமியில் தான் நிச்சயிக்கப்படுகின்றன. அதனால், இணைந்து வாழ இருவரின் தேவைகள் குறித்தான புரிதல் இருவருக்கும் அவசியமாகிறது. இந்தப் பழங்கா லக் கற்பனைக் கதைகள் நம்மைத் தூக்கிச் செல்ல விட்டோமானால், எங்காவது கண்காணா இடத்தில் நம் மைத் தொப்பென்று போட்டுவிட்டுச் சென்றுவிடும்!

நம் முன்னோர்கள் சொன்ன எல்லாவற்றையும் நாம் நம் வாழ்வின் திருமந்திரமாக ஏற்று வாழ வேண்டியதில்லை. நம் மூளைகளும் உபயோகிக்கப்பட்ட வேண்டும்; இல் லையெனில் துருப் பிடித்து விடும்!

## அத்தியாயம் - 22

# உணவும் உடலுறவும்

"காமம் என்பதும் உணவு, மற்றும் நீர் போன்றே முக்கியமானது. தேவையற்ற அடக்கமும், கட்டுப்பாடும் இன்றி, இம்மூன்றின் வேட்கையையும் தணித்தல் அவசியம்."

— Marquis de Sade

எந்தவிதமான சுவையும் சேர்க்காது, வெற்றுச் சோற்றையோ, இட்டிலியையோ அல்லது ரொட்டியையோ நாம் உண்ண முடியுமா? குறைந்தபட்சம் உப்பையோ அல்லது மசாலாவையோ இவற்றோடு நாம் எதிர்பார்ப்போம் இல்லையா? இல்லை இனிப்பையாவது சேர்த்துக்கொள்வோம் அல்லவா? இப்படி வெறுமையாக சுவையற்ற உணவை, நொந்து கொள்ளாது, ஒருமுறையாவது உண்ண இயலுமா?

காமம் என்பதும் உணவு போன்றதே. புலனின்பத்துக்காக, அவை பயன்பட்டாலும், நம் பசியையும் அவையே போக்குகின்றன. வெற்றுச் சோறு நம் பசியைத் தணிக்கும் என்றாலும், நாம் சுவைகளைச் சேர்க்காது உண்டு, நம்மை நாமே வருத்திக்கொள்வதில் பயன் இல்லை. அதைப்போலவே, காமத்தின் சுவையையும் இன்பத்தையும் ஏன் நாம் புறக்கணிக்கவேண்டும்? அப்படிச் செய்வதற்கான தேவைதான் என்ன?

நம் உடலின் சிறிய பாகமான நம் நாவே உணவின் ருசிக்காக ஏங்கும்போது, நம் உடல் மட்டும் இன்பத்துக்கும், ஆசைக்கும் ஏங்குவதில் என்ன தவறு? ஆனால், காமம் என்று வரும்போது, நாம் என்ன செய்கிறோம்? நாம் நம்மையும், நமது துணைவரையும் புறக்கணிக்கி

றோம். சேர்த்து உண்ண ஏதுமற்ற நிலையில், வெற்று சோற்றை நம் துணைவருக்குக் கொடுத்துவிட்டு, அவர் உண்பதை நம்மால் பார்க்க இயலுமா? அது பரிதாபமாக இருக்கும் அல்லவா?

எல்லா ஆண்களும், தங்கள் விந்துவை வெளியேற்ற ஒரு துவாரம் மட்டுமே தேவை எனக் கருதினால், அவர் கள் பெண்களைத் தொந்தரவு செய்வதை விட்டுவிட்டு, கழிவறையின் இருக்கையையே பயன்படுத்திக்கொள் ளலாம். அத்தகைய கழிவறை இருக்கையாக தாங்கள் பயன்படுத்தப் படுவதைத் தவிர்த்து, பெண்கள், சுய இன்பத்தால் தங்கள் வேட்கையைத் தணித்துக்கொள் ளலாம்.

## அத்தியாயம் - 23

# பெண்களின் உடலுறவு குறித்த ஆர்வமின்மை

உடலுறவு என்பது உடல்ரீதியானதுதான் என்றாலும், அதை முழுமையாக அனுபவிக்க, அது மனத்திலிருந்து தொடங்கவேண்டும். காமம் என்பது உடல் மற்றும் மனத் தின் சேர்க்கையால் உண்டாகும் முழுமையான களிப்பு நிலையாகும். இருந்தாலும், நம் சமுதாயத்தில், காமம் என்பது இன்றளவும், உடல்ரீதியான ஒன்றாக மட்டுமே கருதப்படுகிறது. உடலுறவின் கடைசி கட்டமான உச் சம் எய்துதல் என்பது ஒன்றே மனதில் நிலைத்து, அதுவே கலவியின் முழுமை என்ற கற்பிதம் நிலவுகிறது. காதல் வயப்பட்ட ஆரம்ப காலக்கட்டத்தில், ஒரு பெண் தன் காதலன் பலவிதங்களில் தன் அழகை ரசிப்பதாக நம்பவைக்கப் படுகிறாள். அவள் கண்கள் அழகா னவை என்றும் அவை கவரும் தன்மையுடையவை என் றும் சொல்லப்படுகின்றன. கவர்ச்சி என்பது கண்களிலி ருந்து ஆரம்பிக்கிறது. அவன் அவளை உற்று நோக்கும் பார்வையை அவள் ரசிக்கிறாள். அவள் அழகான உட லமைப்பைக் கொண்டவள் என்று கூறப்படுகிறாள். ஒரு எதிர்பாராத தொடுதல் கூட ஒருவிதமான மின்சாரத்தை அவள் உடல் முழுவதும் செலுத்துகிறது. நம் சமுதாயத் தின் கட்டுப்பாடுகளைக் கணக்கில் கொண்டால், அவ் வப்போது, அங்கங்கு அவள் உடலின் சில பாகங்களில் அவன் ஸ்பரிசம் ஏற்படுத்தும் சில அதிர்வுகள் அவள் மனதையும் உடலையும் ஒரு நிலை கொள்ளாது தவிக்க வைத்து, மேலும் மேலும் அவன் அருகாமைக்கும் உற வின் முழுமைக்கும் ஏங்கும் நிலைக்கு தள்ளப்படுகி றாள்.

ஆனால், ஒரு ஆணானவன் தன் இணையுடன் கலவி கொண்ட பிறகு புணர்தலின் கடைசி கட்டமாக அவன் விந்து வெளியேறும் பொழுது கிடைக்கும் அந்த உட லின் உச்சமே தனக்கான பெரு இன்பத்தை அளிக்கி றது என்பதைக் கண்டுகொள்கிறான். ஆக ஒவ்வொரு முறை தன் இணையை நெருங்கும்போதும் அவன் கவனம் முழுவதும் விந்து வெளியேற்றத்திலேயே இருக் கிறது. இப்படித்தான் வேண்டுமென்றோ, அறியாமையி னாலோ, ஓர் ஆண் சுயநலவாதி ஆகிறான். தான் உச் சம் அடையும் போக்கில், நேரத்தில் தான் அவளும் உச் சம் அடைகிறாள் என்றோ இல்லை, அவளுக்கு இதற்கு மேல் அடைய ஒன்றுமில்லை என்றோ நினைத்துச் செயல்படுகிறான். இதற்குப் பிறகு, அவளின் அழகான கண்கள், அவளின் உடலில் அவன் மென் தொடுத லில் ஏற்படும் மின்சார அதிர்வுகள், எதுவும் அவன் சிந் தனைக்கோ, ரசனைக்கோ உட்படுவதில்லை. அவன் கவனம் முழுவதும் தன் உச்சம் மட்டுமே என்று ஆகிப் போகிறது. ஆகவே தான் நம் கலாச்சாரம் என்று நாம் பெருமையாகக் கூறிக்கொள்ளும் திருமணத்திற்குப் பிறகு தான் உடலுறவு என்னும் சம்பிரதாயத்தில், திரும ணத்திற்குப் பிறகு பெரும்பாலும் பெண்களுக்கு உடலுற வில் நாட்டம் போய்விடுகிறது. அது ஏதோ ஆண்களுக் காக மட்டுமே இயற்கை ஏற்படுத்திய ஓர் இன்பமாகவும், இயற்கையே பெண்ணை வஞ்சித்து விட்டதும் போல வும் தோன்றி, பெண்ணின் மனதில் பாலுறவின் பால் ஓர் அசிரத்தையை உருவாக்குகிறது.

தன் உடலில் முன் ஓடிய மின்சாரம் இதற்கு மேல் அவ ளைத் தாக்குவதில்லை. ஆணின் கண்களில் முன்பு கண்ட தனக்கான அந்த அன்பை, ரசிப்பை அவள் இழந்துவிடுகிறாள். அவளுக்கு கிடைப்பதெல்லாம் தன் துவாரத்தில் நுழைக்கப்படும் அவனின் உறுப்பின்

இரண்டு/மூன்று நிமிட இருத்தல் மட்டுமே. இப்படிப்பட்ட ஓர் உடலுறவில் எந்தப் பெண் சுவாரசியத்தை கண்டெடுப்பாள்?

இங்கு எனக்குப் புரியாத ஒன்று என்னவென்றால், ஒரு பெண்ணின் துவாரம் மட்டுமே ஒரு ஆணுக்கு அனுபவிக்க போதுமெனும் பட்சத்தில் எதற்காக பெண்ணின் உடலில் வனப்பை அவன் தேட வேண்டும்? எப்படி இருந்தாலும் அவளை முழுவதுமாக அனுபவிக்காமல், அவளுக்கும் அந்த இன்பத்தை தராமல் இருக்கப் போகும் பட்சத்தில், அவளின் உடலில் எந்தப் பாகம் எப்படி இருந்தால் என்ன? என்ன மாற்றம் நிகழ்த்தி விடப் போகிறது எந்தப் பாகமும்? இதிலிருந்து புரிவது என்னவெனில், ஒரு பெண்ணின் புறத்தோற்றம் ஒரு ஆணைக் கிளர்ச்சி கொள்ள வைக்கும் சாதனம் மட்டுமே. அவனுக்கு கிளர்ச்சி ஏற்பட்ட பின், அவனுக்கு அவளின் தேவைகள் பற்றிய எந்தச் சிந்தனையும் கிடையாது. அவள் ஒரு தனி மனுஷி என்றோ, அவளும் அவன் அருகாமைக்கு, தொடுதலுக்கு, அவன் ரசனைக்கு ஏங்கிக் கொண்டிருக்கிறாள் என்ற புரிதலோ அவனை அண்டுவதே இல்லை. சிறு சிறு தொடுதல்களும், அவளை ரசித்து சிலாகிப்பதும், அன்பான அணைத்தலுமே அவளுக்குக் கிளர்ச்சி ஊட்டுபவை என்பதை மறந்தே விடுகிறான்.

இப்படிப்பட்ட ஒரு கூடலை, எத்தனை காலம் தான் ஒரு பெண் விரும்பி ஏற்பாள்? அந்த ஆணின் மேல் எத்தனை காலம் தான் அவளுக்கு ஈர்ப்பு இருக்கும்? ஆனால் அவனின் எதிர்பார்ப்பு என்னவோ காலம் முழுவதும் தனக்குத் தேவைப்படும் போதெல்லாம் அவள் மகிழ்வாகத் தன்னை ஒப்புவிக்க வேண்டும் என்பதே!

அத்தியாயம் - 24

# சமூக கட்டமைப்புகள்

இந்த வார்த்தைகள் என்னை ஆச்சர்யப்படுத்தாமல் இருப்பதே இல்லை. நம் வாழ்வை விட, நம் மகிழ்வை விட உயர்ந்தது எது? நாம் நன்றாக ஆலோசித் தோமானால் நமக்குப் புரியும்; காலப்போக்கில், இந்தச் சமூகக் கோட்பாடுகளில் சில அங்கங்கு விடப்பட்டும், அங்கங்குப் புதிதாகச் சில சேர்க்கப்பட்டும் தான் இருக் கும். மேலும் இந்தக் கோட்பாடுகளானது உலகின் ஒவ் வொரு பகுதியிலும் வேறு வேறாக இருக்கும். மாற்றம் ஒன்றே மாறாதது என்று நம் எல்லோருக்குமே தெரியும் தானே? அப்படி இருக்க, காலங்களுக்கு ஏற்றவாறு, சில கோட்பாடுகளைக் களைவதும், சில கோட்பாடுகளைப் புதிதாக சேர்ப்பதும் தானே சரி? அது தானே நாம் முன் னேறுவதற்கான வழியாக இருக்க இயலும்?

நம் சமுதாயம், என்றோ வகுத்த சில கோட்பாடுகளை இன்றும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு நிறைய நாடங் களை அரங்கேற்றிக்கொண்டே இருக்கிறது.

படிக்காத, கிராமத்திலிருந்து வந்த என் தோழி ஒருவர் இருக்கிறார். நகரில் உள்ள ஒருவருடன் அவருடைய திருமணம் நடைபெற்றது. திருமணத்திற்குப் பிறகு அவர் நகரில் வசிக்கலானார். தன் கிராம மக்களை விட, நக ரத்தில் இருப்பவர்கள் குறுகிய மனப்பான்மை உடையவ ராக உள்ளனர் என்று அவர் கூறியது என்னைத் திகைப் படையச் செய்தது. அவர் கூற்றுக்கு எடுத்துக்காட்டுக ளாக இரு குடும்பங்களைப் பற்றிய விவரங்களைப் அவர் கூறினார்.

பதின்ம வயதில் இருக்கும் ஒரு பெண், வேறொரு சாதி யைச் சேர்ந்த ஓர் பையனைக் காதலித்தாள். பெற்றோர்

களின் எதிர்ப்பை உணர்ந்து இருவரும் நகருக்கு ஓடி வந்துவிட்டனர். சில மாதங்களுக்குப் பிறகு, அந்தப்பை யன் அவளை விட்டுவிட்டு ஓடிவிட்டான். என்ன செய் வது என்று தெரியாத நிலையில் அந்தப்பெண், மீண்டும் கிராமத்திற்குச் சென்று பெற்றோரிடம் மன்னிப்புக் கேட் டாள். முதலில் அவளை வைது, நையப்புடைத்தாலும், அவள் குடும்பம் அவளை மீண்டும் ஏற்றுக்கொண்டது. ஒரு மாதத்திற்குப்பிறகு தான், அவள் கர்ப்பமடைந்துள் ளாள் என்பதையும், அதை அழிக்க முடியாது என்பதை யும் உணர்கிறாள். அவளுடைய பெற்றோருக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அதனால் அந்தக் கிராமத்தின் அத்தனைபேரும் சேர்ந்து ஒரு முடிவு எடுத் தனர். என்ன முடிவு அது? அங்குள்ளோரில் எவரே னும் அவளை மணந்துகொண்டு அந்தக்குழந்தையை வளர்க்க ஆவலாக உள்ளாரா என்று வினவியது. அவ ளுடைய நிலையைக் கண்டு ஓர் இளைஞன் அவளை மணக்க முன்வந்தான். இன்றுவரை அவர்கள் இன்பமாக வாழ்ந்துவருகிறார்கள்.

அவளுடைய கர்ப்பம் குறித்து எவரும் எந்த ரகசியத் தையும் காக்கவில்லை. அவள் யாருடன் ஓடிப்போ னாள் என்றும், அந்தக்குழந்தை எவருக்குப் பிறந்தது என்றும் அந்த ஊரே அறிந்த ஒரு விஷயம். கிராமத் தார் அதைக்குறித்துக் கவலைப்படவில்லை. அவளும் அவளுடைய குழந்தையும் வாழ்தல் வேண்டும் என்பதே அவர்களுடைய ஒரே சிந்தனையாக இருந்தது. அவள் தவறு செய்தவளாகவே இருந்தாலும், விதியைக் குறை கூறிக்கொண்டு, அவள் வாழ்க்கையை நாசமாக்க வில்லை. கிராமத்தில் எவரும் அவளுக்குத் தண்டனை கிடைத்தல் வேண்டும் என்று எண்ணவில்லை. மொத்த கிராமமும் அவளை விரட்ட நினைக்கவில்லை. அந்தக் குழந்தை அவனது இல்லை என்பது, சுற்றி இருந்தோ

ருக்கு தெரிந்தும், அதைப்பற்றியெல்லாம் கவலைப்ப டாமல் அந்தப்பெண்ணை மணம்செய்து கொள்ளவும் அந்தப்பையன் முன்வந்தான்.

அடுத்த கதை. மிக வறிய நிலையில் உள்ள ஒரு தம் பதியினருக்கு நான்கு பிள்ளைகள். கணவன் தன்னால் இயன்ற மட்டும் சம்பாதிக்க முயன்றாலும், அது போதுமா னதாக இல்லை. வாழ்க்கையைக் கடத்துவதைக் கடி னமாக அவன் உணர்ந்தான். அதனால், அவன் மனை வியும் வேலைசெய்ய ஆரம்பித்தாள். திடீரென்று செய்து வந்த வேலையையும் இழந்த அவனுக்கு, வேறு வேலை யும் கிடைக்கவில்லை. அவன் தன் மனைவி கஷ்டப்ப டுவதைப் பார்க்கச் சகிக்காது, ஒரு நாள், தற்கொலை செய்துகொள்கிறான்.

அவன் இறந்து ஒரு மாதம் ஆன பிறகு, கிராமத்தார், திருமணம் செய்துகொள்ளாமல் இருந்த இறந்தவனின் சகோதரனிடம், அந்தக் குடும்பத்தைக் கவனித்துக் கொள்ள முடியுமா என்று கேட்டனர். அவனும் சரி என்று சொல்ல, அன்றிலிருந்து அவன் தன்னுடைய தமைய னின் மனைவியுடனும், அவர்களுடைய குழந்தைகளு டனும் வசிக்கலானான். இன்று, பல வருடங்கள் கழிந்து, அவர்களுடைய பெண்கள் எல்லோருக்கும் திருமணம் நடந்து, அவர்களுக்காக ஒரு வீட்டையும் அவன் கட் டியுள்ளான். இருவரும் அமைதியாகக் குடும்பம் நடத்தி வருகின்றனர்.

கிராமங்களில், திருமணம் என்பது, பொருளாதாரத் தையும், தார்மீக ஆதரவையும் தருவதற்காக மட்டுமே என்று கருதாமல், ஒருவருடைய உடலியல் இச்சைக ளைத் தணிக்கவும் தான் என்பதைப் புரிந்து வைத்துள் ளார்கள். பெண்கள் தனித்து விடப்பட்டால் அவர்களது நிலை என்னவாகும்? அவர்கள் என்ன செய்வார்கள்? வாழ்க்கையில் ஆண் துணையின்றி அவர்கள் எவ்வாறு

சமாளிப்பார்கள்? இதுவே அந்தக் கிராமத்து மக்கள் சேர்ந்தெடுத்த முடிவின் முதன்மையான காரணமாக இருந்திருக்க முடியும்.

யதார்த்த வாழ்வென்பது இது தானே? தனி மனித வாழ்வை முன்னிறுத்தி, கோட்பாடுகளைத் தகர்த் தியோ, மாற்றியோ சென்றுகொண்டே இருப்பது தான் ஒரு சமூகத்தின் முன்னேற்றத்திற்கு வழி கோலும். இல் லையா?

இதை எப்படி நாம் அழைப்போம்? மனிதத்துவம்? "இதைப்போன்று நகரத்தில் நடப்பதை நான் பார்த்ததே இல்லை" என்று என் தோழி கூறினாள். பெற்றோர்களோ அல்லது, குடும்பத்தில் உள்ள மூத்தோர்களோ அத்த கைய முடிவுகளை நகர்ப்புறங்களில் எடுப்பது கிடை யாது. அப்படியான முடிவுகளை, பெரும்பாலும், பாதிக் கப்பட்டவரே எடுத்தாலும், அவர், நண்பர்களாலும், உறவுகளாலும் விமர்சிக்கப்படுவார். இதற்கு முரணாக, அந்தக் கிராமத்தில் மூத்தோர், அந்தப் பெண்ணுக்கு அளித்த மரியாதையை எண்ணிப் பாருங்கள். ஆனால், நகரங்களில், விவாகரத்து ஆன பெண்களுக்கும், வித வைகளுக்கும் அப்படிப்பட்ட மரியாதையை நாம் தருவ தில்லை.

நாகரிக வளர்ச்சியின் பாதையில் யதார்த்தங்களை நாம் எங்கோ தொலைத்து விட்டோம்.

திருமணத்துக்கு முன்னர் ஒரு பெண் யாருடனேனும் உடலுறவு கொண்டால் அதை மறைத்து வைக்கப்பழ குகிறாள். காரணம் அது தன் குடும்பத்துக்கு இழுக் கைத் தேடித் தந்துவிடும் என்பதாக அவள் நினைக்கி றாள். பெற்றோர்களும் அத்தகைய விஷயங்களை எல் லோரிடமிருந்தும் மறைத்து, சமுதாயம் தரும் அழுத் தத்தின் காரணமாக, சீக்கிரமாக ஒரு திருமணத்தை

ஏற்பாடு செய்து அப்பெண்ணை மணமுடித்து அனுப்பிவைக்கின்றனர். தன் பெண்ணின் கடந்தகாலத்தை, அந்த மாப்பிள்ளையிடமிருந்தும், அவன் பெற்றோர்களிடமிருந்தும் மறைத்தே வைக்கின்றனர். பின்னர், இறுதி நாள் வரை, குற்ற மனப்பான்மையுடன், பெற்றோர்களும், அந்தப்பெண்ணும் வாழ்கின்றனர். தன்னை மணந்தவனுக்கு அவளுடைய கடந்த காலம் தெரியாது இருந்தும், மறந்துவிட்டு, அமைதியுடன் வாழாமல், அவனைத் தான் ஏமாற்றிவிட்டதாகவே எண்ணிக்கொண்டு, காலம் முழுதும் அந்தப்பெண் வாழ்கிறாள்.

நம் முன்னோர்கள் மனிதர்களின் ஒழுக்கத்திற்காகச் சில கோட்பாடுகளை வகுக்காதிருந்தால், இன்று நாம் காட்டுமிராண்டிகளாகத்தான் வாழ்ந்து கொண்டிருப்போம் என்பதை நாம் ஏற்றுக்கொண்டாலும், மனிதனின் நலன் கருதி ஏற்பட்ட கோட்பாடுகள், இன்று சில சுயநலமிகளால், மற்றவர் மேல் ஆதிக்கம் செலுத்தும் வகையில், தனி மனித வாழ்வைக் குலைக்கும்படியாக மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது என்பதும் வருத்தத்திற்கு உரிய விஷயமே!

அத்தியாயம் - 25

# நல்லுறவிற்கான சில விதிமுறைகள்

என் எழுத்துக்களிலிருந்து நான் எல்லோரும் சுதந்திரமாக யாருடன் வேண்டுமானாலும் பாலுறவு வைத்துக்கொள்ளுங்கள் என்றோ வெளிமண உறவுகள் அவசியமென்றோ சொல்வதாக படிப்பவர்களுக்கு தோன்றலாம். கண்டிப்பாக அப்படி இல்லை. இணையர் இருவரும் ஒருவர் மீது ஒருவர் மட்டற்ற அன்பும், திருப்திகரமான கலவியையும் கொண்டிருந்தால், அவர்கள் வேறு எங்கும் ஈர்க்கப்படும் வாய்ப்புகள் மிகவும் அரிது. இது தான் ஒரு அருமையான திருமண வாழ்க்கையின் பண்பு. ஆனால் இப்படிப்பட்ட உறவு எல்லோர் வாழ்விலும் அமைவதில்லை.

அழகான உறவுகள் அமைய வேண்டுமானால் சில விதிமுறைகளைக் கடை பிடித்தல் அவசியம். இவை யாராலும் எழுதப்பட்ட விதிகள் அல்ல. இவற்றைக் கடை பிடிப்பதொன்றும் கம்பசூத்திரமில்லை. தனி மனிதராக ஒருவர் உணர்வை ஒருவர் புரிந்து நடப்பதற்கான வழிமுறைகள் தான் இவை. இப்படி புரிந்து நடக்கையில் ஏற்படும் மரியாதையும் அன்பும் இருவரையும் எப்பொழுதும் இணைத்து வைக்கும் பாலமாக அமையும்.

1. இந்த விதியை மிகவும் அற்பமானது என்று தயவுசெய்து ஒதுக்கிவிடாதீர்கள். தாங்கள் பெற்றோராக வேண்டியதில்லை என்று முடிவெடுத்த இணையர்களுக்கு மட்டுமே இவ்விதி பொருந்தும். கணவன் - மனைவியோ, காதலர்களோ அல்லது வெளிமண உறவில் ஈடுபடுபவர்களோ, எந்த வகையான உற

வாயினும் சரி, இத்தகைய முடிவெடுத்தவர், உடலு றவின் போது, கருத்தடைச் சாதனங்களைப் பயன் படுத்துதல் வேண்டும். பெரும்பான்மையான ஆண் கள், ஆணுறையுடன், முழுமையான சுகத்தை அனு பவிக்க முடியாததால், அதை அணிய விரும்பு வதில்லை என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அது எவ்வளவு உண்மை என்று எனக்குத் தெரி யாது. ஆணுறை அணிவது ஆரோக்கியமானது என்ற போதும், ஆண்களில் பலர் இதைத் தவிர்க்கிறார்கள். ஆண்களின் நிலையை நான் புரிந்துகொண்டாலும், எங்கே கர்ப்பம் அடைந்துவிடுவோமோ என்ற தொடர் அழுத்தத்திற்கு உட்படும் பெண்களின் அவலத்தை, ஆண்கள் புரிந்து கொள்ளக்கூடாதா? அப்படியான நிலையில், உடலுறவின் போது, அந்தப் பெண்ணுக் குக் கர்ப்பம் குறித்த பயம் தீடீரென ஏற்பட்டுவிட்டால், அவள் அந்தக் கணத்தில் எப்படி இன்புறுவாள்? அவ ளுடைய மனம் அச்சத்தில் இருக்கும்போது, ஆணு டனான உடலுறவில் முழுமையான சுகத்தை எப்படி அனுபவிப்பாள்? இந்தச் சாதாரண அச்சத்தை புரிந்து செயல்படாத ஆண், அவள் கண்களுக்கு ஒரு சுயநல வாதியாக மட்டுமே தெரிவான்.

2. பெண்ணின் மாதவிடாய் வருவதற்குத் தாம தமானால், அது கர்ப்பமாக இருக்குமோ என்று, அவள் மனதளவில் மிகவும் பாதிக்கப்படுகிறாள். அது அவனை நேரடியாகப் பாதிக்கவில்லை என்பதனால், தனக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை என்பது போல் நடந்து கொள்வது, அவள் வலியை, அச்சத்தை உணராமல் இருப்பதாகும். அந்நேரத்தில் குழப்பத் தில் இருக்கும் அவள் மனதிற்கேற்ப, ஆறுதலாகவும், ஆதரவாகவும் இருத்தல் அவசியம். அவன் செய்யும் அத்தனை செயல்களிலும் உண்மையாக இருத்தல்

நலம். உடல்ரீதியாக அது ஆணைப் பாதிக்காவிட்டாலும், அவன் கரிசனத்தைக் காட்டாது இருந்தால், தன்னுடைய உடலை மட்டுமே அவன் பார்க்கிறானே ஒழிய மற்றவகையில் அவன் தன்னைப் பற்றிக் கவலைப்படவில்லை என்று அவள் நினைக்கும் நிலைக்குத் தள்ளப்படுவாள்.

3. ஆண், பெண் இருவரும், மற்றவரின் எல்லைகளை அறிந்துகொண்டு, அவர்களுக்கான வெளியில், சுதந்திரத்தில் தலையிடாதிருத்தல் வேண்டும். அடுத்தவரின் இயல்பை அறிந்து, அதை ஏற்றுக்கொண்டும், தம் இச்சைகளுக்கு ஏற்ப அவரைத் திரிக்க நினைக்காமலும் இருப்பது மிக முக்கியமானவை ஆகும்.

4. அன்பும் அரவணைப்பும் முக்கியமானவைதாம் என்றாலும், அடுத்தவருக்கு மரியாதை காட்டுதல் என்பது, எந்த ஓர் உறவும் நாளுக்கு நாள் வளர்வதற்கு உதவும் அடிப்படைத் தேவையாகும். இது, நல்ல ஓர் அடித்தளமாக அமைந்து, நீண்ட நாட்களுக்கு அந்த உறவு செழிக்க வழிவகை செய்யும்.

5. திருமண பந்தத்தில், தயவுசெய்து, துணைவரை, எந்தச் சூழலிலும், எப்படி வேண்டுமானாலும் கையாளலாம் என்ற மனப்போக்கைத் தவிர்க்கவும்.

6. உடலுறவு கொள்ள முயலும்போது, துணைவர், வேறெந்தப் பிரச்சனையின் தாக்கத்திலும் உள்ளாரா என்பதை அறிந்து செயல்பட வேண்டும். சில நேரங்களில், தனக்குத் தேவையான போது, சாய்ந்துகொள்ள ஒருவர் உள்ளார் என்ற நம்பிக்கையில், ஏதோ ஒரு குழப்பமான நிலையில், தன் துணைவர், மனரீதியாகவும், உணர்வுரீதியாகவும் ஆதரவாக இருப்பார் என்ற நினைப்பில் நெருங்கக் கூடும்.

அதைக்குறித்து அமர்ந்து பேசவும் அவர் நினைக்க லாம். எந்தவிதப் பிரச்சனையாக இருந்தாலும், கவ னத்தைத்திருப்பி, உடலுறவு அதைச் சரிசெய்துவிடும் என்ற நம்பிக்கையில், அவரது மனநிலையை மாற்ற நினைக்காதீர்கள். கவனமாக இருங்கள். அத்தகைய முயற்சி, அந்தச் சூழலை மேலும் மோசமடையச் செய் யலாம். மேலும், அதன் மூலம் நீங்கள் காமம் ஒன்றே குறியாக அலையும் மனிதராகவும், பண்பில்லாதவர் போல தோற்றத்தையும் பெறலாம்.

7. இன்றைய இளைஞர்களின் மத்தியில், திரு மணம் செய்துகொள்ளாது, சேர்ந்துவாழும் முறை அதிகமாக நிலவுகிறது. ஆயினும், இத்தகைய முறை யில், இருவருக்கும் அதிக அளவிலான முதிர்ச்சி தேவைப்படுகிறது. இவ்வித வாழ்க்கை முறையில் இருவரும் இணைந்திருக்கும் காலம் நிலையற்றது என்பதை மனதில் நிறுத்தி வைத்துக்கொள்ளல் அவ சியம்.. அப்படியான ஒரு முடிவு வரும்போது, அதைக் குறித்து வருத்தப்படவோ அல்லது அப்பிரிவை எண் ணிக் கலங்கிக் கொண்டிருக்கவோ கூடாது. இத யங்களில் பெருத்த வலியை ஏற்படுத்தினாலும், பிரி வின்போது, ஒருவரை ஒருவர் குற்றம் சொல்லாத வகையில் முதிர்ச்சியைக் கொண்டிருத்தல் அவசியம். உணர்வுகளை அடக்க நம்மால் இயலாது என்றாலும், அதற்கான எதிர்வினையை நம்மால் கட்டுப்படுத்த இயலும்.

8. நாம் வெளிமண உறவில் ஈடுபட்டிருக்கும் போது, அத்தகைய உறவை எப்படி நாம் எதிர்கொள் கிறோம் என்பதில் கூடுதல் கவனம் தேவை. பொது வாக, திருமண வாழ்வில் ஏற்படும் ஒரு வெளியை நிரப்பும் விதமாக அமைவதே வெளிமண உறவு. நாம் அந்த வெளியை நிறைக்கும் ஒருவராக மட்டுமே

இருத்தல் அவசியம். அடுத்தவரை, மிகையான கட்டுப்பாட்டில் கொண்டுவரும் விதத்தில் நடந்துகொள்ளுதல் கூடாது. அடுத்தவருடைய குடும்பத்திற்கான, அவரது பொறுப்புகளை நாம் முழுமையாக அறிந்துகொள்ளுதல் வேண்டும். எப்போது நாம் அணுக வேண்டும் என்றும் எப்போது நாம் விலகி இருத்தல் வேண்டும் என்றும் தெரிந்திருப்பதே இம்முறையின் முக்கிய விதியாகும். ஒரு சிறிய தவறான அணுகலும், அவரை சர்ச்சைக்குள்ளாக்கி, அவர் குடும்பத்தில் பெரிய குழப்பத்தை ஏற்படுத்திவிடும். நாம் ஒருவரை உண்மையாக நேசிக்கிறோம் என்றால், அவரது குடும்பத்தை அழிக்க நினைக்க மாட்டோம்.

9. அடுத்தவர் என்ன செய்கிறார் என்பதை எப்போது பார்த்தாலும் கவனித்துக்கொண்டோ, அல்லது அவர் நடவடிக்கைகளை கட்டுப்படுத்தவோ முயலாதீர்கள். இது எந்த வகையான உறவுக்கும் பொருந்தும். உங்கள் வாழ்க்கையை வாழ்ந்து கொண்டு, உங்கள் சொந்த இன்பங்களை நுகர்ந்து கொண்டு, துணைவரிடம் எல்லா நேரமும் தொற்றிக் கொண்டு இல்லாமல், உங்களுக்காகவோ, உங்கள் நண்பர் மற்றும் சுற்றத்தாருடனோ நேரம் செலவழியுங்கள். மிகையாக ஒருவரிடம் தொற்றிக்கொண்டிருப்பது அவ்வுறவைக் கெடுக்கவும் வழி வகுக்கும்.

10. கடைசியாக, நம்பிக்கையையும் தாண்டிச் செல்லுங்கள். மனிதர்களை நேசித்து, அவர்களை அவர்களாகவே வாழ விடுங்கள். வேறெந்தக் காரணமோ, முனைவுகளோ இல்லாவிடினும், இந்த முறை, நாம் உள்ளவரை, இந்த உறவை நீட்டிக்கும்.

## அத்தியாயம் - 26

# குழந்தை விளையாட்டு

பல வீடுகளில், குழந்தைகள் ஒன்று கூடி, சமைப்பதைக் கண்டிருக்கிறோம். நாம் சிறுவர்களாக இருந்தபோது, நாமே அப்படி விளையாடியும் இருப்போம். சமையல் எப்படிச் செய்வது என்று குழந்தைகளுக்குத் தெரி யாது. உணவில் பயன்படுத்தப்படும் சில பொருள்களான அரிசி, பருப்பு, காய்கறி போன்றவை மட்டுமே குழந்தை கள் அறிந்தது. இவற்றைச் சேகரித்துவந்து, தங்களு டைய சிறிய விளையாட்டுப் பாத்திரங்களில் சமைப்பர். அவர்கள் பெற்றோர் என்ன சொல்கிறார்கள் என்ப தைக்கூட கேட்காமல், இந்தச் சமையல் விளையாட் டில், குழந்தைகள் மூழ்கித் திளைப்பர். முடிவை எதிர் பார்க்காமலேயே, நாள் முழுதுமாக சமையல் விளை யாட்டில் அவர்கள் இன்புறுவதைப் பார்க்கிறோம். முடி வில் அவர்கள் முழுதுமாக களைப்புறுகின்றனர். வாய்ப்பு கிடைத்தால், அவர்கள் மீண்டும் மீண்டும் அதே விளை யாட்டை விளையாடும் வலிமையைப் பெற்றவர்கள்.

கலவி என்பதும் அத்தகைய குழந்தை விளையாட்டைப் போன்று இருத்தல் அவசியம். நம்மால் எவ்வளவு முடி யுமோ அவ்வளவு சக்தியையும், இன்பத்தையும் ஈடுபாட் டையும் கொண்டு, கலவியை மேற்கொண்டால் எப்படி இருக்கும் என்று யோசித்துப் பாருங்கள். அப்படியானால், கலவி எப்போதாவது சலிப்பைத் தருமா? நாம் அதை மீண்டும் மீண்டும் விளையாட விழைவோம். ஆனால், நாம் கலவியை, மிகவும் தீவிரமான செயலாகத்தான் கருதுகிறோம். ஏனெனில், நமக்கு அதன் முடிவான 'உச் சம்' மட்டுமே - பல நேரங்களில் ஒருவருடைய 'உச்சம்' மட்டுமே - கருத்தாகிறது.

இந்த விளையாட்டின் முடிவு, உடல் களிப்புறுதலும், உடலின் வேட்கை தணிப்புறுதலும் ஆகும். நாம் எல் லோரும், இந்தச் செயலின் முடிவை மட்டுமே மனதில் கொண்டு, அதன் முழுமையான செயல்முறையை மறந் துவிடுகிறோம். அந்தச் செயலின் சுவாரசியத்தை அனு பவிக்காமல் கடக்கிறோம்.

ஒருவர் ஆண் என்பதும் மற்றவர் பெண் என்பதும் ஒரு அழகான கலவியில் மறக்கப்பட்டுவிடும். எப்படி குழந் தைகள் விளையாடுகையில் ஆண், பெண் என பேதம் பார்க்காமல், யார் எந்தப் பாத்திரத்தை கையாளவேண் டுமென வரையறுக்காமல் குதூகலமாக இருக்கிறார் களோ, அப்படி ஒரு நிலையில் இருவரும் அவரவர் பால் மறந்து, நிலை மறந்து, திளைத்து கலவி கொள்கையில் அது ஓர் ஆசீர்வதிக்கப்பட்ட நேரமாகும்.

நம் மனத்திற்குச் சுகம் கொடுக்கும் விளையாட்டே மனம் கடந்து உடலுக்கும் இன்பம் சேர்க்கும். உடலு றவு என்பது நம் ஆன்மாவைத் தீண்டி, ஆன்மாவிற்கு சாந்தி கொடுக்கும் ஒரு முறையாக நாம் என்றாவது நினைப்பதுண்டா? நம் மனமும், உடலும் நிர்வாணமாகி றது. அன்புடன் ஒருவரை ஒருவர் கலக்கும் நேரம், மற் றவர் முன் உடை அணிந்து ரகசியமாக காக்கும் நம் உறுப்புகள், சுதந்திரம் அடைகின்றன இவ்வேளையில். மான, அவமான உணர்வுகள் தொலைத்து, அதே போல் இருக்கும் இன்னோர் உடலைத் தீண்டுவதில் ஆசுவா சம் கொள்கிறது. நாம் ஒன்றாகிறோம். இந்த நிர்வாணமே ஆன்ம நிர்வாணத்தின் வெளிப்பாடாகும்.

அத்தியாயம் - 27

# காதல் மற்றும் காமம் குறித்த கட்டுக்கதைகள்

காதல் மற்றும் காமம் குறித்து நம்மிடையில் பல கட்டுக் (கற்பனை) கதைகள் உலா வந்து கொண்டிருக்கின்றன.

1. ஒருவரின் சமுதாய நிலை, அவரின் உருவத்தோற் றம், அழகு இதை வைத்துத் தான் காதல் வருவதாக:

நம்மிடம் சில நேரம் நம்மைக் காதலிப்பதாகச் சொல்ப வர்களின் கேள்வி (நாமே கூட யாரையாவது காதலித்து அவர்களை இந்தக் கேள்விகளை கேட்டிருக்கலாம்) என்னிடம் என்ன குறை என்று என்னைக் காதலிக்க மறுக்கிறாய்? நான் பார்ப்பதற்கு நன்றாக இல்லையா? நான் படித்தவள்(ன்) இல்லையா? நான் நன்றாகச் சம் பாதிக்கவில்லையா? அவளி(னி)டம் எதைக் கண்டாய் என்னிடம் இல்லாததை?

காதல் என்பது இது எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டது. அது எப்படி ஏன் ஒருவரிடம் தோன்றுகிறது என்பதை ஆராயவோ, தெளிவுபடுத்தவோ இயலாது.

இந்தக் கட்டுக்கதை மனிதர்களின் மனதில் ஒப்பீடு செய்ய வைத்து பொறாமையைத் தோற்றுவிக்கிறது.

நாம் காதலிப்பதாகச் சொல்லிக்கொள்ளும் ஒருவர் நம் மைக் காதலிக்கவில்லை என தெரிந்தால், ஒரு சிலர் அவர்களைக் கொலை செய்யும் அளவிற்குக் கூட போய் விடுகிறார்கள். யாரையும் காதலிக்க வைக்க இயலாது. அது ஓர் உணர்வு, அது தானாகத் தோன்ற வேண்டும். அது நம்மீது அவர்களுக்கு ஏற்படவில்லை எனில் அது அவர்கள் குற்றமும் இல்லை, நம் குற்றமுமில்லை.

2. ஒரு திருப்திகரமான உடலுறவு மட்டுமே கண்டிப் பாக மனரீதியாக அவர்களை நம்முடனே வாழ்நாள் முழுவதும் பயணிக்க வைக்கும்.

இணையருக்குள் உடலுறவு எவ்வளவு முக்கியமோ, அத்தனை முக்கியம் அவர்கள் மனரீதியாக நம்மு டன் மகிழ்வாக இருக்கிறார்களா என்பதும். இருவர் இணைந்த வாழ்க்கையில் ஒருவரின் உணர்வுகள், தேவைகள் என அங்குப் பல விஷயங்கள் உள்ள தால், உடலுறவின் திருப்தி மட்டுமே எல்லாவற்றை யும் சரி செய்துவிடாது. அதே போல் எல்லாம் சரியாக இருந்து உடலுறவு திருப்திகரமாக இல்லை என்றாலும் மற்றவற்றிலும் பிரச்சினை வரலாம். ஒன்றுடன் ஒன்று பிணைந்தே இருக்கும்.

3. மாதவிடாய் நிறுத்தத்திற்குப் பிறகு ஒரு பெண் ணிற்கு காம உணர்வுகள் தோன்றாது; கலவியில் ஈடு பாடு அற்றுப்போய்விடும்.

கண்டிப்பாக இது ஒரு கட்டுக்கதையே. உடலும் மனமும் ஆரோக்கியமாக உள்ளவரை, மாதவிடாயி னால், காம உணர்வுகள் அற்றுப்போவதில்லை. புரித லும், ஆரோக்கியமும் உள்ள இணையர் இருந்தால், எந்த வயதிலும் உணர்வுகள் ஜீவித்தே இருக்கும்.

4. ஒரு ஆணுக்கோ பெண்ணுக்கோ, இன்னொருவ ருடன் உறவு இருந்தால், நம்மீதான அன்பு காணாமல் போய் விட்டது என்று அர்த்தம்.

இது ஒரு கற்பனையே. புதிதாக ஒருவர் மீது அன்பு செலுத்துவதினாலோ, இல்லை ஒருவர் மீது ஈர்ப்பு ஏற்ப டுவதினாலோ நம்மேல் இருக்கும் அன்பு குறைந்து விட் டது என்று அர்த்தம் கொள்ள வேண்டியதில்லை. ஒருவர் மீது தான் அன்பு இருத்தல் வேண்டும் என்பதோ, ஈர்ப்பு

ஏற்படும் என்பதோ நாம் வகுத்த இலக்கணங்கள் மட்டுமே, இயற்கையின் கோட்பாடுகள் இல்லை.

5. ஒருவர் நம்மீது சொந்தம் கொண்டாடவில்லை எனில், நம்மீது ஆதிக்கம் செலுத்தவில்லையெனில், அவருக்கு நம்மீது அன்பில்லை என அர்த்தம்.

தவறான எண்ணம். உயிரற்ற பொருட்களைத்தான் சொந்தம் கொண்டாடமுடியும். உயிருள்ள மனிதர்களை தனி மனிதர்களாக அவருக்கான இடத்தை நாம் அபகரிக்காமல், சுதந்திரமாக இருக்க விடுதலே உண்மையான அன்பாகும்.

6. பெண்ணுடலின் சில பாகங்கள் வெளிப்படும் போது ஆணுக்குத் தூண்டுதலை விளைவிக்கும். பெண்ணிற்கு அப்படி ஆணின் உடல் பாகங்கள் வெளிப்படுகையில் தோன்றாது. பெண் பார்வையால் தூண்டப்பட மாட்டாள்.

தவறான கருத்து. எல்லாம் நம் மூளையில் தான் உள்ளது. இரு பாலாருக்கும் மூளை உண்டு தானே?

அத்தியாயம் - 28

# நம் கோட்பாடுகளின் வழி ஒரு பார்வை

பாலுறவு குறித்தும், அதன் மீதான கட்டுப்பாடுகளினால், சரிவரத் தெளிவுறாத தன்மைகளினால் அது இன் றடைந்துள்ள நிலை குறித்தும், என்னுடைய தாராள வாதப் பார்வையை இது வரை பகிர்ந்து கொண்டேன். இந்த அத்தியாயத்தில், நம் கோட்பாடுகளுடன் கூடிய பார்வையை முன்வைக்கிறேன்; திருமணம் என்ற ஒரு நிறுவனத்திற்குள் எப்படி ஓர் அழகான காமம்/காதல் பகிர்வு இருவரை இணைத்திருக்கும் என்பதைப் பற்றிய என் பார்வையைப் பகிர்கிறேன்.

திருமணமும், திருமண உறவுக்குட்பட்ட உடலுறவும், மிகவும் அழகான, நுட்பமாக ஆராய்ந்து உருவாக்கப் பட்ட கொள்கை. ஆனால், இடையில் எங்கோ, அவ்வி ருவரும் சேர்ந்து இத்தகைய அமைப்பின் கீழ் வாழ்வதற் கான அடிப்படையைத் தவற விட்டுவிட்டோம்.

நம் வாழ்க்கைப் பயணத்தில் பல நண்பர்களை நாம் சந்திக்கிறோம், அவர்களுள் சிலர் இறுதிவரை நட்புட னும் இருக்கிறார்கள். இது எப்படி நடக்கிறது? இது குறித்து எவரும் ஆழமாகச் சிந்தித்தது போல் இல்லை என்றே தெரிகிறது. நட்பு என்பது நம் விருப்பத் தின்பால் அமைந்த ஒன்று. எந்தவித உள்நோக்கமும் இன்றி, இருவர், ஒருவரால் ஒருவர், கவரப்படுகின்ற னர். நாம் இது குறித்து யோசிப்போமானால், இவ்விரு நண்பர்களுக்கிடையே அமைந்த ஒரு பொது இழையை உணரலாம். அந்தப்பொது இழை என்பது அவர்களுக் கிடையே உள்ள பொதுவான சிந்தனைகள், விருப்பங்

கள் ஆகியன. அவை மிகச்சிறியனவையாகவே இருக்கலாம். ஆயினும், சிறிய விருப்பங்களே, தொடர்ச்சியான சின்னச் சின்ன மகிழ்ச்சியான தருணங்களை நமக்குக் கொடுத்து, நம் வாழ்வை சுவாரசியமானதாக ஆக்குகின்றன. அது ஒரு விளையாட்டில் உள்ள ஆர்வமாக இருக்கலாம், அல்லது திரைப்படைத்திலோ, பயணத்திலோ கூட இருக்கலாம். இத்தகைய விருப்பங்கள், நண்பர்களுக்கிடையே ஒரு பாலத்தை ஏற்படுத்துகின்றன. அவர்கள் அது குறித்துக் கவனிக்காது இருக்கலாம் என்றாலும், அப்படித்தான் அவை ஏற்படுகின்றன.

நாம் பார்த்துப் பழகி வரும் நம் பெற்றோரையோ அல்லது உடன்பிறப்புகளையோ எடுத்துக்கொள்வோம். நாம் அனைவரும், ஒரே வீட்டில், ஒன்றாக வசித்து வந்தாலும், நாம் அனைவரும் ஒத்தவர்கள் இல்லை. நம்முடைய விருப்பங்கள் மற்றும் பார்வைகள் வெவ்வேறானவை. நமக்கு இடையே பல வேற்றுமைகள் உள்ளன. அதிர்ஷ்டவசமாக, நமது விருப்பங்கள் ஒத்திருந்தால், வீட்டிலேயே நட்பு வளரக் காரணமாக அதுவே அமைகிறது.

எப்போது ஒரு குழந்தை தனித்து இருக்கப் பழகிக் கொள்கிறதோ, அப்போதிலிருந்து, அதன் பெற்றோர்களிடம் கொண்ட நெருக்கம் குறையத் தொடங்குகிறது. ஒரே வீட்டில் இருந்த போதும், பெற்றோர்களும், பிள்ளைகளும் வெவ்வேறு விதமாக இருக்கின்றனர். வாழ்க்கை இவ்வாறாகத்தான் ஓடிக்கொண்டிருக்கிறது. குழந்தைகள் தங்கள் பெற்றொர்களுடன் நேரம் செலவு செய்வதை விட, தங்கள் நண்பர்களிடம் அதிக நேரம் செலவு செய்கின்றனர். பெற்றோர் இக்குழந்தைகளுக்கான ஒரு வசதியாக மட்டுமே அமைகின்றனர். இதற்காக நாம் யாரையும் குறைகூற இயலாது; இதுவே இயல்பான நிலை. வெவ்வேறான சிந்தனைகளையும் விருப்பங்களையும் கொண்ட பெற்றோரும், பிள்ளைக

ளும் அருகருகே எவ்வளவு நேரம் தான் செலவு செய்தல் இயலும்? அவர்களுக்கு இடையே அன்பு இருக்கலாம். ஆனாலும் அன்பு மட்டுமே வாழ்க்கையை சுவாரசியமா னதாக மாற்றிவிடாது.

பெற்றோர்களால் நடத்திவைக்கப்படும் திருமணம் ஆகட்டும் அல்லது, காதல் திருமணமாகட்டும், பொது வாக, ஜாதகப் பொருத்தம், சாதி மதம், உருவ அமைப்பு, சமுதாய நிலை, பண வசதி, குடும்பப் பாரம்பரியம், கல்வி போன்றவையே பார்க்கப்படுகின்றன. நம்மில் எத்தனை பேர், திருமணத்தின் போது, இருவருக்கிடையேயான பொதுவான விருப்பங்களைக் குறித்து யோசிக்கிறோம்? நாம் இதைச் செய்வதில்லை.

நாம் ஒருவரை ஒருவர் அறிந்துகொள்ளும் வரையில் எந்த ஓர் உறவும் சுவாரசியமாகத்தான் இருக்கும். ஒரு வரின் எண்ணங்கள், பழக்கங்கள், பார்வைகள் எனப் பலவும் புரிந்துவிட, இந்த சுவாரசியம் நாளைடைவில் தொய்ந்து விடுகிறது. திருமண உறவு மேலும் தொடர, சிலர், வாழ்க்கையைச் சுவாரசியமான வகையில் வைத் துக்கொள்ள விழைந்து, அதற்காக முனைகிறார்கள். அந்த முனைவுகளில், தான் நினைத்த வண்ணம் செய்யாது, விட்டுக்கொடுத்தலும் ஒருவகை. மற்றவரை மகிழ்விக்கவேண்டும் என்பதற்காகவே, ஒருவர் எவ்வ ளவு நாள்தான், தனக்குப் பிடிக்காத செயல்களைச் செய் துகொண்டிருப்பார்? இத்தகைய நிலையை அடுத்து, மாற்றமேதும் இல்லாத, மந்த நிலை அமைகிறது. நாம் அலுவலகம் செல்கிறோம்; நம் வீட்டைச் சுத்தமாக வைத்துக்கொள்கிறோம்; நம் பிள்ளைகளைப் பார்த்துக் கொள்கிறோம்; அவர்களுடைய எதிர்காலத்தைப் பற்றித் திட்டமிடுகிறோம். இத்தகைய செயல்முறையில், நாம் நம் வாழ்க்கையை இழக்கிறோம் இல்லையா?

இந்தச் சூழலை நினைத்துப்பாருங்கள். கணவனுக்கு ராக் இசை பிடிக்கும். மனைவிக்கோ, அமைதியான சூழ லில், மெல்லிசையை ரசிக்கப்பிடிக்கும். கணவன் ராக் இசை கேட்க ஆரம்பித்ததும், அந்த வீடே அதிரும். மனைவி என்ன செய்வாள்? தன் கணவன் வீட்டிலி ருந்து வெளியே செல்வானா என்று எதிர்பார்த்திருந்து, அவன் சென்றதும் மெல்லிசையை ரசிக்க விரும்புவாள். இல்லையெனில், இது எதிர்விதமாகவும் அமையலாம். ஆதிக்கம் அதிகம் செலுத்துபவர் தன் வாழ்வில் தனக் குவேண்டியதைப் பெற்று மகிழ்வார்; பணிந்துபோகின்ற ஒருவரே, தன் வாய்ப்புக்காக எதிர்பார்த்திருப்பார்.

தன்னுடைய வழக்கமான அலுவலிலிருந்து விடுபட்டு, ஓய்வு எடுத்துக்கொள்ள விரும்பும் கணவன் மனைவிய ருள், கணவர், வசதியான ஓர் அறையில் அமர்ந்து ஓய் வுகொள்வதையே விரும்புபவர் என்று கொள்ளுங்கள். அவருடைய மனைவிக்கோ, இயற்கையின் மத்தியில் உலாவர ஆசை. இத்தகைய நிலையில், கணவன் தனி யாகவும், மனைவி தனியாகவும் அவரவர் வழியில் ஓய்வு கொள்ளவேண்டிய நிலை ஏற்படுகிறது. இது மெல்ல மெல்ல அந்த உறவை உடைத்துவிடும்.

ஓய்வுகொள்ளும் வேளையில், கணவனும் மனைவியும் ஒருசேர அந்த ஓய்வு நாட்களை, இனிமையாகச் செல வழிக்க இயலாத சூழல் என்றால், அவர்களை இணைத் துவைக்கும், அந்தத் திருமண பந்தத்தின் பொருள்தான் என்ன? ஒரேவீட்டில் வசிப்பதன் காரணமாகவே, சமுதா யத்தின் பார்வையில் அவர்கள் இருவரும் வெற்றித் திரு மண வாழ்வில் ஈடுபட்டுள்ளனர் என்ற மாயை இருந்தா லும், தனிமனிதர்களாக, அவ்விருவருக்கும் அமைந்த, அந்த வாழ்க்கை நரகமே.

இருவருக்கு மத்தியில், குறைந்த பட்சம், பத்துக்கு ஆறு/ஏழு விருப்பங்களாவது பொதுவாக இருந்தால்,

அது அந்த உறவைச் சுவாரசியமாக வைத்துக்கொள் ளப் போதுமானது. அவர்கள் இணைந்து இருக்கும் போது, இத்தகைய பொது விருப்பங்களின்பால் நாட்டம் செலுத்தலாம். இருவரும் தத்தம் கரம்பற்றி, இயற்கை யின் ஊடே நடை பயிலலாம். ராக் இசைக்கு நடன மாடலாம். அவர்களுடைய இடத்தில் புதிதாகத் திறந் துள்ள உணவகத்தின் உணவுவகைகளை ருசிபார்க் கலாம். இருவருக்கும் விருப்பம் இல்லாத விருப்பங் களை, இவ்விருவரும் தனிமையில் உள்ள போது மேற் கொள்ளலாம். அது துணைவர் அண்மையில் இல்லாத அந்தக் குறையையும் போக்கும். இதுவே உண்மையான உறவு!; உண்மையான தாம்பத்தியம்! அடுத்தவர் எப் போது வெளியே செல்வார், நாம் எப்போது நமக்குப் பிடித்ததைச் செய்யலாம் என்று எப்போதும் காத்திருக் கும் நிலைமை, உறவுகளை வளர்க்காது.

உடலுறவில் இன்பம் என்பது, நாம் நம் துணைவரை எப்படி இன்புற வைக்கிறோம் என்பதில் இருக்கிறது. அப்படி இல்லையாயின், உடலுறவு என்னும் செயலின் பொதுவான எதிர்பார்ப்பாகக் கருதப்படும் மனவொற் றுமை நிறைவேறாமல் போய்விடும். உருளைக்கிழங்கு, இருவருக்குமே பிடித்ததாக இருந்தாலும், ஒருவருக்கு வறுத்ததும், மற்றவருக்கு வேக வைத்ததும் மட்டுமே பிடிக்கும் என்றால், அது பிரச்சனையை ஏற்படுத்தும். இதற்கான தீர்வு, சில நாட்களில், பொறித்த உருளை யும், சில நாட்களில் வேகவைத்த உருளையும் சமையல் செய்வதே ஆகும். தாம்பத்திய உறவும் அப்படிப்பட்டதே. தம்பதியினர், அடுத்தவருக்குப் பிடித்ததைக் கொடுத்து அனுபவிக்கும் முறையைப் பின்பற்ற வேண்டும். இவ்வ ழியில், பொதுவான எதிர்பார்ப்பான, உடலுறவு என்பது தொந்தரவாக இல்லாது, மாறி மாறி இன்பத்தை வழங் கும் விதமாக அமையும். இது உறவை மேலும் சுவாரசிய

மானதாக்கி, எல்லா நேரங்களிலும், அவ்விருவரிடையே இன்பத்தையும் நல்கும்.

உடலுறவு என்பது முக்கியமானதுதான் என்றாலும், அது அவ்விருவருக்கிடையே இணைப்பை ஏற்படுத்தும் என்றாலும், எவ்வளவு நேரம்தான் அதில் ஈடுபட்டுக் கொண்டே இருத்தல் இயலும்? பிற நேரங்களில் அவர் களுடைய உறவு எப்படி அமையும்? குழந்தைகளிடமும், தம் துணைவரிடமும், கிடைத்த காலத்தைத் தரமான வழியில் பயன்படுத்திக்கொள்ளுதல் மிக அவசியமாகி றது. ஏதோ வேண்டுமென்றே செய்வது போலில்லாது, இருவரும் இன்பமாகக் கழிக்கும் நேரமே, 'தரமான' நேரம் எனலாம். தனக்குப் பிடித்த ஒருவருடன், தனக்குப் பிடித்த செயலைச் செய்வதால், அவ்விருவரும், இயல் பான இன்பத்தைச் சுகிக்க இயலும்.

நாம் நம் துணைவரைத் தேர்ந்தெடுக்கும்போது, மேலே விவாதிக்கப்பட்ட நோக்கில் தான் தேர்ந்தெடுத்தல் வேண்டும் என்று நம்மில் எத்தனை பேர் உணர்ந்து செய்கிறோம்? சில நேரங்களில், திருமணத்துக்குப் பிற கும், புதிதான விருப்பங்களை நம் துணைவரிடமிருந்து நாம் பெறலாம். இவை ஏற்றுக்கொள்ளப்பட்ட விருப்பங் கள். நம்முடைய துணைவருக்கு மிகவும் விருப்பமானது எது என்று கவனித்து, அத்தகைய விருப்பத்தை நம தாக்கிக் கொள்வதும் ஒரு வகை. அது சில காலத்திற்குப் பிறகு உண்மையிலேயே நமது விருப்பமாகவும் ஆவ தற்கு வாய்ப்புகள் உள்ளன. உங்கள் எண்ணவோட்டத் தைச் சிறிது தளர்த்திப் பாருங்கள். நமக்கு அதுகுறித் துத் தெரியாது என்று அதை உங்கள் விருப்பமாக ஏற்கத் தயங்காதீர்கள்.

அதே நேரத்தில், உங்கள் துணைவருக்குப் பிடிக்கிறது என்ற ஒரே காரணத்திற்காக, அவருடன் ஒவ்வொரு முறையும் அதில் ஈடுபட ஆரம்பிக்காதீர்கள். அப்படி எத்

தனை நாள் தான் தொடரவியலும்? இறுதிவரையா? இன்னும் உள்ள காலத்தை எண்ணிப்பார்த்து, அந்த விருப்பத்தை நாமும் அடைவதற்காக, நம்மை நாம் தயாரித்தும் கொள்ளலாம். அப்படியும் அதில் விருப்பம் வரவில்லையானால் வெளிப்படையாகச் சொல்லி விட லாம். இத்தகைய முனைவுகள், இருவரிடையேயான உறவைப் பலப்படுத்தும்.

தாம்பத்திய உறவு என்பது, ஒருவருக்கு ஒருவர் ஆதர வாக இருப்பதோ, குடும்பத்தை நடத்துவதோ, அல்லது குழந்தைகளை வளர்த்தெடுப்பதோ மட்டுமே ஆகாது. கணவன், மனைவி இருவரிடையேயான பந்தமும் வளர் தல் முக்கியம். இருவரும் ஏதோ தியாகம் செய்து அந்த உறவைக் காப்பாற்ற வேண்டும் என்றில்லாமல், அவர் களுடைய பந்தம், இயல்பாக வளர்தல் அவசியம். இல் லையென்றால், திருமணம் என்ற அந்த முறை மட்டுமே காப்பாற்றப்படுமேயன்றி, அவர்களுக்கு இடையேயான பரஸ்பர உறவு காப்பாற்றப் படமாட்டாது.

பொதுவான அறிவியலின்படி, நமக்குக் கிடைத்துள்ளது ஒரே ஒரு வாழ்க்கை. இப்பிறப்பிலேயே நம் வாழ்க்கை யின் முழுமையை அடைதல் வேண்டும். இந்தப் பிறவி எனக்கு சாபம் என்றோ அடுத்த பிறவியிலாவது என் விருப்பப்படி வாழ்வு அமையவேண்டும் என எண்ணு வதோ பேதைமை. இன்று நாம் வாழ்ந்து கொண்டிருக் கும் நேரமே நமக்கான நேரம். அதைச் சீர் செய்து நாமும் மகிழ்வாக இருந்து, நம்மைச் சுற்றிலும் மகிழ்வான சூழ்நி லையை உருவாக்கி வாழ்தலே சிறந்த வாழ்வு!

அத்தியாயம் - 29

# அனுதினமும் பேணப்பட வேண்டியதா திருமண உறவு?

பாலியல் வறட்சியை விட அன்பின் வறட்சியே பல பிரச்சி னைகளுக்குக் காரணமாகிறது.

திருமணம் செய்வதே நமக்கான ஒருவர் வேண்டும், சுகத்தையும், துக்கத்தையும், வாழ்வையும் பகிர்ந்து கொள்ள என்பதற்காகத்தான்.

ஆனால் முதல் சில மாதங்களுக்குப் பிறகோ, இல்லை ஓரிரண்டு வருடங்களுக்குப் பிறகோ ஒருவர் மீதான சுவாரசியம் ஒருவருக்கு குறைந்து விடுகிறது. முதலில் இருக்கும் பிணைப்பு போகப்போக ஒரு கடமை என்றா கிவிடுகிறது.

இதற்குப் பல காரணங்கள் உண்டு. பொதுவாகக் குழந் தைகள் பிறந்தபின் நாட்டம் அவர்களின் மேல் செல் வதாக இருக்கலாம். அவன்தானே, அவள்தானே என்ற அலட்சியம் நம்மையறியாமல் உட்புகுந்து விடுவதும் காரணம். தானாகப் பல பொறுப்புகள் வந்து சேரும், நாமாகச் சில பொறுப்புகளை ஏற்படுத்திக் கொள் வோம். திருமணமாகி விட்டால் நாம் பெரிய மனிதர்கள் அல்லவா? பெரிய மனிதர்கள் பொறுப்புகளைச் சுமக்க வேண்டாமா? குழந்தைத்தனங்களை அப்புறப் படுத்த வேண்டாமா?

என் நண்பர் ஒருவர் திருமணமாகி 22 ஆண்டுகள் ஆன பின்னும் மனைவியின் மேல் மிகுந்த காதலுடன் இருக்

கிறார். அவர் மனைவியைப் பார்த்தால், அவர் கணவ னைப் பார்க்கும் பார்வையிலே இன்னும் புதுமணத் தம் பதிகள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளும் போது ஒரு காதல் மினுமினுக்குமே கண்களில், அதை இன்றும் காணலாம்.

நண்பரிடம் ஒரு நாள் கேட்டேன் இதெப்படி சாத்தியமா கிறதென! அவர் கூறியது, “இங்க பாருங்க லதா, கல் யாணம்ங்கிறது ஒரு பிசினஸ் மாதிரி. இப்போ சரவணா ஸ்டோர்ஸ், இல்ல ரிலையன்ஸ் எதாவது உதாரணத் துக்கு எடுத்துப்போம். பிசினஸ் நல்லா வளர்ந்தாச்சு, பேரு வாங்கியாச்சு, இது தெரியாத மனுஷங்களே இல்ல. ஆனா ஏன் இன்னும் விளம்பரம் பண்ணிட்டேயிருக் காங்க? அவங்க உசந்துட்ட இந்த நிலையில் அவங்க நிலைச்சு நிக்கனும்னா, மக்கள் அவங்கள மறக்காம பாத்துக்கனும், இல்லனா கொஞ்ச நாள்ல மறந்துடு வாங்க, வியாபாரம் சரிஞ்சிடும்.

அதே மாதிரி தான் கல்யாணமும். ஆரம்பத்துல ஒருத் தர ஒருத்தர் புரியற வரைக்கும் அவங்களுக்கு என்ன பிடிக்கும்னு பாத்து பாத்து செய்வோம். அவங்கள சந் தோஷத்தப் படுத்த மட்டுமே நாம பிறவி எடுத்த மாதிரி பாத்துப்போம். ஆனா, ஒருத்தர ஒருத்தர் நல்லா புரிஞ் சப்புறம், இனி அவங்கதானே நம்மள புரிஞ்சிப்பாங்கனு தோண ஆரம்பிச்சிடும். கொஞ்சம் கொஞ்சமா அவங்க மேல இருக்கிற கவனம் போய்டும். பல பொறுப்புக ளுக்கு நடுவுல இது சில வருஷங்கள் கடந்துடும். ஆனா திடீர் திடீர்னு என்னைக்காவது தோணும் நமக்குள்ள அந்த அன்னியோன்னியம், சுவாரசியம் போயிடுச்சுனு. ஆனா அப்பவும் அத பத்தி பேசமாட்டோம். கொஞ்சம் கொஞ்சமா பிளவு அதிகமாகிட்டே போகும். அதுக்கப்பு றம் ஒரு கடமையாதான் எல்லாம் நடக்குமே தவிர காதல் தொலைஞ்சு போயிருக்கும்.

நாங்க அது ஆகாம பாத்துக்குறோம். திடீர்னு எதிர்பாக் காத நேரம் அவங்களுக்கு பிடிச்சது எதுவும் செய்வேன். பசங்க கூட எங்கயும் வெளில போறது தவிர, சர்ப்ரைசா, எங்காயவது டிக்கட் புக் பண்ணி, கிளம்புனு சொல்வேன். பசங்கள அம்மா வீட்ல விட்டுட்டு அவங்கள மட்டும் கூட் டிட்டு போவேன்.

அம்மா எங்க வீட்டுக்கு வர்ற நேரங்கள்ல பசங்கள அம்மாவோட படுக்க சொல்லிட்டு நாங்க புதுசு புதுசா எதாவது ட்ரை பண்ணுவோம். விளையாட்டுத்தனமா எதுவும் செஞ்சிட்டு இருப்போம். இந்த மாதிரி நிறைய இருக்கு. லீவ் நாள்ல சமச்சு போடறது, எல்லோரும் சேர்ந்து தோட்ட வேலை செய்யறதுன்னு. கல்யாண வாழ்க்கை நல்லாருக்கனும்னா, அதுக்கான முயற்சிய எடுத்துட்டேயிருக்கனும். நம்ம ஆள் தானேனு அசட் டையா விட்டா, அது அர்த்தமில்லாம போய்டும்"

பிரம்மிப்பாக கேட்டுக் கொண்டேன். ஆனால் அவரின் ஒவ்வொரு வார்த்தையும் உண்மை எனப் புரிந்தது.

## அத்தியாயம் - 30

# காமத்திற்கு வயதென்ன?

மாதவிடாய் நிற்பது இனிக் குழந்தை பெறுவது வேண் டாம் என இயற்கையே தடுக்கும் ஒரு நிகழ்வேயன்றி, பெண்ணிற்குக் காம உணர்வுகள் அற்றுப் போகும் நேர மல்ல.

இன்று வரை படித்தவர்கள் படிக்காதவர்கள் என்ற பாகு பாடெல்லாம் இல்லாமல் இந்த மூடத்தனத்தை நம்பி, நம் பெண்களையும் நம்ப வைத்திருக்கிறோம்.

ஒரு பெண்ணும் இந்த உணர்வைக் குறிப்பிட்ட காலத் திற்கு மேல் கொள்வதே ஏதோ கொலை பாதகமென்பது போல் உணரத்தலைப்பட்டுத் தனக்கு மட்டும் தான் இப் படியோ, தான் அலைவதாக நினைப்பானோ கணவன் என்ற ஒரு தயக்கத்திலேயே காலம் தள்ளிவிடுகிறாள்.

கற்பு என்ற போர்வையைப் போர்த்தி ஒரு பெண்ணின் இயற்கை உணர்வுகளை அடக்கி வைக்க கற்றுக்கொ டுத்தது போதாதென்று, வயதைக் காட்டி அவள் உணர் வுகளை மரத்துப் போகச் செய்யும் முயற்சியே இது. இதில் பெரும் வெற்றி கண்டதென்னவோ உண்மை!

மெனோபாஸிற்கு பிறகு பெண்களுக்கு கலவியில் நாட் டம் போய்விடுகிறது என்ற கருத்து பொதுவாக நம் அனைவரிடமும் இருக்கிறது, அதுவும் நம் ஆண்களிடம் இந்த கருத்து மிகவும் அதிக அளவிலேயே இருக்கிறது.

உண்மையச் சொன்னால், இந்த வயதிற்கு மேலே தான் அந்த உணர்வுகளே அதிகமாகக் கொள்கிறாள் ஒரு பெண் (இதை ஒரு மனவியல் நிபுணர் சொல்லக் கேட் டேன்). பிள்ளைகள் வளர்ப்பின் பொறுப்பு, மாதவிடாய் உபாதை, கருப்பையில் பிள்ளை தங்கிவிடும் எனப்

பல பிரச்சினைகளிலிருந்து விடுபட்டுத் தன்னைப் பற்றி நினைக்கும் ஒரு காலகட்டத்தில் நுழைவது காரணமாக இருக்கலாம். (இது என் கணிப்பு).

ஒரு பெண்ணிற்கு உடல்ரீதியாக மெனோபாஸ் என்பது அது வருவதற்குச் சில மாதங்களோ, வருடங்களுக்கு முன்பிருந்தோ சில மாற்றங்களைக் கொண்டு வருகி றது. இது திடீர் மாற்றமல்ல. அவள் உணர்வுகளையும், தேவைகளையும் மதித்து வாழ்ந்திருந்தால் இந்த உடல் ரீதியான மாற்றங்களால் அவள் மனரீதியாகவும், அதன் மூலம் ஏற்படும் செயல்ரீதியாகவும் மாற்றங்கள் ஏற்ப டத் தொடங்குவதை, ஒரு கணவனாலோ, ஒரு காதல னாலோ சுலபமாகக் கண்டுபிடிக்க முடியும்.

ஆனால் நம் சமூகத்தில் அந்த அளவு இவற்றைப் பற்றிய புரிதல்களும் இல்லை. புரிய ஆர்வமும் இல்லா ஆண் களே அதிகம்.

மெனோபாசிற்குப் பிறகு ஏற்படும் உடல், மனரீதியான மாற்றங்களால் அவள் தூண்டப்பட சிறிது நேரம் அதி கமாகலாம், அவள் ஈரத்தன்மை அடைய தாமதமாக லாம். ஆனால் ஒரு புரிதல் உள்ள ஆண் அவள் மன ரீதியாக மாற்றம் கொள்ளும் போதே, அவள் நிலையை புரிந்து, அவளுக்கான அன்பையும், அரவணைப்பையும் அளித்து, அவள் எப்படி உணர்கிறாள் என்பதை மனம் விட்டுப் பேச வைத்து, இது இயற்கையான மாற்றம் தான் இதனால் நமக்குள் எந்த நெருக்கமும், புரிதலும் குறை யாது என்றும், உடலால் அவள் மெனோபாசை தான் அனுபவிக்க முடியாவிட்டாலும் மனதால் தானும் அதை அனுபவிக்க முற்பட்டு, அவளுக்கு இந்த நேரத்தில் உறுதுணையாக நிற்கும் பட்சத்தில் கலவி சுகம் என் பதை இருவருமே அழகாக அனுபவிக்கலாம். இன்னும் கூறப் போனால், வாழ்வின் பல பொறுப்புகளை முடித் துவிட்ட இந்தக் காலகட்டத்தில் தன்னால் இதற்கெல்

லாம் பெரிதாக நேரம் ஒதுக்கி அனுபவிக்க இயலாத பெண்களுக்கு இந்த நேரம் விட்டுப் போன சுகங்களை நிம்மதியாக அனுபவிக்க தரப்படும் காலம் என்று கூடக் கொள்ளலாம்.

ஆனால் நம் சமூக ஆண்களுக்கு அவளின் அந்த நேரத்து தடுமாற்றங்களையோ உணர்வுகளையோ, புரிந்து கொள்ளவோ, உடன் நிற்கவோ திராணியில்லை. அதனால் ஒட்டு மொத்தமாக மெனோபாசிற்குப் பிறகு ஒரு பெண்ணிற்கு உடல் உறவில் விருப்பமே இருக்காது எனக் காலங்காலமாகப் போதிக்கப்ட்டு, அந்த மூளைச் சலவையால் பெண்களும் அதை நம்பத் தொடங்கிவிட் டனர் என்பதே பரிதாபத்திற்குரிய விஷயம்.

உடல் ஆரோக்கியமும், மன ஆரோக்கியமும் நன்றாக இருக்கும் பெண்களுக்கு இந்த மாதிரியான புரிதல்கள் கூடத் தேவைப்படாமலே அவள் உடல் உறவில் நாட் டமுடன்தான் இருப்பாள். ஆனால் பல பெண்கள் இந்த மூளைச்சலவையால் தங்களை அப்படியே எண்ணத் தலைப்பட்டு விடுகின்றனர்.

இப்படிச் சிந்தித்து பாருங்களேன் ஆண்களே! மெனோ பாஸ் என்ற ஒன்று வெளியில் தெரியாவிட்டாலும், (பரு வமடைவது இரு பாலாருக்கும் உண்டுதானே? ஆனால் ரத்தப் போக்கு தொடக்கம் மூலம் பெண் பருவமடை வதை கணிக்க முடிகிறது, ஆண் பருவமடைவதோ அவன் உடற் தேவைகள் அவனுக்கு ஆரம்பிக்கையில். அது அவனுக்கு மட்டுமே தெரியும். ஆதலால் அது ஒரு பேசுபொருளாவதில்லை. அதனால் தான் பல ஆண் கள் 10 வயதிலிருந்து 13/14 வயதிற்குள் பொதுவாக சுய இன்பத்தில் ஈடுபடத் தொடங்குகிறார்கள்) ஆணிற்கும் ஒரு குறிப்பிட்ட வயதிற்கு பின் உடல்ரீதியான மாற்றங்கள் வரத்தானே செய்கிறது? எத்தனை முயன்றாலும் உச்சம் அடைய மிகவும் தாமதமாவது, இல்லை சட்டென ஆரம்

பத்திலேயே எதிர்பாராமல் அடைந்து விடுவது, சமயத் தில் உச்சமே அடையமுடியாமல் போவது என்ற பல பிரச்னைகள் சிறிதுசிறிதாக வெளிப்படத்தானே செய்கி றது? ஒரு வேளை உங்களின் அந்த பிரச்னையை எதிர் கொள்ள இயலாமல் கூட மெனோபாஸ் எய்தியும் கல வியில் ஈடுபாடு உள்ள பெண், ஒதுங்கி வாழலாம் இல் லையா? ஆனால் அவளுக்கு விருப்பம் போய்விட்டதாக நீங்கள் ஒரு மாயையில் கூட இருக்கலாம் தானே?

ஓர் ஆணிற்குப் பாடையில் போகும் வரை காமம் தேவைப்படுபகிறதென்பதை மார்தட்டிப் பெருமையாக சொல்லிக் கொள்ளும் மூடர் சமூகம் தானே நம் சமூ கம்? இயற்கை யாருக்கும் பாகுபாடு பார்ப்பதில்லை. ஆணிற்கு இருக்கும் தேவை, பெண்ணிற்கும் உண்டு. அவரவர் உடல் ஆரோக்கியம் மன ஆரோக்கியத்தைப் பொருத்தே அது பாடை வரையிலுமா அதற்கு முன்பாக வேவா என்பதை நிர்ணயிக்கிறது.

ஆனால் ஆணிற்கு மட்டும் சாகும் வரை இருக்கும் என் றும், பெண்ணிற்கு மெனோபாசுடன் முடிந்துவிடும் என் றும் மூளைச் சலவை செய்யப்பட்டிருப்பதால், எதுவுமே முடியாத நிலையிலும் ஓர் ஆண் அலைந்து கொண்டே இருக்கிறான். (தனக்குத்தானே அந்தக் கூற்றை நிரூபித் துக்
கொள்வதற்கான முயற்சியாக இருக்கலாம்).

எங்கே தன்னால் முடியாத காலத்தில் தன்னவள் தன் தேவைக்கு வேறொருவனை நாடிவிடுவாளோ என்ற அச்சத்தில் அதைத் தடுக்கவே அவளுக்கு அந்தத் தேவை இல்லாமல் போகிறது என்ற மூளைச் சலவை யைத் தனக்கு சாதகமாக ஆக்கிவைத்திருக்கிறது இந்த ஆணாதிக்க சமூகம். இதனால் ஆதிக்கமே இல்லாத ஆண்கள் கூட இதை அப்படியே சிரமேற்கொண்டு வாழ் கிறார்கள்.

இன்னும் ஒரு படி மேலே போய்ப் பெண்ணிற்கு அது அவசியமேயில்லை, அவள் தேவை, அவள் கவனமெல் லாம் அன்பும், குடும்பமும் மட்டுமே எனவும், பிள்ளைகள் பெற்றவுடன் அவளுக்குக் காம உணர்வே அற்றுவிடுவ தாகவும் சொல்லித்திரியும் அற்ப ஜென்மங்களும் இங்கே உள்ளன. அவள் தேவையை முடக்கிப் போட்டுவிட்டு, (இல்லை தன் இயலாமையை உணரா ஜென்மமாக கூட இருக்கலாம்), தான் வெளியில் அலைவதற்கான கார ணத்தை நியாயப்படுத்துவதற்கான உத்தியாகவும் இது பயன்படுத்தப் படுகிறது.

மெனோபாஸ் என்பது இருவருக்கும் உண்டு, வரும் நேரம், காலம், வெளிப்பாடு வித்தியாசமாக இருக்க லாம். இருவரும் இதை உணர்ந்து, புரிந்து, உறுதுணை யாய் நின்றால் எல்லாம் சாத்தியமே, இன்னும் உறவில் மெருகு கூடும்.

இதை இப்படி நம்ப வைத்ததில் தனக்குத் தானே கொள்ளி வைத்துக் கொண்டாகிவிட்டனர் ஆண்கள். அக்காலத்தில் எந்த வயதிலும் பெண் உடல் உறவிற்கு உகந்தவளில்லை என்று நினைக்கும் வேளையில் சிறிய வயது பெண்ணைத் தேடி வைத்துக் கொள்வது பொது வாகவே அங்கீகரிக்கப்பட்ட விஷயமாக இருந்தது. அத னால் அக்கால ஆண்களுக்கு நட்டமில்லை. ஆனால் இன்று? அந்த மூளைச் சலவை மட்டும் இன்னும் இருக்க பலரறிய இக்காரியங்களை செய்யவியலாமல் அவரும் காய்ந்து போய்த்தான் கிடக்கிறார். வினை விதைத்தால் வேறென்ன அறுக்க இயலும்?

இயற்கையில் ஆணும் பெண்ணும் இனவிருத்திக்காக உடலுறுப்பில் மாற்றம் கொண்டவர்களேயன்றி, மற்ற எல்லா வேறுபாடுகளும் சுயநலமிகளால் உருவாக்கப் பட்ட கட்டுக் கதைகளே!

இந்த மூளைச்சலவையில் அவதிப்படுவது பெண் மட்டு மல்ல, தானும் சேர்ந்துதான் என்பதை ஆண்கள் உணர வேண்டும்.

அத்தியாயம் - 31

# குழந்தைகள் மீதான பாலியல் வன்முறையில் பெற்றோர்களின் பங்கு

ஒரு நாள் கூட நகர்வதில்லை எங்காவது ஒரு பாலி யல் வன்முறையாவது நடந்த செய்தி கண்ணில் படா மலோ, காதில் கேட்காமலோ! இதில் கொடுமையிலும் கொடுமை குழந்தைகள் மீதான பாலியல் வன்முறை கள். கேட்டவுடன் கொதித்தெழுகிறோம் அனைவரும். கடுமையான தண்டனைகள் இல்லை, அதனால் தான் இப்படி என அங்கலாய்க்கிறோம். உடனடித் தீர்வாகக் கடுமையான தண்டைகள் சரியே என்றாலும், இப்படிப் பட்ட வக்கிர செயல்கள் நடப்பதற்கு யார் முக்கிய பொறுப்பு? நாம் தான், செய்தி கேட்டதும் கொதித் தெழும் நாம் தான், தனி மனிதர்களாகவும், மொத்தச் சமூகமாகவும் காரணம். இங்குக் காம உணர்வுகளுக் கான சரியான வடிகால்களுமில்லை, இதற்கான புரித லும் இல்லை, அதைப் பற்றி யாரும் கண்டு கொள்வ துமில்லை. ஆணை ஆதிக்கவாதியாகவும், பெண்ணை இரண்டாம் தர பிரஜையாகவும் வளர்ப்பது ஒவ்வொரு பெற்றோரின் தவறே! காமம் பற்றி 12/13 வயதில் புரி தலை ஏற்படுத்தாததும் பெற்றோர்களின் தவறே! குழந் தைகளின் மீதான பாலியல் தொந்தரவு பொதுவாக நம் குடும்பத்திற்கு நெருக்கமான மனிதர்களால் தான் அதி கமாக நடப்பதாக ஆய்வுகள் சொல்கின்றன. அப்படியெ னில் இப்படி நடப்பதற்கான சூழ்நிலைகளை உருவாக் குவதும் பெற்றோரின் தவறே!

ஆம் குடும்ப வெளியைத் தாண்டி ஒரு குழந்தை விளை யாடிக் கொண்டிருக்கும் போதோ, இல்லை ஒரு பெண் தனியாக வெளியில் சென்றிருக்கும் போதோ, எதிர்பா ராத வேளைகளில் இப்படிப் பட்ட வன்முறைகள் நடப்ப துண்டுதான். ஆனால் அவை விபத்துகள் எனக் கொள் ளலாம். ஏனெனில் சமுதாய மாற்றங்கள் ஒவ்வொரு தனிமனிதரும் மாறமாறத்தான் ஏற்படும். ஒட்டுமொத்த சமுதாயமும் ஒரே நாளில் சட்டென மாறிவிடாது.

ஆனால் பெற்றோராக நாம் விபத்துகளைத் தவிர்க்க முடியாவிட்டாலும், குழந்தைகளுக்கு நமக்கு அருகி லேயே
நல்ல மனிதர்களாக வேடம் போட்டுத் திரியும் மனிதர் களிடமிருந்து பாதிப்புகள் ஏற்படாமல் தடுக்க வேண்டிய கடமையுள்ளது. பதின்ம வயது குழந்தைகளை ஏமாற் றுக்காரர்களிடமிருந்து தள்ளி வைக்கும் பொறுப்பும் நமக்குள்ளது.

காலம் கெட்டுவிட்டது, என் குழந்தைகளை, என் பதின்ம வயது மகளை எப்படி பாதுகாப்பேன் என புலம் புவது தீர்வாகாது. இந்தச் சமூகத்தில் தவறான பாதிப்பு கள் ஏற்படாமல் அவர்கள் வாழ்வதற்கான திறமையை யும், சூழ்நிலையையும் நம்மை விட்டால் வேறு யார் ஏற்ப டுத்திக் கொடுக்க இயலும். சிந்திப்போமா?

உதாரணத்திற்கு ஒரு வயதில் நமக்கொரு குழந்தை இருக்கிறது எனக் கொள்வோம். நமக்கு நெருங்கிய
நண்பரோ, உறவினரோ வீட்டிற்கு வருகிறார். குழந் தையைத் தூக்குகிறார். அது அத்தனை நேரம் நம் முடன் இருந்திருக்கலாம், இல்லை அது பாட்டுக்கு அமர்ந்தோ, தவழ்ந்தோ விளையாடிக் கொண்டிருந்தி ருக்கலாம். அவர் அதைத் தூக்கியதும் அது அழத் தொடங்கலாம். நம்மில் எத்தனை பேர் வந்தவரிடம் “அது அழுகிறது, அதைத் தூக்காதீர்கள்” என சொல்

வோம்? மாறாக நாம் சொல்வது பெரும்பாலும் குழந் தையிடம் தான், "அழக்கூடாதுமா, நம்ம மாமாடா, நம்ம அங்கிள்டா, தாத்தாடா" என எதையாவது அதனி டம் சொல்லிச் சமாதானப் படுத்த முயல்வோமேயன்றி, அதற்குப் பிடிக்காத விஷயத்தை திணிக்கிறோமே அத னால் அதன் உணர்வுகள் எப்படிப் பாதிக்கப் படும் என்ற அடிப்படைச் சிந்தனை கூட நமக்கெல்லாம் இல்லை!

குழந்தைகள் ஓரளவு வளர்ந்து நம் செயற்கை முறை வாழ்க்கையைக் கற்றுக் கொள்ளும் வரை, தன் உள் ளுணர்வை கொண்டு வாழ்பவை! பேசத்தெரியாமல் வாழும் அந்த நாட்களில் தன் உள்ளுணர்வால் மட்டுமே, தனக்கு வேண்டியதையோ, வேண்டாததையோ முடிவு செய்கிறது. நம் கையில் இருக்கையில் பாதுகாப்பாக, மகிழ்ச்சியாக இருக்கும் குழந்தை வேறொருவர் தூக்க அழுகிறதென்றால் அவரிடம் அதற்கு ஏதோ ஓர் ஒவ் வாமை இருப்பதாலேயே அழுகிறது. அந்த உணர்வை நாம் அலட்சியம் செய்து அது அழுவதை சட்டை செய் யாமல், அவரிடம் திணிக்கப்படும் பொழுதில் அந்தக் குழந்தை நம் மீது வைத்திருக்கும் நம்பிக்கையை நாம் உடைக்கிறோம். நாம் அழுது பிடிக்கவில்லை என காட் டினால், அவரிடமிருந்து தன்னை விடுவித்து விடுவார் அம்மா (அப்பா யாரோ ஒருவர் அதற்கு நெருக்கமான வர்) என்ற அதன் அசையா நம்பிக்கை தூள்தூளாகிறது. இதுவே நாளைடைவில் அது வளர, வளர அதற்கு எதிர் மறையான ஒரு புரிதலை ஏற்படுத்துகிறது. அதாவது தன்னைவிடத் தன் பெற்றோருக்கு வீட்டிற்கு வந்திருக் கும் நபர் முக்கியம் எனத் தோன்ற ஆரம்பிக்கிறது. அந்த நம்பிக்கை குறைவாலேயே, 90% குழந்தைகள் தனக்கு நடக்கும் பாலியல் தொல்லைகளை, ஒவ்வாத செயல் களைத் தன் பெற்றோர்களிடம் வந்து சொல்வதில்லை! ஒரு குழந்தை சாதாரணமாக விளையாடும் போது அடி

பட்டால் பெற்றோரிடம் அழுது கொண்டு ஓடிவருவது தானே இயற்கை? ஏன் பாலியல் தொந்திரவுகள் மட்டும் பெற்றோரிடம் சொல்லப் படுவதில்லை என யாராவது சிந்திக்கிறோமா? குழந்தையின் சொல்லை நாம் நம்ப மாட்டோம் என அவற்றிற்குத் தோன்றிவிடுவதே கார ணம்.

இந்த குட் டச், பேட் டச் (good touch, bad touch) எல்லாம் சொல்லித்தர வேண்டிய அவசியமேயில்லை. இந்த நல்ல தொடுதல் கெட்ட தொடுதல் என்பது குழந்தைகள் மனதில் எப்பொழுதும் ஓர் ஆய்வு மனப்பான்மையை, அதனால் ஏற்படும் குழப்பங்களை, ஒரு தேவையில்லா அச்சத்தை மட்டுமே உருவாக்கி கொண்டிருக்கும். குழந்தைகள் இவற்றை உணரும் தன்மையுடன் தான் இருக்கின்றன. சில மாமாக்கள், தாத்தாக்கள் (உறவு முறையில் மட்டும் என்று சொல்ல வில்லை. எதோ ஒரு விதத்தில் கூப்பிடும் முறை) பிடித்து இழுக்கும் போது அவர் பிடியில் சிக்க விருப்பமில்லா மல் நெளியும் குழந்தைகளை நாமெல்லாம் கண்டதில் லையா? தெரிந்தும் “ஆசையாதானே கூப்பிடறார், போ, போய் பேசு” என சொல்லும் பெற்றோரையும் நான் கண்டிருக்கிறேன். நாம் அந்தப் பெரியவரைத் தவறாகத் தான் நினைக்க வேண்டும் என்ற அவசியமில்லை. ஏன், அவர் நல்லவராகவே கூட இருந்துவிட்டுப் போகட்டும். ஆனால் எதோ அந்தக்
குழந்தைக்கு அவரிடம் செல்வது சௌகரியமாக இல்லை. ஏன் வற்புறுத்தி அனுப்பவது? யாரின் உணர் வுகள் நமக்கு முக்கியம்? நம்மை நம்பி, நமக்குப் பிறந்து, நம்மை அண்டியிருக்கும் நம் குழந்தையா அல்லது அவ் வப்போது குசலம் விசாரிக்க வரும் அந்தப் பெரியவரா? நாம் தான் சிந்திக்க வேண்டும். முளையிலேயே என் குழந்தைக்குப் பிடிக்கவில்லையெனில் வற்புறுத்தாதீர்

கள் என நாம் சொல்லிவிட்டால், மேலும் மேலும் அந்தக் குழந்தை யாருக்கும் தெரியாமல் படும் அவஸ்தையை நாம் தவிர்க்கலாம். அது தான் நம் கடமை, அன்பு எல்லாம்.

இப்பொழுது பதின்ம வயதில் இருக்கும் குழந்தைகளைப் பற்றிப் பேசுவோம்.

தொப்புள் கொடி அறுபட்டதிலிருந்து நம் குழந்தைகள் தனி மனிதர்கள் என்பதை உணர வேண்டும். பெற்றோர் என்ற ஒரே காரணத்தினால் நாம் கையில் எப்பொழுதும் ஒரு தடியை வைத்துக் கொண்டு சுற்றுவது சரியில்லை. அவர்களை நம்முடன் வாழும் இன்னொரு தனி மனிதராக நட்புடன் வளர்க்கக் கற்க வேண்டும். நாம் தான் அவர்களின் நெருக்கமான தோழியாக/தோழனாக வேண்டும். இது மட்டுமே அவர்கள் சரியான பாதையில் பயணிக்க வைக்கும் யுக்தியாகும்.

12/13 வயதினில் காம உணர்வுகள் உடல் மாற்றத்தில் இயற்கையாக ஏற்படும். இயற்கைக்கு மாறான எந்த சக்தியையும் நம்மால் உருவாக்க இயலாது. அதை நினைவில் கொண்டு அந்த வயதிலிருந்தே காமம் பற்றிய தான விழிப்புணர்வை அவர்களுக்கு ஏற்படுத்துவது நம் தலையாய கடமையாகும். அது பேசக் கூடாத விஷயமில்லை. நிறைய புரிதல் வரவேண்டிய விஷயம். அதை நாமே சாதாரண பொருளாக அவர்களிடம் கதைக்க ஆரம்பித்து விட்டால் அவர்களுக்கும் நம்மிடம் அது பற்றி விவாதிக்க, குழப்பங்களை தீர்த்துக்கொள்ள வசதியாக இருக்கும். இன்றிருக்கும் உலகில் நம்மால் எதையும் அவர்களிடமிருந்து மறைத்து வைக்க இயலாது. மாறாக நாம் பேசாமல் இருந்தால், அவர்கள் தவறான கண்ணோட்டத்தில் அவற்றைக் கற்றுக் கொள்ளும் அபாயமே அதிகம்.

ஒரு நண்பராக தினம் நம் அலுவலகத்திலோ, இல்லை அன்றாட வாழ்வில் நடப்பதையோ அவர்களிடம் பகி ரும் பழக்கத்தையும், அப்படியே அவர்கள் வாழ்வில் நடப்பதை அன்றாடம் நம்மிடம் பகிரும் வழக்கத்தைக் கொண்டுவரலாம். இந்த வயதில் காமத்தில் நாட்டம் கொண்டால் எந்த மாதிரி பிரச்சினைகள் ஏற்படும் என் பதை அறிவுரையாக இல்லாமல் உதாரணங்களாகக் காட்டலாம்.

சிறு வயதிலிருந்து இருபாலாரும் சேர்ந்து படிக்கும் பள் ளியில் (தனித்தனியாக அமர வைக்கும் பள்ளிகளை தவிர்க்கவும்) படிக்க வைப்பதால் இயற்கையான சிநேக உணர்வுடன் மற்ற பாலாருடன் பழகும் தன்மையை ஏற் படுத்தலாம். கிடைக்காத, நெருங்க முடியாத விஷயங்க ளில் தான் தேவையில்லாத ஈர்ப்புகள் ஏற்படும். சேர்ந்து படித்து, சேர்ந்து விளையாடுகையில் மற்ற பாலார் தனி யாகப் பெரிதாக உடலால் ஈர்க்கப்பட மாட்டார்கள்.

ஒரு தோழியாக/ தோழனாக அப்படியே யார் மேலும் எது வும் ஈர்ப்பிருந்தாலும், அதை எப்படிக் கையாள்வது இரு வருக்கும் பாதிப்பில்லாமல் என புரியவைக்கலாம். இப் படி வளர்க்கப்படும் பிள்ளைகள் யாருடனாவது வேறு எண்ணத்துடன் பழக ஆரம்பிக்கும் பொழுதே நம்மிடம் அதைப் பற்றிக் கூறிவிடவோ, இல்லை ஆலோசனை பெறவோ தயங்க மாட்டார்கள்.

ஆண் குழந்தைகளுக்கு, பெண்களை மதித்து வாழக் கற்றுக் கொடுக்க வேண்டும். இதுவும் நம் குடும்பத்தி லிருந்து தான் ஆரம்பிக்க வேண்டும். தன் அம்மாவை யும், மனைவியையும், சகோதரிகளையும், மகளையும் மதித்து வாழும் ஓர் அப்பா இருக்கும் வீட்டில் எந்த ஓர் ஆண்பிள்ளையும் இன்னொரு பெண்ணை மதிக்காமல் இருக்க மாட்டான்.

தன் சுயமரியாதையை எந்தச் சூழ்நிலையிலும் இழக்கத் தயாரில்லாத ஓர் அம்மா இருக்கும் வீட்டிலும் ஒரு ஆண் பிள்ளை பெண்களை மதித்தே வளர்வான்.

மொத்தத்தில் இந்தச் சமூகம் ஒரே நாளில் ஒட்டு மொத்தமாக மாறாது. ஒவ்வொரு தனிமனிதரும் மாற்றத் திற்கான பாதையில் அடி எடுத்து வைக்கத் தொடங்கி னாலே நாளைய தலைமுறை இங்கு நிம்மதியாக வாழ இயலும்.

உலகம் புரியும் வரையில் பெற்றோர்கள் தங்கள் குழந் தையை விட வேறு யாரும் தங்களுக்கு முக்கியமில்லை என்பதைச் சொற்களாலும், செயலாலும் வாழ்ந்து காட் டினால், அவர்களுக்கு ஏற்படும் முதல் பாதிப்பிலேயே நாம் கண்டு பிடித்து, முளையிலேயே கிள்ளிவிடலாம்.

எவ்வளவு வேலைப் பளு இருந்தாலும், அவர்கள் முகத் திலோ, செயலிலோ எதாவது மாற்றங்கள் ஏற்பட்டால் அதை நாம் உணரும் அளவிற்கு அக்கறை செலுத் துவோம். எதுவாக இருந்தாலும் மென்மையாக, தவறி ழைப்பது மனித சுபாவம் தான், கொலைக் குற்றமல்ல என்பதை நாமும் உணர்ந்து, அவர்களுக்கும் உணர்த் துவோம். அவர்களுடன் கைகோர்த்து அவர்கள் பிரச்ச னைகளை சந்தித்து தீர்வு காண்போம்.

பள்ளிப் பருவம் முடிவதற்குள் அவர்கள் வாழ்வை அவர் கள் சுயசிந்தனையுடன், சுயசார்பாக வாழக் கற்றுக் கொடுத்துவிட்டால், அவர்களும் தன்னம்பிக்கையுடன் வாழ்வார்கள், நாமும் ஓரளவு நிம்மதியாக சுதந்திரமாக நம் வாழ்வை வாழலாம்.

நம் நம்பிக்கைக்கு தக்க அவர்கள் வாழவேண்டும் என் றால், அவர்களுக்கு நாம் நம்பிக்கைக்குகந்தவர்களாக வாழ வேண்டும் முதலில் என்ற உண்மையை புரிந்து செயல் படுவோம்.

நீங்கள் மதிக்கும் நபர் (அது ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும்) வீட்டிற்கு வருகையில் குழந் தைகள் அவரிடம் சரிவர பேசவில்லை என்றால், அவர் எதிரிலேயே கூப்பிட்டு திட்டாதீர்கள். யாருக்குத் தெரி யும்? நாம் பெரியவர்கள் என மதிப்பவர், அந்த குழந் தையை எந்த விதத்திலாவது மிதித்திருக்கலாம். நமக் கது தெரியாமல் இருந்திருக்கலாம்.

அப்படியே விட்டுவிட்டு அவர்கள் போனபிறகு நிதான மாக கோபம் கொள்ளாமல் காரணம் கேளுங்கள். சில குழந்தைகள் காரணம் சொல்லலாம். சில குழந்தைகள் பிடிக்கவில்லை என்று மட்டும் சொல்லலாம்.

நீங்கள் மதிப்பவர்களை அவர்களும் மதித்தாக வேண் டும் என திணிக்காதீர்கள். வந்தவர் உங்களிடம் காட் டும் முகம் வேறாக இருந்திருக்கலாம். குழந்தை பார்த்த முகம் வேறாக இருந்திருக்கலாம்.

அவர் மீது உங்களுக்கு நிஜமாகவே நல்ல அபிப்ராயம் இருந்தாலும், நன் மதிப்பிருந்தாலும் அவர்களை பிள் ளைகளிடம் திணிப்பதை விட்டு, அவர்களிடம் சொல் லுங்கள். அதுக்கு எதோ மூட் போலனு அவர்கள் கேட் டால்.

குழந்தைகளை எக்காரணம் கொண்டும் மற்றவர் முன் கூனிக்குறுகி நிற்க வைக்காதீர்கள்! அவர்களுக்கு உங் கள் மேல் இருக்கும் நம்பிக்கை மட்டுமல்ல, தன்னம்பிக் கையும் தளர்ந்துவிடும்.

நாம் சிந்திக்காமல் செயல்படும் பல விஷயங்களில் தான் பிள்ளைகளின் மனவளர்ச்சியே பாதிக்கிறதென்பதை மறக்க வேண்டாம்.

அத்தியாயம் - 32

# இப்போதைய தேவையும், எதிர்காலத்தின் மீதான நம்பிக்கையும்

இங்குக் குழந்தைகள் வளர்ப்பில் நாம் மேலும் மேலும் கற்றுத்தெளிய வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கி றது. பெற்றோர்களாக நாம் இவற்றை அறியாவிட்டால், நடைமுறை படுத்தாவிட்டால், நம் பிள்ளைகளுக்கு யார் தான் வழிகாட்டியாக இயலும்?

நாம் குற்றங்களை முற்றிலுமாக ஒழிக்காதவரை, அவற் றிலிருந்து நம்மைப் பாதுகாத்துக்கொள்ளும் வழிகளை ஏற்படுத்திக்கொள்ளுதல் வேண்டும். பெற்றோர்களும் வீட்டில் உள்ள மற்ற பெரியவர்களும், தத்தம் மகன் களை, வீட்டிலும், வெளியேயும் பெண்களை மதிக்கும் குணத்தை, வாழ்ந்துகாட்டியோ அல்லது அவர்களுக் குச் சொல்லியோ வளர்த்தல் வேண்டும். இது குறித்த விழிப்புணர்வைப் பெற்றோர்களிடையே ஏற்படுத்துதல் வேண்டும். பாலுறவு குறித்த ரகசியத்தன்மை அகற்றப் பட்டு, அது பெற்றோர்கள், தத்தம் குழந்தைகளுடன் மேற்கொள்ளும் ஆரோக்கியமான உரையாடல்களின் ஒரு பகுதியாக ஆதல் அவசியம். இவ்வழிமுறையே, பாலுறவு குறித்த கட்டுக்கதைகள் ஒழிக்கப்படவும், அவைகுறித்த பிள்ளைகளின் ஐயங்களைத் தீர்க்கவும் வாய்ப்பளிக்கும்.

பாலுறவு என்பது இப்போது மிகவும் சிக்கலான விஷ யமாகிவிட்டது. அது ஒவ்வொருடைய வாழ்க்கையி லும் அத்தியாவசியமான ஒன்றானதால், அது குறித்து,

ஆழமான ஆலோசனைகள் தேவை. இதை எளிதாக்க, இதைக்குறித்துப் பல்வேறு உரையாடல்களும், விவா தங்களும் தேவை. இல்லையெனில் இது மேலும் சிக்க லாகிவிடும்.

எழுத்தாளர் Nancy Friday, "The Secret Garden" என் னும் தன் நூலில், தன் ரசிகர்களிடமிருந்து பெற்ற, காமம் குறித்த கற்பனைகளைத் தொகுத்தளித்துள் ளார். அதற்குப் பதிலளித்த ஒரு பெண்மணியின் மட லின் ஒரு பாகத்தை இங்கே தருகிறேன்.

"உடலுறவின் போது, அதிக அளவில் மக்கள், தங் கள் எண்ணத்தாலும், மனங்களாலும், உடல்களாலும், இன்னும் வெளிப்படையாக இருந்தால், உலகம் இன் னும் நல்ல இடமாக மாறும் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன். மேற்கூறிய அனைத்துக் கருத்துகளுடன் உடன்பாடுடைய இணையர் ஒருவர் கிடைக்கப்பெற் றால், அதிகார மோகமும் வன்மைத்தனமும் உடைய வர்களாக மக்கள் இருப்பார்கள் என்று என்னால் நம்ப முடியவில்லை. குற்ற உணர்வுடன் காமத்தை அணுகுவ திலிருந்து வெளிவந்தால், அந்த தம்பதியர், மேலும் அதி கமாக இன்பத்தைப் பெறுவதற்காக நேரத்தைச் செல விடுவார்களேயன்றி, பழிவாங்குவதிலும், சண்டையிடுவ திலும் நேரத்தைச் செலவிடமாட்டார்கள்.

நல்ல உடலுறவு என்னையும் என் கணவரையும், கனிய வைக்கிறது. எந்த வழியைப் பின்பற்றினால்தான் என்ன? எவ்வழியிலாயினும், தாம்பத்திய வாழ்வில் இன்பத்தைப் பெறுவோர், வெறுப்பதற்கும், சண்டையிடுவதற்கும், திட் டமிட்டு வேறெவருடனாவது உறவு வைத்துக்கொள் வதற்கும் ஏன் நினைக்கப்போகிறார்கள்? பெரும்பாலும் அப்படி இருக்க மாட்டார் என்றே நான் நினைக்கிறேன்."

தற்போதைய, ஆணாதிக்க, பெண்ணைப் பொருளாக எண்ணும் சமுதாயத்தில், இத்தகைய ஒரு மாற்றம் நிக ழுமேயானால், உடலுறவு குறித்த பார்வையிலும், அணு குமுறையிலும், பெரிய அளவிலான நல்ல மாற்றங் களைக் காணலாம். இத்தகைய ஆபத்துகளிலிருந்து, காப்பாற்றிக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தங்கள் இல் லாத ஒரு நாள் வரலாம். அந்த நாளே, ஓர் ஆணும், பெண்ணும் தங்கள் தாம்பத்திய உறவை, மனரீதியாக வும், உடல்ரீதியாகவும் மகிழ்ச்சியுடன் மேற்கொள்ளும் நாளாகும். அந்த நாளே, நாம், ஆண்/பெண் என்ற உள ரீதியான அகங்காரம் இன்றி, ஆன்மத்தின் தூய இன் பத்தை நுகரும் நாளாகும்.

இதை நோக்கிய பயணத்தில் என்னாலான முதல் அடி யாகவே இந்தப் புத்தகத்தை உங்கள் முன் வைத்திருக் கிறேன்.

இந்தப் புத்தகத்தில் நான் கூறியுள்ளவை அனைத்தும், William Wordsworth கூறியது போன்று, என் "வலி மையான உணர்வுகளின் தன்னிச்சையான வெளிப் பாடு" ஆகும்.

இதில் உள்ள அத்தனை கருத்துகளும் அனைவருக் கும் ஏற்புடையதாக இல்லாமல் இருக்கலாம். ஏற்புடை யதை ஏற்றுக்கொள்ளுங்கள், அல்லாதனவற்றை இன் னும் ஆழமாகச் சிந்தித்துப் பாருங்கள். அப்படியும் ஏற்பு டையதாக இல்லை எனில், விவாதிப்போம், விளங்கிக் கொள்வோம். பேசாப்பொருளை பேசவேண்டிய கட்டா யத்தில் உள்ளோம் என்பதை யாராலும் மறுக்க இயலாது என்றே கொள்கிறேன்.

அனுபவமிக்க பயணத்தை உங்கள் வாழ்க்கை முழுதும் அடைய என் வாழ்த்துகள்!

‘கழிவறை இருக்கை’ புத்தகத்தை நீங்கள் தேர்ந்தெடுத்ததற்கு மீண்டும் நன்றி!

அன்புடன்,

லதா